# சங்க இலக்கியங்களால் அறியலாகும் நடைமுறை வாழ்க்கை

அழகப்பா பல்கலைக் கழக முனைவர் (பிஎச்.டி)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு

சு. இராசாராம்




தமிழ்த்துறை

அழகப்பா பல்கலைக் கழகம்

காரைக்குடி - 630 003.

1998

சு. இராசாராம்,
எம்.ஏ., எம்.பில்.,பி.எட்.,
விரிவுரையாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள்: 9.3.98

# ஆய்வாளர் உறுதிமொழி

"சங்க இலக்கியங்களால் அறியலாகும் நடைமுறை வாழ்க்கை" என்ற தலைப்பில் முனைவர் (பிஎச். டி) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கிறேன்.

ஆய்வாளர்

அ. விசுவநாதன்

உறுதிக் கையொப்பம் 9.3.98

நெறியாளர்,
முனைவர் அ. விசுவநாதன்,
பேராசிரியர் & தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி -630 003.

தமிழ்த்துறைத் தலைவர்
அழகப்பா பல்கலைக் கழகம்
காரைக்குடி-623 003.

முனைவர் அ. விசுவநாதன்,
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
பேராசிரியர் & தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 9.3.98

# நெறியாளர் சான்றிதழ்

"சங்க இலக்கியங்களால் அறியலாகும் நடைமுறை வாழ்க்கை" என்னும் தலைப்பில் திரு.சு. இராசாராம் அவர்கள் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு அழகப்பா பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கிறேன்.

(அ. விசுவநாதன்)
நெறியாளர்
தமிழ்த்துறைத் தலைவர்
அழகப்பா பல்கலைக் கழகம்
காரைக்குடி-623 003.

# நன்றியுரை

"சங்க இலக்கியங்களால் அறியலாகும் நடைமுறை வாழ்க்கை" என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்கு ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக் கழகத் துணைவேந்தர், ஆட்சிக்குழு உறுப்பினர்கள் ஆகியோருக்கு என் உளம் நிறைந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

ஆய்வு நெறியாளராக இருந்து ஆய்வுத் தொடக்கத்திலிருந்து இறுதி வரை எல்லா நிலைகளிலும் ஆய்வு முறைகளை நெறிப்படுத்தி இவ்வாய்வு சிறப்புற அமையப் பல்லாற்றானும் உறுதுணை புரிந்த நெறியாளரும், அழகப்பா பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவருமான பேராசிரியர் முனைவர் அ. விசுவநாதன் அவர்கட்கு இதயங்கனிந்த நன்றியைக் காணிக்கை ஆக்குகிறேன்.

ஆய்வு மேற்கொண்ட காலத்தில் ஆக்கமும் ஊக்கமும் தந்து உற்சாகப் படுத்திய அழகப்பா பல்கலைக் கழகத் தமிழ்த்துறை ஆசிரியப்பெருமக்கள் முனைவர் தே. சொக்கலிங்கம், முனைவர் இரா. பாலசுப்பிரமணியன், முனைவர் மு. பாண்டி, திருமதி சே. செந்தமிழ்ப்பாவை ஆகியோருக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வின் போது பல நிலைகளில் உடன் இருந்து உதவி புரிந்த என் இனிய நண்பர்கள் திரு. சா. இரமேசு, திரு. இரா. விமலன் ஆகியோருக்கு நன்றி.

ஆய்விற்கு வேண்டிய தரவுகளைச் சேகரிக்க உறுதுணை புரிந்த அழகப்பா பல்கலைக் கழக மைய நூலகருக்கும் அலுவலர்களுக்கும் என் உளம் கனிந்த நன்றி.

ஆய்வு சிறப்பாக நிறைவுற உறுதுணை புரிந்த என் பெற்றோருக்கும் சகோதர, சகோதரிகளுக்கும் என் நன்றி.

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகநா. | - | அகநானூறு |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கட். | - | கட்டுரை |
| கலித். | - | கலித்தொகை |
| கற். | - | கற்பியல் |
| குறிஞ்சிப். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| செய். | - | செய்யுளியல் |
| தொ. | - | தொகுதி |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்டினப். | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பரி. தி. | - | பரிபாடல் திரட்டு |
| புறத். | - | புறத்திணையியல் |
| புறநா. | - | புறநானூறு |
| பு. பெ. | - | புனைபெயர் |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |

| | | |
|---|---|---|
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மர. | - | மரபியல் |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| முருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| முல்லைப். | - | முல்லைப்பாட்டு |
| வி.உ. | - | விற்பனை உரிமை |
| வெ.ஆ. | - | வெளியீட்டு ஆசிரியர் |
| **P.** | **-** | **Page** |

ஆய்வுத்தலைப்பு

ஆய்வு நோக்கம்

முன் ஆய்வுகள்

ஆய்வு எல்லை

ஆய்வு மூலங்கள்

ஆய்வு அணுகுமுறை

ஆய்வுப் பகுப்பு

நடைமுறை வாழ்க்கை - விளக்கம்

நானில வாழ்க்கை

அரசர் வாழ்க்கை

கலைஞர் வாழ்க்கை

வினைஞர் வாழ்க்கை

முடிவுரை

# முன்னுரை

இலக்கியங்கள் வாழ்க்கையை விளக்குவன. ஒவ்வொரு இலக்கியப் படைப்பாளரும் தத்தம் வாழ்க்கையில் கண்டு, கேட்டு, உணர்ந்தவற்றை இலக்கியமாக்குகின்றனர். அவ்விலக்கியங்கள் அவ்வக்காலச் சமுதாயத்தை எடுத்துக்காட்டுவனவாக அமைந்துள்ளன. சங்க இலக்கியங்கள் பல்வேறு காலங்களில், தமிழகத்தின் பல்வேறு இடங்களில் வாழ்ந்த புலவர்களின் இலக்கியப்படைப்பு. அப்புலவர்கள் தாம் வாழ்ந்த சமுதாயத்தின் வாழ்க்கை நிகழ்வுகளைத் தத்தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். அந்நிகழ்வுகள் அவ்வச் சமுதாய மக்களின் அன்றாட வாழக்கைக் கூறுகளாக அமைந்து, அக்கால மக்களின் நடைமுறை வாழ்க்கையை உணர்த்துகின்றன.

## ஆய்வுத்தலைப்பு

"சங்க இலக்கியங்களால் அறியலாகும் நடைமுறை வாழ்க்கை" என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

சங்க கால மக்களின் அன்றாட நடைமுறை வாழ்க்கையை ஆய்வது ஆய்வு நோக்கமாகும்.

## முன் ஆய்வுகள்

சங்க காலச் சமுதாய வாழ்க்கையைப் பல நூல்கள் எடுத்துரைக்கின்றன. அவை அவர்களது அன்றாட வாழ்க்கையை விளக்குவனவாக இல்லை; பொதுவாக அமைந்துள்ளன. வன்மீகநாதனின், "பண்டைத் தமிழரின் நித்திய வாழ்க்கை (Every Day Life of the Ancient Tamils)"[1] என்னும் நூலின் பெயர் அன்றாட வாழ்க்கையை விளக்குவது போல் அமைந்திருப்பினும் நுவல் பொருள் பொதுவான வாழ்வியல் கூறுகளை விளக்குவதாகவே உள்ளது.

சி. இலக்குவனாரின், "இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் (சங்க காலம்)"[2], ந. சுப்பிரமணியனின், "சங்க கால வாழ்வியல்"[3], மா. இராசமாணிக்கனாரின், "பத்துப்பாட்டு

ஆராய்ச்சி"[4] என்பன சங்க கால வாழ்வியலை விளக்கும் ஆய்வு முன்னோடிகளாகத் திகழ்கின்றன.

பி.டி. சீனிவாச அய்யங்கார், " History of the Tamils"[5] என்னும் நூலில் "Life of the Tamil People" என்ற பகுதியில் மக்கள் வாழ்க்கையை நில அடிப்படையில் விளக்குவர்.

க. வித்தியானந்தன், "தமிழர் சால்பு (சங்க காலம்)"[6] என்னும் நூலில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை நில மக்களின் வாழ்க்கையைத் தொழில் அடிப்படையில் எடுத்துரைப்பர்.

இத்தகைய ஆய்வு நூல்கள் சங்க கால மக்களின் நடைமுறை வாழ்க்கைத் தொடர்பான ஒரு சில கூறுகளை மட்டுமே விளக்குகின்றன. அவை ஒரு நாளின் வைகறை முதல் யாமம் வரையிலான அன்றாட நடைமுறை வாழ்க்கையைத் தெளிவாக்குவனவாக இல்லை.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களாகிய எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் இவ்வாய்வுக்கு எல்லையாக அமைகின்றன.

## ஆய்வு மூலங்கள்

எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் இவ்வாய்வுக்கு மூலங்களாகக் கொள்ளப் பெறுகின்றன. சங்க இலக்கியங்கள் தொடர்பாக எழுதப்பட்டுள்ள திறனாய்வு நூல்கள், கருத்தரங்கக் கட்டுரைகள், ஆய்வேடுகள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாக விளங்குகின்றன.

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வு, சங்க கால மக்கள் நடைமுறை வாழ்க்கையைத் தொகுத்துப் பகுத்து விளக்கும் விளக்கமுறை ஆய்வாக அமைந்துள்ளது. இவ்வாய்வில் சமுதாயவியல் அணுகுமுறை, வரலாற்றியல் அணுகுமுறை ஆகியனவும் பின் பற்றப்பட்டுள்ளன.

## ஆய்வுப் பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது. அவையாவன,

முன்னுரை
1. நடைமுறை வாழ்க்கை - விளக்கம்
2. நானில வாழ்க்கை
3. அரசர் வாழ்க்கை
4. கலைஞர் வாழ்க்கை
5. வினைஞர் வாழ்க்கை
முடிவுரை

## இயல் விளக்கங்கள்

### நடைமுறை வாழ்க்கை - விளக்கம்

இவ்வியல், இலக்கியத்தை வரையறை செய்து வாழ்க்கையும் இலக்கியமும் ஒன்றோடொன்று கொண்டுள்ள தொடர்பை விளக்குகிறது. சங்க இலக்கியங்கள் வாழ்க்கையிலிருந்து முகிழ்த்திருக்கும் பாங்கினைத் தொல்காப்பியர் குறிப்பிடும் 'உலகியல் வழக்கு' கொண்டு எடுத்துரைக்கிறது. இவ்வுலகியல் வழக்கு நிகழ்வுகளே நடைமுறை வாழ்க்கை என்பதைக் கூறி அதனை வரையறை செய்கிறது. இந்நடைமுறை வாழ்க்கையை வேறுபடுத்தும் காரணிகளை விளக்குகிறது.

### நானில வாழ்க்கை

தமிழகத்தை நானிலங்களாகப் பகுப்பது பண்டை நெறி. இதனடிப்படையில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் நில மக்களின் நடைமுறை வாழ்க்கைக் கூறுகளை இவ்வியல் எடுத்துரைக்கிறது. தொல்காப்பியர் பாலைக்குத் தனி நிலம் கூறவில்லையாயினும், சங்க இலக்கியங்கள் பாலை நிலத்தையும் அங்கு வாழும் மக்கள் வாழ்க்கையையும் உணர்த்துகின்றன. இதனடிப்படையில் இவ்வியல் பாலை நில மக்களின் அன்றாட வாழ்க்கையையும் விளக்குகிறது. ஒவ்வொரு நிலத்திலும் வாழும் மக்களின் அன்றாட வாழ்க்கைக் கூறுகளை வைகறை முதல் யாமம் வரை நோக்குவதும் இதன் அடிப்படையாகும்.

முல்லை நிலத்தில் வாழும் ஆயர், குறிஞ்சி நிலத்தில் வாழும் குறவர், பாலை நிலத்தில் வாழும் எயினர், வேட்டுவர், மறவர், மழவர், மருத நிலத்தில் வாழும் உழவர், நெய்தல் நிலத்தில் வாழும் பரதவர், ஆகியோரின் நடைமுறை வாழ்க்கையை இவ்வியல் விளக்குகிறது. நானிலங்களுக்கும் பொருந்துவதாக உள்ள செல்வர், இல்லற மகளிர், கைம்மை மகளிர் ஆகியோர் நடைமுறை வாழ்க்கையைத் தெளிவாக எடுத்துரைக்கிறது.

### *அரசர் வாழ்க்கை*

சங்க காலத்தில் அரசர்கள் நாட்டை ஆண்டனர். அவர்கள் நெறிப்படி மக்கள் ஒழுகினர். இத்தகைய சிறந்த நிலையினராகிய அரசர்களின் நடைமுறை வாழ்க்கையை இவ்வியல் கூறுகிறது. அரசர்கள் காலையில் துயிலெழுதல், அவையத்திலிருந்து மக்கள் குறை தீர்த்தல், முறை வழங்கல், திறை பெறுதல், நாண்மகிழிருக்கையில் கலைஞர்களோடு மகிழ்தல் ஆகியவற்றை இவ்வியல் விளக்குகிறது. அரசர்கள் நாள்தோறும் இரவலர்களை விருந்தோம்பல், அவர்களுக்குப் பரிசில் வழங்கல் ஆகியனவற்றை எடுத்துரைக்கிறது. அரசியர் நடைமுறை வாழ்க்கையைக் கூறுகிறது.

### கலைஞர் வாழ்க்கை

சங்க காலத்தில் பாணர், கூத்தர், பொருநர், விறலி ஆகிய கலைஞர்கள் புரவலரைத் தேடிச் சென்று பாடி, ஆடிப் பரிசில் பெற்று வாழ்ந்துள்ளனர். இவர்களது நடைமுறை வாழ்க்கையை இவ்வியல் விளக்குகிறது.

### *வினைஞர் வாழ்க்கை*

சங்க கால மக்கள் நடைமுறை வாழ்க்கையைத் தொழிற் பிரிவுகள் அடிப்படையில் இவ்வியல் விளக்குகிறது. அக்காலத்தில் அந்தணர், பார்ப்பார், துறவியர், வணிகர், கைவினைஞர், நாழிகைக்கணக்கர், மருத்துவர், கட்டுவிச்சி, நீகான்,

காரோடன், கூவலர், ஊர்காப்பாளர், பெருங்குளக்காவலர், புலையர் ஆகியோர் வாழ்ந்துள்ளனர். இவர்களது அன்றாட வாழ்க்கை நிகழ்வுகளை இவ்வியல் விளக்குகிறது.

**முடிவுரை**

ஒவ்வொரு இயலும் உணர்த்தும் ஆய்வு முடிவுகள், முடிவுரையாகத் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலுக்குப் பின்னரும் அடிக்குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

இறுதியில் துணைநூற்பட்டியல் இடம் பெற்றுள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. கே.சி. வன்மீகநாதன், (1938), **பண்டைத் தமிழரின் நித்திய வாழ்க்கை**, தஞ்சாவூர், ஸ்ரீ சண்முக அச்சுக்கூடம்.

2. சி. இலக்குவனார், (1962), ***இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் (சங்க காலம்)***, புதுக்கோட்டை, வள்ளுவர் பதிப்பகம்.

3. ந. சுப்பிரமணியன், (1982), ***சங்க கால வாழ்வியல்***, சென்னை - 98, நியூ செஞ்சுரி புக் உறவுஸ் பிரைவேட் லிமிடெட்.

4. மா. இராசமாணிக்கனார், (1970), பத்துப்பாட்டு ஆராய்ச்சி, சென்னைப் பல்கலைக் கழகம்.

5. P.T. Srinivasa Iyengar, (1983), **History of the Tamils (From the earliest times to 600 A.D)**, New Delhi, Asian Educational Service.

6. சு. வித்தியானந்தன், (1954), ***தமிழர் சால்பு (சங்க காலம்)***, கண்டி, கல்உறின்னை தமிழ் மன்றம்.

இலக்கியம்

வாழ்க்கையும் இலக்கியமும்

சங்க இலக்கியமும் வாழ்க்கையும்

நாடக வழக்கு, உலகியல் வழக்கு

நடைமுறை வாழ்க்கை – விளக்கம்

வேறுபடுத்தும் காரணிகள்

நிலப்பாகுபாடு

குலப்பாகுபாடு

பொருளாதார நிலை

தொழிற் பிரிவுகள்

நிறைவுரை

# இயல் - 1

## நடைமுறை வாழ்க்கை - விளக்கம்

உலக மொழிகள் அனைத்திலும் இலக்கியங்கள் தோன்றிப் பெருகுதல் இயல்பு. அவை இனம், மொழி, நாடு கடந்து, கருத்தாலும், உணர்வாலும், கற்பனையாலும் இன்ன பிற கூறுகளாலும் ஒன்றுபட்டுப் படிப்பவர்களை மகிழ்விப்பன. அவ்விலக்கியத்தின் பொது இயல்பை அறிஞர் பல்வேறு விளக்கங்கள் மூலம் வரையறை செய்வர்.

### இலக்கியம்

எமர்சன், "இலக்கியமாவது சிறந்த கருத்துகள் அடங்கிய நூலாகும்"[1] என்பர். ஸ்டோபோர்டு புரூக், "படிப்போர்க்கு இன்பம் தரும் வகையில் நுண்ணறிவு வாய்ந்த அறிஞர்கள் தம் உணர்ச்சிகளையும் கருத்துகளையும் முறைப்படுத்தி எழுதுவது இலக்கியமாகும்"[2] என்பர்.

"தன்கண் அமைந்த நுவல்பொருளும் அதை விளக்கும் முறையும் பொதுவாக மக்களைக் கவரும் வகையில் அமைந்து வடிவம் இன்றியமையாததாகி அதன் வாயிலாக இன்பம் நல்குவது இலக்கியமாகும்"[3] என்பது டபிள்யூ.எச்.அட்சன் தரும் விளக்கம்.

கலைக்களஞ்சியம்,"ஒருவன் தன்னுடைய அனுபவத்தைக் கற்பனை மூலம் எண்ணிப் பார்த்து அதைச் சொற்கள் மூலம் செய்யுள் நடையினாலோ உரைநடையினாலோ பிறர் உள்ளத்திலும் எழுமாறு அழகுபடச் செய்வதே இலக்கியமாகும்"[4] என எடுத்துரைக்கும்.

ச.வே. சுப்பிரமணியன், "இலக்கு+ இயம் எனப்பகுத்து, இலக்கு என்பதற்கு விளக்கம், நோக்கம், கொள்கை, குறிக்கோள் எனப் பொருள் கொண்டு இயம் என்பதனை ஒலிப்பது, கூறுவது, வெளிப்படுத்துவது எனப் பொருள் கொள்ளின் நம் குறிக்கோள் களையும், கொள்கைகளையும் இயம்புவது இலக்கியம் எனக் கொள்ளலாம்"[5] என்பர்.

திறனாய்வாளர் பலரும் பலவிதமான கருத்துகளைக்

கூறினும் இவை எவையும் இலக்கியத்தின் தன்மையை முழுமையாக உணர்த்த இயலாது என்பது அறிஞர் துணிபு.

வின்செஸ்டர்,"அழகு,கவிதை, கற்பனை, குறிக்கோளியல் போன்றவற்றை எங்ஙனம் துல்லியமாக விளக்க இயலாதோ அவ்வாறே இலக்கியத்தையும் விளக்க இயலாது"[6] என்பர்.

"திறனாய்வாளர்கள் தரும் எவ்விளக்கமும் இலக்கியத்தின் முழுத்தன்மையை உணர்த்துவதாக இல்லை; உணர்த்தவும் இயலாது"[7] என்னும் தா. ஏ. ஞானமூர்த்தி கருத்தும் இதனை வலியுறுத்தும்.

### *வாழ்க்கையும் இலக்கியமும்*

வாழ்க்கையிலிருந்து தோன்றுவது இலக்கியமாகும். வாழ்க்கையில் நிகழும் நிகழ்வுகள், எண்ணங்கள், செயற்பாடுகள், நினைவுகள், கனவுகள் அனைத்தும் இலக்கியத்துக்குப் பாடுபொருளாக அமையும்.

"இலக்கியம் வாழ்க்கையோடு நெருங்கிய ஒன்றாக இருக்கிறது. அனுபவங்களை விளக்கிக் காட்டும் வழியாகவும் தனி மனித நலம் என்னும் எல்லையையும் கடந்து சக மனிதர்களோடு நம் தொடர்பினை விரிவு படுத்திக் கொள்ளும் வழியாகவும் இருக்கிறது"[8] என்பர் ஜியார்ஜ் எலியட்.

சு. பாலச்சந்திரன், "இலக்கியம் என்பது மொழி என்னும் கருவி வாயிலாக அமையும் வாழ்க்கை வெளியீடு ஆகும்"[9] என்பர். மேலும், "இலக்கியமும் வாழ்க்கையும் இலக்கியப் படைப்புக்குரிய நிலைக்களங்கள் எனலாம். வாழ்க்கை இன்றேல் இலக்கியத் தோற்றம் இல்லை"[10] என அறுதியிட்டுக் கூறுவர்.

"இலக்கியம் உண்மையும் அழகும் நிரம்பிய சொற்களால் வாழ்க்கையைப் புலப்படுத்துகிறது"[11] என்பர் எஸ். வையாபுரிப் பிள்ளை.

நா. செயராமன், "இலக்கியம் என்பது ஒரு கலை வடிவம். மொழியைக் கருவியாகக் கொண்டு வாழ்க்கையை மூலப்பொருளாகக் கொண்டு எழுதுவதே இலக்கியம் ஆகும்"[12] என்பர்.

அ.ச. ஞானசம்பந்தன், "வாழ்ந்து காட்டும் வாழ்க்கையைச் சொற்களால் கூறுவதே இலக்கியம்"[13] என்பர்.

"இலக்கியம் என்பது மக்களின் வாழ்க்கையைக் கலை வடிவத்தில் பிரதிபலித்துக் காட்டுகிறது"[14] என்பர் ந. பிச்சமுத்து.

ச.வே. சுப்பிரமணியன், "மனித வாழ்வோடு தொடர்புற்று அமைவதாலேயே இலக்கியம் மனத்தைக் கவருகின்றது. அத்தகைய இலக்கியத்தைப் படிக்கும்போது நாம் வாழ்வோடு நெருங்கிய புதிய பேருறவு கொள்ளுகின்றோம். மனித வாழ்வில் கண்டதும், அனுபவித்ததும், நினைத்ததும், உணர்ந்ததும் ஆகியன இதில் வெளிப்படுவதால் இது வாழ்வு பற்றிய சொல்லுருவமாக அமைகின்றது"[15] என்பர்.

அறிஞர்களின் இத்தகைய விளக்கங்கள் யாவும் வாழ்க்கைக்கும் இலக்கியத்துக்கும் உள்ள நெருங்கிய பிணைப்பை விளக்கும்.

பி. கோதண்டராமன், "இலக்கியத்திற்கு விஷயம் தருவது வாழ்க்கை. வாழ்க்கை இலக்கியத்தின் வேர். வேரின்றி மரம் பிழையாதது போல வாழ்க்கையின் அடிப்படையின்றி இலக்கியம் சீவ இலக்கியமாகத் திகழ முடியாது"[16] என்று கூறுவது இக்கருத்துக்கு முத்தாய்ப்பாக அமையும்.

இவற்றால் இலக்கியங்கள் அனைத்தும் வாழ்க்கையைக் களமாகக் கொண்டு எழும் என்பது தெளிவுறும்.

படைப்பாளர் தம் வாழ்க்கையில் கண்டு, கேட்டு, அனுபவித்து உணர்ந்தவற்றை இலக்கியக் கருவாகக் கொள்வர் என்பதும் புலனாகும்.

### சங்க இலக்கியமும் வாழ்க்கையும்

சங்க இலக்கியங்கள் பல்வேறு கால கட்டங்களில் பல்வேறு இடங்களில் வாழ்ந்த புலவர்களின் எண்ணச் சிதறல்கள் ஆகும். இவற்றில் புலவர்கள் மக்கள் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்வுகளைத் தனித்தனிப் பாடல்களாகப் பாடியுள்ளனர். இவை ஓர் ஒழுங்குபட்ட அமைப்பையும் தனிப்பட்ட கோட்பாட்டையும் கொண்டன.

சங்க இலக்கியங்களைப் பாடுபொருள் அடிப்படையில்

அகம், புறம் என்ற இருபெரும் பிரிவுக்குள் அடக்குவர்.

அகப்பாடல்கள் தன்னேரில்லாத் தலைவன், தலைவியரின் இல்லற வாழ்வை எடுத்துரைப்பன. புறப்பாடல்கள் அரசர் முதலான புரவலரின் வீரம், கொடை, புகழ், வெற்றி முதலியவற்றைப் பாடுவன.

இவற்றுள் காதல், வீரம் ஆகிய இரண்டும் தலைமை பெற்ற பாடுபொருளாக இருப்பினும் பிற வாழ்வியல் கூறுகளும் விளக்கமாகவும் நுணுக்கமாகவும் பாடப்பெறும்.

"இலக்கியம் மனித வாழ்வோடு பின்னிப் பிணைதல் வேண்டும்; மனிதப் பண்பைச் சித்திரிக்க வேண்டும்; மானுடம் பாட வேண்டும். இங்ஙனம் இலக்கியம் மனித வாழ்வோடு ஒருங் கிணைவதை மனிதத்துவப்படுத்துதல் (Humanization of Literature) என்பர் இன்றை ஒப்பீட்டறிஞர். சங்க இலக்கியம் மனித வாழ்வில் நிகழும் சூழல்களையும் மனவுணர்வுகளையும் உரிப்பொருளாக்கிப் பாடிய முறை தலை சிறந்த மனிதத்துவப்படுத்தும் முறையாகும்"[17] என இராம. பெரியகருப்பன் அவர்கள் சங்க இலக்கியங்கள் மனித வாழ்வியலைச் சிறப்பாகப் பாடுவதை விளக்குவர்.

ஓர் இலக்கியத்தில் உணர்ச்சி, கற்பனை, வடிவம் போன்ற பிற கூறுகள் சிறப்பாக இருப்பினும் பாடு பொருளும் பொருத்தமாக இருக்க வேண்டும். அப்பாடுபொருள் மக்கள் வாழ்க்கையிலிருந்து எழ வேண்டும். அவ்வாறு மனித வாழ்க்கையை உணர்ச்சியோடு பாடும்பொழுது அவ்விலக்கியம் காலவெள்ளத்தில் அழியாது நிலைத்து நிற்கும் திறன் பெறும்.

சங்க இலக்கியங்கள் மக்கள் வாழ்க்கையைத் தன்னுணர்ச்சிப் பாடல்களாகப் பாடுவதால் இன்றும் நிலைத்து நிற்கின்றன. அவை அக்கால மக்களின் நடைமுறை வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

## நாடக வழக்கு, உலகியல் வழக்கு

தொல்காப்பியர் அக இலக்கியங்களும் புற இலக்கியங்களும் பாடுதற்குரிய இலக்கணங்களை வரையறை செய்வர். அவை அகப்பாடல்களுக்கும் புறப்பாடல்களுக்கும் பாடுபொருள் வாழ்க்கை நிகழ்வுகளே என்பதைத் தெளிவுறுத்தும்.

அகப்பாடல்கள் பாடவேண்டிய அமைப்பை,

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கு"[18]

எனத் தொல்காப்பியர் வரையறை செய்வர். சங்க இலக்கிய அகப்பாடல்கள் ஒவ்வொன்றுக்கும் இது அடிப்படையாகும். இந்நூற்பாவின் ஒவ்வொரு சொல்லையும் ஆழ்ந்து நோக்கும்பொழுது அகப்பாடல்கள் நடைமுறை வாழ்க்கையைப் பாடுவன என்பது தெளிவாகும். நாடக வழக்கு, உலகியல் வழக்கு ஆகிய இரண்டனுக்கும் உரையாசிரியர்களும் அறிஞர்களும் தரும் விளக்கங்கள் இதனை மெய்ப்பிக்கும்.

இளம்பூரணர், "நாடக வழக்காவது சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல். உலகியல் வழக்காவது உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்து வருவது"[19] என்பர்.

நச்சினார்க்கினியர், "புனைந்துரை வகையானும் உலக வழக்கத்தானும் புலவரால் பாடுதற்கமைந்த புலவராற்று வழக்கம்"[20] என்பர். மேலும், "கைக்கிளையும் பெருந்திணையும் பெரும்பான்மையும் உலகியல் பற்றிய, புலனெறி வழக்காய்ச் சிறுபான்மை வரும்"[21] என அவர் கூறும் விளக்கமும் நோக்கத்தக்கதாகும்.

சோமசுந்தரபாரதியார், "புலவராற் பாடப்பெற்ற அகத்துறை மரபுகள் உலகியலைத் தழுவி அமைவதே இயல் நெறியின் இன்றியமையாக் குறிக்கோளும் பயனுமாமென்பதை இச்சூத்திரம் வற்புறுத்துகிறது"[22] என்பர்.

புலவர் குழந்தை, "மக்கள் வாழ்க்கையில் இயல்பாகக் காணப்படும் ஒழுக்கம் உலக வழக்கம் எனப்படும். அவ்வுலக வழக்கங்களிற் சிறந்தனவாயுள்ளவற்றை அறிஞர்கள் ஒன்றாகத் தொகுத்துப் பிற்கால உலக வழக்கம் திருத்தமாக நடைபெறுதற் பொருட்டுப் பாடல்களாகப் பாடி வைப்பர். அப்பாடல்களாகிய நூல் வழக்கம் நாடக வழக்கம் எனப்படும்"[23] என விளக்குவர்.

"பல்வேறிடங்களிலும் பல்வேறு காலத்தும்

நிகழ்வனவற்றையெல்லாம் ஓரிடத்து ஒரு காலத்துத் தொகுத்துத் தொடர்புபட்ட கதையாக நிகழ்த்திக் காட்டுதல் நாடகத்தின் இயல்பாகும். இதன் கண் புனைந்து காட்டப்படுவனவும் நிகழாதன அல்ல, உலகியலில் நிகழும் உண்மை நிகழ்ச்சியே என்பது நாடகம் என்னாது நாடக வழக்கும் என்பதனாற் புலனாம்"[24] என்பர் க. வெள்ளைவாரணனார்.

இவ்வாறு நாடக வழக்கு, உலகியல் வழக்கு என்பதற்கு உரையாசிரியர்கள் தரும் விளக்கங்கள் அக இலக்கியத்தின் பாடுபொருள் உலகியல் வழக்கு என்பதை நன்குணர்த்தும். சங்கப் புலவர்கள் தொல்காப்பியத்தை அடிப்படையாகக் கொண்டு பாடுவதால் அப்பாடல்களில் உலகியல் வழக்காகிய நடைமுறை வாழ்க்கை இயல்பாக இடம்பெறும். அகப்பாடல்களில் காணப்பெறும் நாடக வழக்குப் புனைந்துரைகளைக் களைந்து உலகியல் வழக்கினை மட்டும் காணும் பொழுது அக்கால மக்களின் நடைமுறை வாழ்க்கை தெள்ளிதின் புலனாகும்.

நாடக வழக்கினும் என்னும் நூற்பா உரையில் இளம்பூரணர், "புறப்பொருள் உலகியல்பானன்றி வாராமையின் அது நாடக வழக்கம் அன்றாயிற்று"[25] என்பர். இதில் புறப்பாடல்கள் உலகில் நிகழக் கூடியவற்றையே பாடுபொருளாகக் கொண்டு வரும் என்பதை நன்கு உணர்த்துவர்.

இவற்றால் சங்க இலக்கியங்களான அகப்பாடல்களும் புறப்பாடல்களும் உலகியல் வழக்கினை அடிப்படையாகக் கொண்டு எழுந்தவை என்பது தெளிவாகும்.

## நடைமுறை வாழ்க்கை-விளக்கம்

மக்கள் வாழ்வில் அன்றாடம் நிகழக் கூடிய வாழ்க்கை நிகழ்வுகள் நடைமுறை வாழ்க்கை எனப்பெறும். இதனை அன்றாட வாழ்க்கை (Day-to-day Life), தினசரி வாழ்க்கை (Daily Life), இயல்பு வாழ்க்கை (Ordinary Life) என்ற சொற்களால் கூறுதலும் பொருந்தும்.

மக்கள் இயல்பாக நாள்தோறும் ஒழுகி வரும் ஒழுகலாறுகள் நடைமுறை வாழ்க்கையில் அடங்கும். இது ஒரு மனிதன் காலையில் துயில் எழுவது முதல் இரவில் துயிலச் செல்வது வரையான வாழ்க்கை நிகழ்வுகள் தொடர்ந்து எவ்வாறு

நிகழும் என்பதைக் குறிப்பதாகும். இதில் அவனது உணவுப் பழக்கவழக்கங்கள், தொழில் சார்ந்த நிகழ்வுகள், விருந்தோம்பல், பொழுதுபோக்கு முதலான கூறுகள் பலவும் அடங்கும்.

ஒவ்வொரு மனிதனின் சமுதாய நிலைக்கும் அவனது பொருளாதார ஏற்றத்தாழ்வுகளுக்கும் ஏற்ப இவ்வாழ்க்கைக் கூறுகள் அமையும்.

நடைமுறை வாழ்க்கையைத் தனிமனித நடைமுறை, சமுதாய நடைமுறை என இரண்டாகப் பகுத்தல் பொருந்தும். தனிமனித நடைமுறை என்பது மக்கள் அனைவரிடமும் பொதுவாகக் காணப்பெறாது குறிப்பிட்ட ஒருவரிடம் மட்டும் காணப்பெறுவதாகும். சமுதாய நடைமுறை என்பது இனங்காணக் கூடிய மனிதக் குழுக்களிடையே காணப்பெறும் பொதுத் தன்மைகளைக் குறிக்கும். பெரும்பாலும் தனி மனித நடைமுறை ஏதாவது ஒரு சமுதாய நடைமுறைக்குள் அடங்கிவிடும்.

### வேறுபடுத்தும் காரணிகள்

ஒவ்வொரு நாட்டிலும் மக்கள் நடைமுறை வாழ்க்கை காலம், இடம், சூழலுக்கேற்ப அமையும். அம்மக்களின் பண்பாடு, நம்பிக்கை, பழக்கவழக்கம் ஆகியவற்றுக்கேற்பவும் இவ்வாழ்க்கை முறை மாறுபடும்.

சங்ககாலத் தமிழகத்தின் பல்வேறு நில அமைப்புகள், அங்கு வாழும் மக்கள் இயல்பு, பொருளாதார நிலை, தொழில் ஆகியவை மக்களின் நடைமுறை வாழ்க்கையை வேறுபடுத்தும் காரணிகளாக அமையும்.

### நிலப் பாகுபாடு

சங்க கால மக்களின் நடைமுறை வாழ்க்கையை வேறுபடுத்தும் காரணிகளுள் முதன்மையானது நிலப் பின்னணி ஆகும். சங்க காலத் தமிழகத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நானிலங்களாகப் பகுப்பர். பாலை எனத் தனி நிலம் இல்லை. முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரியும் பொழுது பாலை எனப் பெயர் பெறும்.

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி ; காடும்

காடு சார்ந்த இடமும் முல்லை ; வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் ; கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் எனப் பெறும்.

குறிஞ்சிக்குப் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் முல்லைக்கு இருத்தலும் இருத்தல் நிமித்தமும் மருதத்துக்கு ஊடலும் ஊடல் நிமித்தமும் நெய்தலுக்கு இரங்கலும் இரங்கல் நிமித்தமும் பாலைக்குப் பிரிதலும் பிரிதல் நிமித்தமும் என ஒழுக்கங்கள் வரையறுக்கப்பட்டுள.

புலவர்கள் ஒழுக்கங்களைப் பாடும்பொழுது அவ்வவற்றிற்குரிய நிலங்களைப் பாடுவர். அப்பொழுது அவ்வந் நிலங்களுக்குரிய மக்கள் நடைமுறை வாழ்க்கையைப் பாடுவது இன்றியமையாததாகும்.

ஒவ்வொரு திணைக்கும் முதற் பொருளாக நிலத்தைப் பகுப்பது போலப் பொழுதுகளையும் பகுப்பர். பொழுதுகளைப் பெரும்பொழுது, சிறுபொழுது என இரு வகைப்படுத்துவர். ஓர் ஆண்டை அறு கூறாக்கிப் பெரும் பொழுதுகளாகவும், ஒரு நாளை அறு கூறாக்கிச் சிறு பொழுதுகளாகவும் கூறுவர்.

கார்காலமும் மாலையும் முல்லைத் திணைக்குரிய பொழுதுகளாகும்.[26] ஆவணி, புரட்டாசி கார் காலம் எனப் பெறும். இராப் பொழுதின் முற்கூறு மாலைப் பொழுதாகும்.

கூதிர் காலமும் யாமமும் குறிஞ்சித் திணைக்குரியன.[27] ஐப்பசி, கார்த்திகை கூதிர் காலமாகும். இராப்பொழுதின் நடுக்கூறு யாமம் எனப்படும்.முன்பனிக் காலமாகிய மார்கழி, தை ஆகிய இரண்டையும் இத்திணைக்குரியதாக வகுத்துரைப்பர்.[28] "கூதிர் காலத்தைவிட இது அத்துணை சிறப்பிலவாதலால் அதனொடு சேர்த்துக் கூறாது தனித்துக் கூறியுள்ளார்."[29] என்பர் இளம்பூரணர்.

மருதத் திணைக்குரிய பெரும் பொழுதைத் தொல்காப்பியர் வரைந்து கூறவில்லை. வைகறை, விடியல் ஆகிய இரண்டையும் இதற்குரிய சிறு பொழுதுகளாக வகுப்பர்.[30] வைகறை என்பது இராப் பொழுதின் பிற்கூறு ; விடியல் என்பது பகற் பொழுதின் முற்கூறு ஆகும்.

நெய்தல் திணைக்குரிய பெரும்பொழுதையும் தொல்காப்பியர் வரையறுத்துக் கூறவில்லை. எற்பாடு என்றும்

சிறுபொழுதை இத்திணைக்குரியதாக வரையறுப்பர்.[31] எற்பாடாவது பகற்பொழுதின் பிற்கூறாகும்.

பாலைத் திணைக்கு நிலத்தை வரையறுக்காத தொல்காப்பியர், பொழுதுகளை,

"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு

முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"[32]

என்பர். இளவேனில், முதுவேனில் என்னும் இருவகைப் பருவமும் இவ்வொழுக்கத்துக்குரியனவாகும். சித்திரை, வைகாசி இரண்டும் இளவேனிலாகும். ஆனி, ஆடி இரண்டும் முதுவேனிலாகும். நண்பகலாவது பகற்பொழுதின் நடுக்கூறு என்பர். பின்பனிக் காலத்தையும் பாலைத்திணை ஒழுக்கத்திற்குரிய பெரும்பொழுதாக வரையறுப்பர்.[33] மாசி, பங்குனி இரண்டும் பின்பனிக் காலமாகும்.

எல்லா ஒழுக்கங்களுக்கும் எல்லா நிலங்களும் பொழுதுகளும் உரியனவாயினும் சிறப்பு நோக்கித் தொல்காப்பியர் இவ்வாறு தனித்தனியாக வரையறுப்பர். இவ்வாறு பாடுதலால் பாடல் கருத்துச் சிறக்கும். இதனை இளம்பூரணர், "இவ்வறுவகைப் பருவமும் அறுவகைப் பொழுதும் இவ்வைந்திணைக்கு உரியவாறு என்னையெனின் சிறப்பு நோக்கி என்க"[34] என விளக்குவர்.

அக ஒழுக்கங்களைப் பாடும்பொழுது அவ்வத் திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள்களைப் கருத்தில் கொண்டு பாட வேண்டும் என்பது தொல்காப்பியர் கால இலக்கிய நெறியாகும். அதன்படிக் குறிஞ்சித் திணைக்குரிய ஒழுக்கத்தைப் பாடும்பொழுது மலையும் மலைசார்ந்த நிலமும், குறவரின் கூதிர் காலத்து யாம வாழ்க்கையும் சிறப்பாக இடம்பெறும். முல்லை ஒழுக்கத்தைப் பாடும் பொழுது காடும் காடு சார்ந்த நிலமும், ஆயரின் கார்காலத்து மாலை வாழ்க்கையும் சிறப்பாகப் பாடப்பெறும்.

இவ்வாறு ஒவ்வொரு திணைப்பாடல்களைப் பாடும்பொழுதும் அவ்வவ்வொழுக்கத்திற்குரிய முதல், கரு, உரிப் பொருள்களின் தாக்கம் அமைவது இயல்பாகும்.

"சூழ்நிலைக்கேற்ப மக்கள் வாழ்வு அமைதல் இயல்பாதலின் திணைகளுக்கேற்ப மக்கள் வாழ்வு முறைகளிலும்

மாற்றங்கள் இருந்தன"[35] என்னும் சி. இலக்குவனார் கருத்து இதனை வலியுறுத்தும்.

இவற்றால் நிலப் பின்னணி மக்கள் நடைமுறை வாழ்க்கையை வேறுபடுத்தும் காரணிகளுள் தலைமையாகத் திகழ்வது தெளிவாகும்.

## குலப்பாகுபாடு

தொல்காப்பியர் காலத்தில் நால்வகை வருண வேறுபாடுகள் இருந்தமையை நூற்பாக்கள் எடுத்துரைக்கும். வாகைத் திணையின் பாகுபாட்டை விளக்கும் தொல்காப்பியர்,

"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்"[36]

என்பர். இதில் பார்ப்பனரையும் அரசரையும் வெளிப்படையாகக் கூறி, வணிகரையும் வேளாளரையும் 'ஏனோர்' எனப் பொதுவாகச் சுட்டுவர். தொல்காப்பியர் அறுவகை, ஐவகை மரபு, இருமூன்று மரபு எனத் தொகுத்துக் கூறுவதை இளம்பூரணர் விரிவாக விளக்குவர்.

இளம்பூரணர் அந்தணருக்குரியனவாக ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பனவற்றையும், அரசர்க்குரியனவாக ஓதல், வேட்டல், ஈதல், படைவழங்குதல், குடியோம்புதல் என்பனவற்றையும் குறிப்பிடுவர். வணிகருக் குரியனவாக ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வாணிகம், நிரையோம்பல் என்பனவற்றையும் வேளாண் மாந்தருக்குரியனவாக உழவு, உழவொழிந்த தொழில், விருந்தோம்பல், பகடு புறந்தருதல், வழிபாடு, வேதம் ஒழிந்த கல்வி என்பனவற்றையும் வரையறுப்பர்.[37]

தொல்காப்பியர் கால மக்கள், குலத்திற்குத் தக ஒழுகியதை இந்நூற்பா தெளிவாக உணர்த்தும். இச்சமுதாய ஒழுங்கு மக்கள் நடைமுறை வாழ்க்கையை வேறுபடுத்தும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## பொருளாதார நிலை

ஒவ்வொருவர் வாழ்க்கையும் பொருளாதார நிலையை

அடிப்படையாகக் கொண்டு அமையும். சங்ககால மக்கள் வாழ்வில் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் நிறைந்திருந்தமையைச் சங்க இலக்கியங்கள் நன்குணர்த்தும்.

சங்ககாலச் சமுதாயம் அரசரைத் தலைமையாகக் கொண்டது. இவர்கள் மக்களிடமிருந்து வரிப் பொருள்களையும் தமக்கு அடங்கிய ஆட்சியாளர்களிடமிருந்து திறைப் பொருள்களையும் பெற்றுச் செல்வச் செழிப்போடு திகழ்ந்துள்ளனர். அதனால் அரசர் நடைமுறை வாழ்க்கை தனித்துக் காணக்கூடியதாகும்.

பொருளாதார நிலையில் மிக உயர்ந்த செல்வர் வாழ்க்கையும் தனித்து அமையும். இவர்கள் தத்தம் வசதிக்கேற்பத் தொழில், உணவுப் பழக்கங்கள், பொழுது போக்குகள் ஆகியவற்றை அமைத்துக் கொண்டுள்ளனர்.

பொருளாதார நிலையில் மிக உயர்ந்தோ அல்லது மிகத் தாழ்ந்தோ இல்லாது நடுத்தர வாழ்க்கை கொண்ட மக்களையும் சங்க இலக்கியங்கள் சித்திரிக்கும். இவர்கள் பொருளாதார நிலைக்கேற்ப நடைமுறை வாழ்க்கை அமையும். உதாரணமாக, குறவர், ஆயர், உழவர், பரதவர் ஆகிய மக்கள் இத்தகைய நடுத்தர வாழ்க்கையினர் ஆவர்.

பொருளாதார நிலையில் மிகவும் தாழ்ந்து ஒரு வேளை உணவுக்கும் திண்டாடக் கூடிய வறியவர்களையும் சங்க இலக்கியங்கள் இனங்காட்டும். குறிப்பாகக் கலைஞர் பெரிதும் வறுமையில் உழல்வோராக உளர். இவர்களுள் பாணர், கூத்தர், பொருநர், கிணைஞர் போன்றோர் வறுமைத் துன்பம் மிகுதியும் கொண்டோராவர். இவ்வறுமை இவர்கள் வாழ்க்கை முறைகளை மாற்றுவதாக உள்ளது.

கலைஞர் தனித்து வாழ இயலாது அரசரையும் புரவலரையும் நம்பி ஊர் தோறும் நாடுதோறும் சென்று பாடி, ஆடிப் பொருள் பெற்று வாழும் வாழ்க்கை உடையவர்களாக உளர்.

இவற்றால் பொருளாதார நிலை ஒவ்வொருவர் நடைமுறை வாழ்க்கையையும் அமைக்கும் என்பது விளங்கும்.

இப்பொருளாதாரச் சமச்சீரின்மை சங்ககால மக்கள் நடைமுறை வாழ்க்கையை வேறுபடுத்தும் காரணியாகத் திகழ்வதும் தெளிவாகும்.

## தொழிற்பிரிவுகள்

ஒவ்வொருவர் வாழ்க்கைக்கும் பொருள் அடிப்படையாகும். அப்பொருளை ஈட்டுவதற்கு ஏதாவது ஒரு தொழிலைச் செய்தல் வேண்டும். ஒருவர் ஒரு தொழிலைத் தேர்ந்து அதில் ஈடுபடும் பொழுது அத்தொழிலின் இயல்பு அவரது வாழ்க்கையிலும் எதிரொலிக்கும். அவர் செய்யும் தொழிலுக்கேற்ப நடைமுறை வாழ்க்கை அமையும்.

சங்க காலச் சமுதாயத்தில் பலதரப்பட்ட தொழில் பிரிவினர் உளர். அந்தணர், பார்ப்பார், துறவியர், வணிகர், உமணர், தச்சர், கொல்லர், கம்மியர், நெசவாளர், குயவர், அறிவர், நாழிகைக் கணக்கர், மருத்துவர், கட்டுவிச்சி, நீகான் (மாலுமி), காரோடன், கூவலர், ஊர்காப்பாளர், பெருங்குளக்காவலர், புலையர் ஆகியோரைச் சங்க இலக்கியங்கள் இனங்காட்டும். இவர்கள் தொழிலின் தன்மைக்கேற்ப நடைமுறை வாழ்க்கை வேறுபடும்.

இவற்றால் தொழிற்பிரிவுகள் சங்ககால மக்கள் நடைமுறை வாழ்க்கையை வேறுபடுத்தும் காரணியாவது தெளிவாகும்.

## நிறைவுரை

இலக்கியம் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டது. மக்கள் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் இலக்கியங்களே கால வெள்ளத்தில் அழியாது நிலைத்து நிற்கும். சங்க இலக்கியங்கள் அக்கால மக்கள் நடைமுறை வாழ்க்கையைப் பாடுவதால் இன்றும் நிலைத்து நிற்கின்றன.

தொல்காப்பியம் குறிப்பிடும் 'உலக வழக்கு' அகப்பாடல்களுக்கு நடைமுறை வாழ்க்கை அடிப்படை என்பதைத் தெளிவுறுத்தும். புறப்பாடல்கள் வாழ்க்கையில் நிகழும் உண்மை நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டே அமையும்.

நடைமுறை வாழ்க்கை என்பது அன்றாட வாழ்க்கையாகும். இது வைகறை முதல் யாமம் வரையான வாழ்க்கை நிகழ்வுகளைக் குறிக்கும்.

சங்க காலச் சமுதாயத்தில் நிலப்பாகுபாடு, குலப்பாகுபாடு, பொருளாதார நிலை, தொழிற்பிரிவுகள் என்பன நடைமுறை வாழ்க்கையை வேறுபடுத்தும் காரணிகளாகும்.

## அடிக்குறிப்புகள்

1. தா. ஏ. ஞானமூர்த்தி, (1990), **இலக்கியத் திறனாய்வியல்**, மூன்றாம் பதிப்பு, சென்னை - 1, ஐந்திணைப்பதிப்பகம் ப. 47. Quoted by C. T.Winchester, Some Principles of Literary Criticism, 1950, p.35.
2. மேலது, ப. 47.
3. மேலது, ப. 47.,W.H. Hudson, An Introduction to the Study of Literature, 1957, P.10.
4. கலைக்களஞ்சியம் தொகுதி - 2, (1955), சென்னை, தமிழ்வளர்ச்சிக் கழகம், ப. 107.
5. ச. வே. சுப்பிரமணியன், (1975), **தொல்காப்பியம்** (கட்.), **தமிழ் இலக்கியக்கொள்கை-ஓர் அறிமுகம் தொகுதி** - 1, சென்னை, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், ப. 4.
6. தா. ஏ. ஞானமூர்த்தி, (1990), **இலக்கியத்திறனாய்வியல்**, மேலது, ப. 47., C. T.Winchester, Some Principles of Literary Criticism, 1950, P.35.
7. மேலது, ப. 48.
8. ந. பிச்சமுத்து, (1994), **திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்**, மூன்றாம் பதிப்பு, சென்னை - 5, சக்தி வெளியீடு, ப. 6.,Cited by Hudson, An Introduction to the Study of Literature, P . 37.
9. சு. பாலச்சந்திரன்,(1976), **இலக்கியத்திறனாய்வு**,சென்னை-30, சக்தி அணியகம், ப. 71.
10. மேலது ப. 73.
11. எஸ். வையாபுரிப்பிள்ளை, (1956), **இலக்கியச் சிந்தனைகள்**, இரண்டாம் பதிப்பு, சென்னை, பாரி நிலையம் ப. 17.
12. நா. செயராமன்,(1979),**தமிழ் இலக்கிய நெறிகள்**, மதுரை-20, குமரன் பதிப்பகம், ப.15.

13. அ.ச. ஞானசம்பந்தன், (1953), **இலக்கியக்கலை**, சென்னை-1, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.10.

14. ந. பிச்சமுத்து, (1994), ***திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்***, மேலது, ப.6.

15. ச.வே. சுப்பிரமணியன், (1984). ***தமிழ் இலக்கிய வகையும் வடிவும்***, சென்னை-96, தமிழ்ப் பதிப்பகம், ப.7.

16. பி. கோதண்டராமன், (1962), ***இலக்கியமும் விமரிசனமும்***, சிதம்பரம், மணிவாசகர் நூலகம், ப.38.

17. இராம. பெரிய கருப்பன், (1975), ***சங்க இலக்கிய ஒப்பீடு - இலக்கியக் கொள்கைகள்***, மதுரை-1. மீனாட்சி புத்தக நிலையம் (வி.உ), ப.99.

18. தொல். பொருள். அகத். நூ. 56.

19. .....(1953), ***தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரையுடன்***, சென்னை-1, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.70.

20. கு. சுந்தரமூர்த்தி, (ப.ஆ), (1986), ***தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத் திணையியல், புறத்திணையியல்)***, அண்ணாமலை நகர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், ப.216.

21. மேலது. ப.217.

22. முத்துச்சண்முகம், தா.வே. வீராசாமி, (ப.ஆ), (1975), தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் உரைவளம், பல்கலைநகர், மதுரை காமராசர் பல்கலைக் கழகம், ப.592.

23. குழந்தை, (உ.ஆ), (1968), ***தொல்காப்பியம் பொருளதிகாரம் (முதற்பகுதி)***, ஈரோடு-1, வேலா பதிப்பகம் வெளியீடு, ப.44.

24. க. வெள்ளைவாரணன், (1957), ***தொல்காப்பியம்***, அண்ணாமலை நகர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், பக்.89-90.

25. .....(1953), ***தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரையுடன்***, மேலது, ப. 70.

26. தொல். பொருள். அகத். நூ. 6.

27. மேலது. நூ.7.

28. மேலது. நூ. 8.

29. .....(1953), **தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரையுடன்**, மேலது, ப.11.

30. தொல். பொருள். அகத். நூ.9.

31. மேலது, நூ.10.

32. மேலது, நூ.11.

33. மேலது, நூ. 12.

34. .....(1953), **தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரையுடன்**, மேலது, ப.13.

35. சி. இலக்குவனார், (1962), **இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் (சங்ககாலம்)**, புதுக்கோட்டை, வள்ளுவர் பதிப்பகம், ப.25.

36. தொல். பொருள். புறத். நூ. 16.

37. .....(1953), **தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரையுடன்**, மேலது, பக்.110-113.

I. முல்லை வாழ்க்கை

ஆயர்குடில்

அ. வைகறை வாழ்க்கை

ஆய்ச்சியர் தயிர் கடைதல்

ஆ. காலை வாழ்க்கை

ஆயர் ஆநிரை ஓட்டிச் செல்லல்

ஆய்ச்சியர் மோர் விற்றல்

இ. பகல் வாழ்க்கை

ஆயர் ஆநிரை மேய்த்தல்

ஆயர் மகளிர் ஆநிரை மேய்த்தல்

ஆயர் மகளிர் பொழுதுபோக்கு

ஈ. மாலை வாழ்க்கை

ஆயர் ஆநிரையை ஓட்டி வருதல்

ஆயர் காட்டில் பால் கறந்து வந்து கொடுத்தல்

உ. இரவு வாழ்க்கை

ஆயர் ஆநிரையுடன் காட்டில் தங்குதல்

ஆயர் உணவு சமைத்தல்

முல்லை நில உழவர்

II. குறிஞ்சி வாழ்க்கை

குறவர் குடிசை

அ. பகல் வாழ்க்கை

தேன் எடுத்தல்

கிழங்கு அகழ்தல்

கொல்லையமைத்தல்

உழுது விதைத்தல்

களையெடுத்தல்

தினைகாத்தல்

தினை கொய்தல்

தினையைப் போரடித்தல்

தினை காயவைத்தல்

தினை குற்றுதல்

பகல்வேட்டை

இறைச்சியைப் பகுத்தல்

பண்டமாற்று

பகல் உணவு

பொழுது போக்கு

கள்ளுண்டு களித்தல்

ஆ. இரவு வாழ்க்கை

இரவு உணவு

பொழுதுபோக்கு

தூங்குதல்

ஊர்காத்தல்

தினைப்புனம் காத்தல்

இரவு வேட்டை

III. பாலை வாழ்க்கை

அ. எயினர் வாழ்க்கை

புல்லரிசி திரட்டல்

ஊன் உலர்த்தல்

பூவிற்றல்

உணவு

ஆ. வேட்டுவர் வாழ்க்கை

வேட்டையாடுதல்

நெல்லி வட்டாடுதல்

கள்ளுண்ணல்

இ. மறவர் வாழ்க்கை

(i). காலை வாழ்க்கை

நாட்பலியிடுதல்

(ii). பகல் வாழ்க்கை

ஆறலைத்தல்

வேட்டையாடுதல்

முதியோர் சூதாடல்

மகளிர் வாழ்க்கை

(iii) மாலை வாழ்க்கை

விளக்கேற்றல்

கள்ளுண்ணல்

(iv) இரவு வாழ்க்கை

ஆநிரைக் கவர்தல்

ஈ. மழவர் வாழ்க்கை

காலையில் ஆநிரை கவர்தல்

பகலில் ஆறலைத்தல்

ஊன்சோறு உண்ணல்

IV மருத வாழ்க்கை

உழுதல்

விதைத்தல்

நடுதல்

களையெடுத்தல்

காவல் காத்தல்

அறுவடை

நெற்கட்டுகளைக் களங்களுக்குக் கொண்டு வருதல்

கடாவிடுதல்

நெல் அளத்தல்

களங்களில் கள் விற்றல்

களங்களில் கள்ளுண்ணல்

நெல் குற்றுதல்

உணவு நிலை

தண்டலை உழவர்

வலைஞர்

பூ விலைஞர்

# இயல் - 2

## நானில வாழ்க்கை

சங்ககாலத் தமிழகத்தின் நிலப்பகுதியை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நான்காக வகைப்படுத்துவர். இவை முறையே இருத்தல், புணர்தல், ஊடல், இரங்கல் என்ற ஒழுக்கங்களுக்குப் பெயராக அமையும். பிரிவை உணர்த்தும் பாலைக்குத் தனி நிலம் இல்லை. குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரியும் பொழுது பாலை எனப் பெயர்பெறும். இப்பாலை நில மக்கள் நடைமுறைவாழ்க்கையும் தனித்து நோக்குதற்குரியதாகும்.

நானிலங்களிலும் வாழும் மக்களைத் தொல் காப்பியர்,

"பெயரும் வினையுமென்று ஆயிரு வகைய
திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே"[1]

என்பர். அவர்களுள் முல்லை நிலத்து ஆண்மக்களைப் பற்றி வரும் திணைப்பெயராக ஆயர், வேட்டுவர் ஆகிய இருவரையும் வரையறுப்பர்.[2] இளம்பூரணர், வந்தது கொண்டு வாராதது முடித்தல் என்னும் உத்தியால் பெண்மக்களைப் பற்றி வரும் திணைப்பெயராக ஆய்ச்சியரைக் குறிப்பிடுவர்.[3]

குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு திணைகளுக்கும் உரிய மக்கட் பெயரைத் தொல்காப்பியர்,

"ஏனோர் மருங்கினும் எண்ணுங் காலை
ஆனா வகைய திணைநிலைப் பெயரே"[4]

என விளக்குவர். இதன் உரையில் இளம்பூரணர், "குறிஞ்சிக்கு மக்கட்பெயர் குறவன், குறத்தி என்பன; தலைமக்கட்பெயர் மலைநாடன், வெற்பன் என்பன. பாலைக்கு மக்கட்பெயர் எயினர், எயிற்றியர் என்பன ; தலைமக்கட்பெயர் மீளி, விடலை என்பன. மருதத்திற்கு மக்கட்பெயர் உழவர், உழத்தியர் என்பன; தலைமக்கட்பெயர் ஊரன், மகிழ்நன் என்பன. நெய்தற்கு மக்கட்பெயர் நுளையர், நுளைச்சியர் என்பன; தலைமக்கட்பெயர் சேர்ப்பன், துறைவன், கொண்கன் என்பன"[5] என்பர்.

சங்ககாலத் தமிழகத்தில் முல்லையில் ஆயரும் குறிஞ்சியில் குறவரும் பாலையில் எயினரும், மருதத்தில் உழவரும் நெய்தலில் பரதவரும் வாழ்வர். தமிழகத்தின் மாறுபட்ட இயற்கைச் சூழல் இம்மக்களது நடைமுறை வாழ்க்கையினை வேறுபடுத்துகின்றது. ஒரு மனிதன் வாழும் சூழ்நிலைக்கேற்ப அவனது நடைமுறை வாழ்க்கை அமையும் என்பதற்குச் சான்றாக நானில மக்களின் வாழ்க்கை முறைகள் உள்ளன. இம்மக்களது தொழில் அடிப்படையில் வாழ்க்கை முறை அமைதலை, "வேட்டைத் தொழிலினடிப்படையில்குறிஞ்சி, கால்நடை வளர்ப்புத் தொழிலினடிப்படையில் முல்லை, உழவுத் தொழிலினடிப்படையில் மருதம்,வணிகத் தொழிலினடிப்படையில் நெய்தல், பொருளீட்டல் அடிப்படையில் பாலை ஆகிய பிரிவுகள் அமைந்துள்ளன"[6] என்பர் அ.ஆறுமுகம்.

**I .முல்லை வாழ்க்கை**

முல்லை நிலத்தில் வாழும் மக்கள் 'ஆயர்' எனப் படுவர். "ஆ என்பது பசு. ஆயம் என்பது பசுத்திரள். அதை ஓம்பி வாழ்ந்தவர் ஆயர் எனப்பெற்றனர் எனவும், ஆயர் என்னும் குடிப்பெயர் 'அர்' என்னும் பலர்பால் விகுதி பெற்று ஆயர் என ஆயிற்று எனவும் கொண்டு, ஆயர் என்போர் தாம் கொண்டிருந்த பசுத்திரள்களாலும் குடியாலும் பெயர் பெற்றவராவர்"[7] என்பர் அ. முத்துச்சாமி.

ஆயர் வாழ்க்கை முழுவதும் ஆநிரையைப் பேணிப் பாதுகாத்துப் பயன் பெறுதலை அடிப்படையாகக் கொண்டது. இவர்களுள் உழவுத்தொழில் செய்வோரும் உளர். இவர்களது நடைமுறை வாழ்க்கை ஆநிரையைப் பராமரித்து வாழ்பவர்களிடமிருந்து மாறுபட்டதாகும்.

ஆயர் நடைமுறை வாழ்க்கை வைகறை, காலை, பகல், மாலை, இரவு என்ற காலங்களில் நோக்குதற்குரியதாக அமைந்துள்ளது.

**ஆயர்குடில்**

ஆயர் குடில்கள் புல்லால் வேயப் பெற்றன.[8] சிற்றில் முள்ளிட்டுக் கட்டிய வேலியை உடையன. வளைந்த கால்களை உடைய பந்தரைக் கொண்டன. குடில் முழுவதும் புதுக்கலம் போன்ற செம்மண் பூசப் பெற்றிருக்கும்.[9] இவர்களது குடிசையை,

"................ ................... .................. மறிய
குளகரை யாத்த குறுங்காற் குரம்பை"

(பெரும்பாண் : 147-148)

என்பர். இங்கு ஆடுகள் தின்னும் பொருட்டுச் சிறிய கால்களில் தழைகள் கட்டித் தொங்கவிடப்பட்டிருக்கும்.

**அ. வைகறை வாழ்க்கை**

ஆயர் வைகறையில் எழுந்து கட்டுத்தறியினைச் சுத்தம் செய்து ஆநிரையை வேறு இடத்திற் கட்டிப் பால் கறந்திருப்பர். இத்தகைய நிகழ்வுகள் புலவர்களால் பாடப்பெறவில்லை. ஆய்ச்சியர் வைகறையில் தயிர் கடைதல் மட்டும் சிறப்பாகப் பாடப்பெற்றுள்ளது.

**ஆய்ச்சியர் தயிர் கடைதல்**

வைகறைப் பொழுதில் ஆய்ச்சியர் மிகவும் சுறுசுறுப்பாகச் செயல்படுவர். இரவு இருள் புலர்ந்து கெடும் விடியற்காலையில் ஆயர் மகளிர் விளாம்பழத்தின் மணம் நாறும் பானையின்கண் மத்தினால் நெய் பெறும் பொருட்டுத் தயிர் கடைவர். இதனைக் கயமனார்,

"விளம்பழம் கமழும் கமஞ்சூற் குழிசிப்
பாசந் தின்ற தேய்கால் மத்தம்
நெய்தெரி யியக்கம் வெளில்முதல் முழங்கும்
வைகுபுலர் விடியல்"

(நற். 12 : 1 - 4)

என்பர்.

மண்ணால் செய்து சுடப்பட்ட குடத்தில் உள்ள தயிரை வெயில் வெம்மை விளங்கும் பொழுதில் கடைந்தால் வெண்ணெய் திரளாது. இவ்வுண்மையை,

"சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற
பிறவா வெண்ணெய்"

(நற். 84 : 6 - 7)

என்பர் பாலை பாடிய பெருங்கடுங்கோ. இக்காரணத்தினை நன்கு உணர்ந்த ஆய்ச்சியர் விடியற்காலையில் தயிர் கடைந்து வெண்ணெய் எடுப்பர். விடியற்காலையில் உறை தெறிப்பக் கடையும் மத்தின் ஒலியினை,

"நாளுறை மத்தொலி"

(புறநா. 257 : 13)

என்பர். தினமும் மத்தின் ஒலி கேட்பதை 'நாளுறை' என்பது உணர்த்தும். ஆயர் மனைகளில் தயிர் கடையும் மத்தின் ஒலி முழங்குவதை,

"மத்து ரறியமனை"

(பதிற். 26 : 3)

என்பர் பாலைக்கௌதமனார். ஆயர் மகளிர் தயிர் கடையுங்கால் எழும் வெண்ணெயின் பெரிய மிதப்பினை,

"பால்கடை நுரையின் பரூஉமிதப்பு"

(அகநா. 224 : 6)

என்பர்.

ஆயர்மகளிர் செறிந்த இருள் புலரும் விடியலில் பறவைகள் எழும்போதே எழுந்து விடுவர். மத்தினைக் கொண்டு கயிற்றை வலித்து உறையிட்டு இறுகிய தயிரைக் கடைவர். முல்லை நிலத்தில் வாழும் ஆய்ச்சியர் ஒவ்வொருவரும் இவ்வாறு இருள்புலரும் வைகறையில் தயிர் கடைதல் நடைமுறையாகும்.

### ஆ. காலை வாழ்க்கை

காலையில் ஆயர் ஆநிரையை மேய்ச்சலுக்கு ஓட்டிச் செல்வதும், ஆய்ச்சியர் மோர், நெய் முதலியவற்றை விற்றுவரச் செல்வதும் நடைமுறையாக உள்ளது.

### ஆயர் ஆநிரை ஓட்டிச் செல்லல்

ஆயர் காலையில் வீடுகள்தோறும் உள்ள மாடுகளை மேய்ப்பதற்கு ஓட்டிச் செல்வர். அவ்வாறு செல்லும்பொழுது தமக்குரிய உணவினை எருதின் கழுத்தில் மூங்கிற் குழாயில் பெய்து பூட்டுவர். இதனை,

" ............... .................. ......... கோவலர்
மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி"

(அகநா. 311 : 9-10)

என்பர். நக்கீரரும்,

" .......... ........... துளங்கிமில் நல்லேற்றுத்
தழூஉப்பிணர் எருத்தந் தாழப் பூட்டிய
அந்தூம் பகலமைக் கமஞ்செலப் பெய்த
துறுகாழ் வல்சியர்"

(அகநா. 253 : 13-16)

என்று குறிப்பிடுவர்.

### ஆய்ச்சியர் மோர் விற்றல்

ஆயர் மகளிர் காலையில் தலையின்மேல் மெல்லிய சுமட்டின்கண் மோர்ப்பானையைக் கொண்டு சென்று புதிய மோரை விற்பர். அதற்கு ஈடாக நெல் முதலியவற்றைப் பெறுவர். நெய் விற்ற விலைக்குக் கட்டிப் பசும்பொன்னை விரும்பிக் கொள்ளாது எருமையையும் நல்ல ஆன்களையும் அவற்றின் கன்றுகளையும் கொள்வர்.[10] ஆயர் மகளிர் மோர் விற்றலை,

"பேரூருஞ் சிற்றூருங் கௌவை யெடுப்பவள்போல்

மோரோடு வந்தாள்"

(கலித்.109 : 6-7)

என்பர். அவ்வாறு கொண்டு வந்த மோருக்குப் பதிலாக நெல்லைப் பெறுவர். அதனை வட்டியில் (கடகப்பெட்டி) வாங்கிக் கொள்வர். ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு வகையான நெல் பெறுவதால் அது பல நிறத்தை உடையதாக உள்ளது. இதனை,

"வரிக்கூழ வட்டி தழீஇ"

(கலித். 109 : 14)

என்பர். ஆயர் மகளிர் மோர் விற்றுச் செல்வம் சேர்த்தலை,

"............ ............ அளைமாறி யாம்வருஞ்
செல்வம்"

(கலித். 106 : 44-45)

என்பர்.

## இ. பகல் வாழ்க்கை

ஆயர், ஆய்ச்சியர் ஆகிய இருபாலாரும் ஆநிரையை ஓட்டிச் சென்று மேய்ப்பதும் ஆய்ச்சியர் தோளி, கழங்கு போன்ற விளையாட்டுகளை ஆடிப் பொழுது போக்குவதும் பகற்பொழுது நடைமுறை வாழ்க்கையாகும்.

## ஆயர் ஆநிரை மேய்த்தல்

ஆயர் பகலில் ஆநிரையை ஓட்டிச் செல்லும் பொழுது கூட்டமாகச் செல்வர். இதனால் இவர்களை, "கணஞ்சால் கோவலர்" (அகநா. 253 : 12) என்பர்.

ஆயர் ஆநிரை நீர்பருக வன்னிலத்தில் கற்களை உடைத்துக் கிணறு தோண்டுவர்[11] அவ்வாறு அரிதின் முயன்று ஆநிரை நீர் பருகற் பொருட்டுக் கோல்களால் பள்ளம் தோண்டுதலை,

"கல்லாக் கோவலர் கோலிற் றோண்டிய
வானீர்ப் பத்தல்"

(ஐங். 304 : 1-2)

என்பர். குந்தாலியால் வெட்டப்பட்ட குளத்தில் அவ்வாநிரையின் பொருட்டு அதன் உள்ளே குடைந்து நீர்க்குழிகளை அமைப்பர்[12]

ஆயர் ஆனினங்களை அகன்ற முல்லை நிலத்தில் பரவி மேய விட்டு அங்குள்ள பூக்களை மாலையாகக் கட்டி மகிழ்வர்[13]. முல்லைப் பூவால் தொடுக்கப்பட்ட கண்ணி அணிவர்.[14]

இடையர் ஆடுகளின் தொகுதியை மேய்ச்சல் உள்ள இடம் நோக்கிச் செலுத்துவர். இதனை,

"ஆடுதலைத் துருவின் தோடுதலைப் பெயர்க்கும்
வன்கை இடையன்"

(நற். 169 : 6-7)

என்பர்.

இசையைக் கல்லாத ஆயர் சிறிய மூங்கிலிற் செய்த இனிய குழலினை ஊதி மகிழ்வர்.[15] வறண்ட பாலையில் புகுந்த ஆயர் ஆனிரையை ஊது கொம்பினால் இசைத்துக் கொன்றை மர நிழலில் தங்கச் செய்வர்.[16]

ஆயர் கார்காலத்தில் பசுக்களை ஓட்டிச் செல்லும்பொழுது கறவைக்கலங்கள், கழு, சூட்டுக்கோல் ஆகிய அனைத்தையும் தோற்பையில் இட்டுக்கொண்டு செல்வர்.[17]

கூதிர் காலத்தில் பசு, எருமை, ஆடு ஆகிய முந்நிரையையும் தம்முடைய நிலத்தை விட்டு வேற்று நிலங்களுக்கு ஓட்டிச் செல்வர்.[18]

ஆயர் ஆடுமேய்க்கும் காட்டில் புதிய வழிப்போக்கர் வருங்கால் அவர்களுக்குப் எருதுகளின் கழுத்தில் கட்டியுள்ள மூங்கில் குழாயிலிருந்து புளிச் சோற்றைத் தேக்கு இலையில்

பகிர்ந்தளிப்பர். இப் பண்பினை,

"................... ..................... ................. தீம்புளி
செவியடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்"

(அகநா. 311 : 10-11)

எனச் சிறப்பிப்பர்.

## ஆயர் மகளிர் ஆநிரை மேய்த்தல்

ஆயர் மகளிரும் ஆநிரையை மேய்ப்பதற்காக ஓட்டிச் செல்வர். பால் கறந்த கலங்களை அவ்விடத்தினின்று எடுத்து வைத்துவிட்டுக் கன்றுகளைக் கயிற்றால் கட்டி மனைக்கண்ணே நிறுத்துவர். தாய் தந்த பூந்தொழிலினையும் கரையினையும் உடைய ஆடையை அணிந்து கொண்டு பசுவினம், எருமையினம் ஆகிய இரண்டையும் தம் தோட்டத்திற்கு ஓட்டிச் செல்வர்.[19] இங்கு வெயில் வெம்மையால் ஒருவரும் நடமாடாத உச்சிக் காலத்தும் இம்மகளிர் கன்று மேய்ப்பர்.[20]

ஆயர் மகளிர் புனத்திடத்தில் உள்ள தமையனுக்கு உணவு கொண்டு சென்று கொடுத்தலையும் பசுத்திரளிடத்து உள்ள தந்தைக்குக் கறவைக் கலம் கொண்டு சென்று கொடுத்தலையும் தினை அரிந்த தாளிடத்தே தாய் மேய விட்ட கன்றினை மேய்த்தலையும் அன்றாட வாழ்க்கையாகக் கொள்வர்.[21]

## ஆயர் மகளிர் பொழுதுபோக்கு

ஆயர் மகளிர் பகலில் தோளி, கழங்கு ஆகிய விளையாட்டுகளை ஆடிப் பொழுது போக்குவது நடைமுறையாகும்.

ஆயர் மகளிர் தோளி என்னும் விளையாட்டினை ஆடுதலை,

"வையேர் வாலெயிற் றொண்ணுதல் மகளிர்
கைமாண் தோளி"

(அகநா. 344 : 4-5)

என்பர். மகளிர் தோளை வீசி ஆடுதலின் இது தோளி எனப் பட்டது.

ஆயர் மகளிர் கழங்கினை விரும்பி ஆடுவர். இதனை,

"வணங்கிறை மகளிர் அயர்ந்தனர் ஆடும்
கழங்கு" .

(அகநா. 344 : 7-8)

என்பர் மதுரைக் கூத்தனார்.

## ஈ. மாலை வாழ்க்கை

ஆயர் ஆநிரையைக் காட்டிலிருந்து வீட்டிற்கு ஓட்டி வருதல், சில சமயங்களில் காட்டிலேயே பால் கறந்து வந்து கொடுத்தல் ஆகியன மாலைப் பொழுது நடைமுறை வாழ்க்கை நிகழ்வுகளாகும்.

### ஆயர் ஆநிரையை ஓட்டி வருதல்

ஆயர் மாலையில் ஆநிரையை ஓட்டிக் கொண்டு வீட்டிற்கு வருதல் அழகாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. ஆயர் மாலையில் குழலினை இசைத்துக் கொண்டு,பசுக்களை ஓட்டி வருவர். மடிகோலிய உடையினராக வளைந்த கோலைக் கையில் கொண்டிருப்பர். பசுக்கள் கயிற்றில் பிணிக்கப்பட்ட இளங் கன்றுகளிடத்துக் கனைத்துக் கொண்டே மனைதோறும் செல்லும்.[22]

ஆயர் மாலையில் சிறிய குழலை ஊதிக் கொண்டு வருதலை,

"புன்கண் மாலையொடு பொருந்திக் கொடுங்கோல்
கல்லாக் கோவலர் ஊதும்
வல்வாய்ச் சிறுகுழல்"

(அகநா. 74 : 15-17)

என்பர் மதுரைக் கவுணியன் பூதத்தனார்.

கூதிர்காலப் பகற்பொழுதில் மழை பெய்வது இயல்பு. அம்மழையில் நனைந்து வருந்திய ஆயர், நீர் சொட்டும் மாலையினை அணிந்தவராய் மாலைப் பொழுதில் ஊரிடத்து மீண்டு வருவர்.[23]

## ஆயர் காட்டில் பால் கறந்து வந்து கொடுத்தல்

ஆயர் ஆநிரையை மாலையில் வீட்டிற்கு ஓட்டி வராது மேய்ச்சல் தலத்திலேயே தங்க வைப்பதும் உண்டு. அவ்வாறான காலங்களில் அங்கேயே பால் கறந்து வீட்டிற்குக் கொண்டு வந்து கொடுத்துவிட்டுச் செல்வர். திரும்பிக் காட்டிற்குச் செல்லும் பொழுது பாற்சோற்றை எடுத்துச் செல்வர். இதனை,

"பறியுடைக் கையர் மறியினத் தொழியப்
பாலொடு வந்து கூழொடு பெயரும்
யாடுடை யிடைமகன்"

(குறுந். 221 : 2-4)

என்பர் உறையூர் முதுகொற்றன். இதற்குப் பாலை விற்கும் பொருட்டு மாலைக் காலத்தில் வந்த இடையர் ஊரில் அதனை விற்றுவிட்டு அதற்கு விலையாக உணவுக்குரிய தானியத்தைப் பெற்றுச் செல்வர் எனவும் பொருள் கொள்ள இயலும். இடையர் பால் விற்றலை,

"பால்நொடை இடையன்"

(நற். 142 : 4)

என்பர் இடைக்காடனார்.

## உ. இரவு வாழ்க்கை

ஆயர் இடம் விட்டு இடம் சென்று ஆநிரை மேய்க்கும் தன்மையினர். இதனை, "ஆயர் வாழ்க்கை மேற்கொள்ளும் நாடோடிகள் கால்நடை வளர்த்தலையே முதன்மைத் தொழிலாகக் கொண்டுள்ளனர். வாழுமிடங்களைச் சுற்றியுள்ள பகுதிகளில் ஆண்டு முழுவதும் கால்நடைகளை வளர்க்க வேண்டிய நிலை இவர்களுக்கு உள்ளதால் பருவ

காலங்களுக்கேற்பவோ சீரான இடைவெளி கொண்டோ இடம் விட்டு இடம் பெயர்ந்து மேய்க்கின்றனர்"[24] என்பர் சீ.பக்தவத்சல பாரதி. இதனால் இவர்கள் காடுகளில் இரவில் தங்க வேண்டியது இன்றியமையாததாகும்.

## ஆயர் ஆநிரையுடன் காட்டில் தங்குதல்

ஆயர் இரவில் ஆட்டுக் குட்டிகளைச் சேரத் தொகுத்துள்ள ஓலைப் பாயை முதுகில் சுமந்திருப்பர். மிக்க இருளில் கொள்ளியின் தீயில் அகங்கை காய்ந்திடக் குறுநரிகளை நீண்ட ஒலி எழுப்பி ஓட்டுவர்.[25]

இரவில் வலிய கயிற்றையுடைய உறி, பானை, தோற்படுக்கை ஆகியவற்றை எப்பொழுதும் உடன் கொண்டு செல்வர். கார்ப் பருவத்தின் பாதி இரவில் செம்மறியாட்டின் தொகுதியைப் பாதுகாவல் செய்யக் கடைக்கோலிலிருந்து தீயெழுப்பி விறகில் பற்றச் செய்வர். நுண்ணிய மழைத்துளி தன் ஒரு பக்கத்தை நனைத்திடக் கோலினைக் காலுடன் சார்த்தி ஊன்றித் தனியே நிற்பர். அப்பொழுது ஆட்டுக்குட்டியைக் கவரப் பார்த்திருக்கும் குள்ளநரி அஞ்சி ஓடுமாறு வாயை மடித்துச் சீழ்க்கை ஒலி எழுப்புவர்.[26]

கொடிய விலங்கினங்கள் ஆநிரையைத் தாக்காத வண்ணம் பெரிய மரங்களுக்குத் தீ வைத்து இரவு முழுவதும் எரியச் செய்வர்.[27] இவ்வாறு தீயைத் துணையாகக் கொண்டு தங்குதலை,

"மெய்யுரித் தியற்றிய மிதியதட் பள்ளித்
தீத்துணை யாகச் சேந்தனிர்"

(மலைபடு : 419-420)

என்பர். இதனால் தூங்கும் பொழுது ஆடுகளின் உடலை உரித்து ஒன்றாகத் தைத்த தோற்படுக்கையைப் பயன்படுத்தியமை நன்கு விளங்கும். இத்தோற்படுக்கையை 'அதட் பள்ளி' என்பதும் தெளிவாகும்.

இவ்வாறு ஆயர் இரவில் காட்டில் தங்கும் காலம்

கார்காலமாகும். இதனை,

"நளிகடல் முகந்து செறிதக இருளிக்
கனைபெயல் பொழிந்து கடுங்குரல் பயிற்றிக்
கார்செய்து"

(நற்.289 : 4-6)

என்பர். இக்கார் கால இரவில் ஆயர் மரங்களுக்குத் தீக்கொளுவி ஆநிரை காத்து நிற்பர்.

## ஆயர் உணவு சமைத்தல்

ஆயர் காலை, நண்பகல், இரவு ஆகியவற்றில் எவ்வெக்காலங்களில் எவ்வெவ்விதமான உணவு சமைத்தனர் என்பதைத் தெளிவாக அறிய இயலவில்லை. ஆனால் ஆயர் மகளிர் உணவு சமைத்த நிகழ்வுகள் இடம்பெறுகின்றன.

ஆயர் மகளிர் வரகுச் சோற்றையும் வேளைப்பூவைத் தயிரில் பெய்து செய்த புளிங்கூழையும் உணவாக ஆக்குவர்.[28] வரகினது சிறிய அவிழாகிய சோற்றை அவரை விதையின் பருப்பை அதிகமாக விட்டுத் துழாவி உணவு சமைப்பர்.[29]

வரகின் வெள்ளிய அரிசியைச் சுனை நீரொடு முகந்து, மண்பானையில் அவிழாகிய சோற்றை ஆக்குவர். இதனைக் கற்கள் அடுக்கி அமைத்த அடுப்பில் செய்வர்.[30]

முற்றிய தயிரை உலை நீராக வைப்பர். அதில் வரகரிசியுடன் ஈயலையும் இட்டுப் புளிப்பு வாய்ந்த விருப்பம் தரும் சோற்றினை ஆக்குவர்.[31]

## முல்லை நில உழவர்

முல்லை நில ஆயரில் சிலர் சிறந்த உழவராகவும் திகழ்ந்துள்ளனர். இதனை, "சில ஆயர்குடி நாடோடியினர் தோட்டப் பயிர்களை மிகுதியாக விளைவிப்பவர்களாக உள்ளதால் மானிடவியலார் இவர்களைத் தோட்டப்பயிரிடுவோர் (Horticulturists) எனக் கூறுவர்"[32] என்பர் சீ. பக்தவத்சல பாரதி.

முல்லை நில உழவர் குடிசை, வரகு வைக்கோலால் வேயப் பெற்றது. வீட்டு முற்றத்தில் குதிர்கள் அமைந்திருக்கும். முன் உள்ள பந்தரின்கண் வரகுத் திரிகை இடப்பட்டிருக்கும். கொட்டிலில் குறிய சகட்டுருளைகளோடு கலப்பையும் சார்த்தப் பெற்றிருக்கும். அதனால் வீட்டுச் சுவர் தேய்ந்து காணப் பெறும்.[33]

இவர்கள் வரகுக் கதிரினைத் தட்டையுடன் தொகுத்து மாடுகளின் குளம்பில் துவைத்து வரகை உதிரச் செய்வர். அதனைக் காய வைத்துத் திரிமரத்தில் தேய்ப்பர். திரிமரம் என்பது மரத்தால் செய்யப் பெற்ற மரத்திரிகையாகும். பின், சுளகில் கொழித்து அரிசியாக்குவர். அதனை உரலில் இட்டு உலக்கையால் குற்றித் தீட்டுவர்.[34]

ஆயர் மகளிர் பதமாகக் காய்ந்த அரிசியைச் சுழலும் மரத்திரிகையில் இட்டுச் சுழற்றுவர். இதனை,

" ............. ............. ............. மனையோள்
ஐதுணங்கு வல்சி பெய்துமுறுக் குறுத்த
திரிமரம்"

(அகநா . 224 : 11-13)

என்பர் ஆலூர்மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார்.

## II. குறிஞ்சி வாழ்க்கை

குறிஞ்சி மலையும் மலை சார்ந்த நிலமுமாகும். இங்கு வாழும் மக்களைக் குறவர், கானவர் என வழங்குவர். மலையின் பக்கத்தே உள்ள சிறிய ஊர்களில் வாழ்வர். இவை பாக்கம்,[35] சிறுகுடி[36] எனப்பெறும்.

### குறவர் குடிசை

குறவர் காட்டிலிருந்து வெட்டிக் கொணர்ந்த கால்களை நட்டுக் கட்டிய குச்சி வீடுகளில் வாழ்வர். இக்குடிசையை 'நடுகால் குரம்பை'[37] என்பர்.

வரகினது வைக்கோலை மேலே வேய்ந்து குடிசை

அமைப்பர். அதன் மேல் காட்டு மல்லிகையை வளர்ப்பர். அம்மல்லிகை மலர்ந்து மணம் பரப்புவதை,

"கான்மிகு குளவிய வன்புசே ரிருக்கை"

(பதிற். 30 : 23)

எனச் சிறப்பிப்பர்.

குறிய இறப்பையுடைய சிறிய வீட்டில் வாழ்வர். இம்மனை, 'குறியிறைக் குரம்பை'[38] எனப்பெறும். காட்டுப் புல்லால் வேயப்பட்ட குடிசையைப் 'புல்வேய் குரம்பை'[39] என்பர்.

### அ. பகல் வாழ்க்கை

குறவர் நடைமுறை வாழ்க்கை சிறுபொழுதுகள் ஆறின் அடிப்படையில் பகுத்துக் காணக்கூடியதாக இல்லை. பகல், இரவு என்ற இரு நிலைகளில் மட்டும் காணத்தக்கதாக உள்ளது. பகற்பொழுதில் மலை உச்சியின்கண் இருக்கும் தேனை எடுப்பதை நடைமுறையாகக் கொள்வர். மலைப் பகுதியில் இயற்கையாக விளைந்து இருக்கும் கிழங்குகளைச் சேகரிப்பர். தினை விதைத்தல், தினை காத்தல், தினை அறுத்தல், தினை குற்றுதல் போன்ற செயல்பாடுகளில் இருபாலாரும் பங்காற்றுவர். தினைகாத்தலில் மகளிர் ஈடுபடுவது குறிப்பிடத்தக்கதாகும். கானவர் பகற்பொழுதில் வேட்டை யாடுவர்.

குறிஞ்சி நில மக்கள் தம் தேவைகளைப் பண்டமாற்று மூலம் நிறைவேற்றிக் கொள்வர். தம் நிலத்துப் பொருட்களை வேற்று நிலங்களுக்குக் கொண்டு சென்று தமக்குத் தேவையானவற்றைப் பெறுவர்.

குறவர் பகற்பொழுது வாழ்க்கையில் உணவு சார்ந்த நிகழ்வுகளும், பொழுது போக்கு சார்ந்த நிகழ்வுகளும் குறிப்பிடத்தக்கனவாகும்.

### தேன் எடுத்தல்

குறவர் முசுக்கலை எற முடியாத மலை உச்சியின்கண்ணும் கண்ணேணியை வைத்து அதன் வழியே ஏறுவர். தேனீக்கள் ஈட்டி வைத்த தேனை எடுப்பர்.[40] கண்ணேணி என்பது கணுக்களில் அடி வைத்து ஏறியிறங்கும்படி அமைத்துள்ள மூங்கிலாகும். இதனை 'மால்பு'[41] எனவும் கூறுவர்.

குறவர் உச்சிப் பாறையில் உள்ள தேனை அறுத்தெடுக்க முயல்வதை,

"அறையுறு தீந்தேன் குறவர் அறுப்ப"

(அகநா. 322 : 12)

என்பர் பரணர்.

### கிழங்கு அகழ்தல்

குறவர் மலைநிலத்தில் கிழங்கு அகழ்வர். அதனால் அவ்விடங்கள் குழிகளாகக் காணப்பெறும். அக்குழிகளை,

" .......... .......... .......... கானவர்
கிழங்ககழ் நெடுங்குழி"

(ஐங்.208 : 1-2)

என்பர்.

### கொல்லையமைத்தல்

குறவர் மலைப்பக்கத்தே இடம் கண்டு வளைத்துப் பண்படுத்திக் கொல்லையாக்குவர். அங்குள்ள மரங்களைச் சுட்டெரித்துப் புதுக்கொல்லையை அமைப்பர்.[42] இவ்வேளாண் முறையை, "இன்றைய நவீன சமநில வேளாண்முறை தொடக்கத்தில் காட்டெரிப்பு வேளாண்முறையாக (Slash and Burn Cultivation) இருந்து வளர்ச்சி பெற்றதாகும். இவ்வகை வேளாண்மையில் காட்டுப் பகுதியில் வாழும் பழங்குடியினர் அவர்களின் குடியிருப்புக்கருகில் ஓர் இடத்தைத் தேர்வு செய்து

அங்குள்ள காட்டினை அழித்து வெட்டிய மரங்களைத் தீயிட்டுக் கொளுத்துவர். இவ்வாறு தயார் செய்யப்படும் நிலத்தில் மூன்று முதல் ஐந்தாண்டுகள் வரை பயிரிடுவர். அதன்பின் வேறொரு புதிய இடத்தைத் தேர்வு செய்து மீண்டும் பழைய படியே காட்டை அழித்து அதனை எரித்து அங்குப் பயிரிடுவர்"[43] என்பர் சீ.பக்தவத்சலபாரதி.

### உழுது விதைத்தல்

குறவர் கார் காலத்து மழை பெய்தவுடன் நிலத்தை உழுது பண்படுத்தி வரகு, தினை, அவரை ஆகியவற்றை விதைப்பர். இதனை,

"கார்ப்பெயற் கலித்த பெரும்பாட் டீரத்துப்
பூழி மயங்கப் பலவுழுது வித்தி"

(புறநா. 120 : 2-3)

என்பர் கபிலர். மழை பெய்தவுடன் நிலத்தை உழுது தினை வித்துகட்கிடையே இடமுண்டாகத் தூவி விதைப்பர்.[44] தினைப் பயிருக்கு இடையே ஊடு பயிராகப் பருத்தியை விதைப்பர்[45]. சேம்பு, மஞ்சள், ஆகியவற்றையும் பயிரிடுவர்.[46]

### களையெடுத்தல்

சிறு தினையிடத்து வளர்ந்த களையைக் குறவர் களைக்கொட்டுக் கொண்டு களைவர்.[47]

### தினைகாத்தல்

தினைப்பயிர் முற்றிய பொழுது அதனைக் காப்பதில் குறமகளிர் பெரும் பங்கு பெறுவர். குறிப்பாகத் திருமண மாகாத மகளிர் இதில் சிறப்பாக ஈடுபடுவர். பெற்றோர் தம்மைத் தினைப்புனம் காக்க அனுப்பாதபோது குறமகளிர்,

" .......... .......... பெருங்குரல் ஏனல்
கிளிபட விளைந்தமை யறிந்துஞ் செல்கென
நம்மவண் விடுநள் போலாள்"

(அகநா. 302 : 10-12)

என வருந்துவர். தினைப்புனம் காக்கச் செல்லும்போது தோழியருடன் கூட்டமாகச் செல்வர். மூங்கிலாற் செய்த தட்டையைப் புடைப்பர். புனங்களில் படியும் கிளிகளை ஆரவாரம் உண்டாக ஓட்டுவர்.[48]

வெப்பம் விளங்கும் உச்சிப் பொழுதில் மரத்தின் உச்சியில் இயற்றிய பரணிடத்துப் பிரம்பினால் பின்னிய தழல் என்னும் கருவியும் குளிர் என்னும் கருவியும் இவை போல்வன பிறவும் ஆகிய கருவிகளைக் கொண்டு கிளிகளைக் கடிவர்.[49]

குறமகளிர் நடுப்பகலில் தினைப்புனம் காத்தலை,

"உரவுக்கதிர் தெறூஉம் உருப்பவிர் அமயம்"

(குறிஞ்சிப்.45)

என்பது நன்குணர்த்தும். நல்வேட்டனார்,

"கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந்தினை"

(நற். 22.1)

எனக் குறமகள் தினைகாத்தலைக் குறிப்பிடுவர்.

குறமகளிரின் தந்தையர் தினை முற்றியதும் அக்கதிர்களை உண்ண வரும் பச்சைக் கிளிகளைக் கடியும் பொருட்டுத் தட்டை, கவணை முதலிய கருவிகளுடன் செல்லுமாறு ஏவுவர்.[50] அம்மகளிர் ஆயத்தாருடன் சென்று தழலினைச் சுற்றியும் தட்டையைத் தட்டியும் தினைப்புனம் காப்பர்.[51] இவற்றுள் தட்டை என்பது மூங்கிலைப் பிளந்து ஒன்றிலே தட்டி ஓசை எழுப்பும் கருவி. குளிர் என்பது மூங்கிலை வீணை போல் கட்டித்தெறித்து ஓசை எழுப்பும் கருவி ஆகும்.

பகற்பொழுதில் தினைப்புனம் காத்தலில் குறமகளிர் ஈடுபடுவது போல் குறவர் செயற்படுவதில்லை. ஆனால் அவர்களும் தினைப்புனம் காத்தல் நடைமுறையாகும். வளர்ந்த சேம்பு, மஞ்சள் ஆகியவற்றைப் பன்றி அகழாமல் காக்கக் குறவர் பறையோசை எழுப்புவது[52] குறிப்பிடத்தக்கதாகும்.

### தினை கொய்தல்

தினை நன்கு முற்றியதும் குறமகளிரின் தினைப்புனக் காவல் போதும் என்று கூறித் தினை கொய்யத் தொடங்குவர்.[53] குறவர் பலரும் கூடிப் பகற்பொழுதில் தினை கொய்வர்.[54]

### தினையைப் போரடித்தல்

குறவர் தினைக்கதிரைப் பாறையின்மேல் போட்டுக் களிற்றியானையைக் கொண்டு காலில் மிதிக்கச் செய்வர். இதனை,

" .......... .......... அகன்கட் பாறை
மென்றினை நெடும்போர் புரிமார்
உறங்குகளி றெடுப்பும்"

(நற். 125 : 10-12)

என்பர் கச்சிப்பேட்டுக் கதக்கண்ணனார்.

### தினை காயவைத்தல்

குறமகளிர் சிவந்த தினையைப் பாறைமேல் பரப்பி உலர வைப்பர். அச் சமயம் யானையின் பிளிறல் கேட்கக் குறமகளிர் அதனை இடியோசை என எண்ணி உலர வைத்த தினையை ஒன்று திரட்டுவர்.[55]

### தினை குற்றுதல்

குறமகளிர் நன்கு காய்ந்த ஐவனம் என்னும் வெண்ணெல்லைத் தந்தையின் மலை வளத்தைப் பாடிக் கொண்டே குற்றுவர்.[56] வெண்ணெல்லைப் பாறையாகிய உரலில் யானைக் கோட்டாலும் சந்தன மர உலக்கையாலும் குற்றுவர்.[57]

மூங்கிலின் வெண்ணெல்லைப் பாறையாகிய உரலில் யானைக் கோட்டினை உலக்கையாகக் கொண்டு குற்றுவர். சேம்பின் இலையைச் சுளகாகக் கொண்டு புடைப்பர்.[58]

தினைப்புனத்தில் முற்றித் தாழ்ந்த கதிரை உருவிச் சந்தன

மரத்தால் செய்த உரலில் பெய்து யானைக் கோட்டால் வகுத்த உலக்கையை உயர்த்திக் குற்றுவர்.[59]

இவற்றால் குறமகளிர் பகற்பொழுதில் வெண்ணெல், மூங்கில் நெல், தினை போன்றவற்றைக் குற்றிப் புடைத்துத் தூய்மைப் படுத்துவதை நடைமுறையாகக் கொள்வது தெளிவுறும்.

### பகல்வேட்டை

கானவர் பகற்பொழுதின் பெரும்பகுதியை வேட்டையாடுவதில் கழிப்பர்."வேட்டையாடி உணவு சேகரிக்கும் பழங்குடிகள் பெரும்பாலும் தனித்தனியான சிறு குழுக்களாகப் (Isolated Bands) பிரிந்து செல்வர்"[60] என்பர் சீ. பக்தவத்சல பாரதி.

கானவர் அகன்ற நிலப் பிளவின் வாயிலில் வார்களால் பின்னப்பட்ட கண்ணியும் வலையும் அமைப்பர். பன்றியை வேட்டை நாய்களைக் கொண்டு ஏவித் துரத்தி அப்பிளவில் விழச் செய்வர். அவை வலையில் பட்டுச் சிக்குறும். அதனைத் தம் சிறுகுடிக்குக் கொண்டு வருவர்.[61]

வேட்டை நாய்களுடன் பசிய தூறுகளை அடித்து, வேலியில் தொடர் வலைகளைக் கட்டிக் குறுமுயல்களை அவ்வலையகத்தே வளைத்துப் பிடிப்பர்.[62]

பாறைகள் செறிந்த குன்றுகளில் முழைகள் கண்டு அவற்றின் வாயிலில் கற்பலகையால் கதவமைப்பர். அதன் உள்ளே ஆடுகளைக் கட்டிப் புலிகளை அதனுட் புகுவிப்பர். அவை ஆடுகளைத் தாக்கும்போது வாயிற் கதவாகிய கற்பலகை விரைய மூடிக் கொள்ளுமாறு பொறியமைப்பர். இதற்குக் 'கல்லடார்' என்று பெயர். இவ்வேட்டை முறையை,

> "இரும்புலி வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய
> பெருங்கல் லடார்"

(புறநா. 19 : 5-6)

என்பர் குடபுலவியனார்.

குறவர் வேட்டைக்குச் செல்லும் பொழுது பலாப் பழத்தின் சுளையினின்று விளைந்த கள்ளை நிறையக் குடிப்பர். தோளில் மூங்கிலால் ஆய வலிய வில்லை வைத்திருப்பர். அவர்களுடன் விலங்குகளைத் துரத்திப் பற்றும் இயல்புடைய நாய்கள் உடன் செல்லும். ஏவல் இளையரும் பின்னே செல்வர். இவ்வாறு சென்ற குறவர் காட்டிலுள்ள மல்லிகைப் புதர் உதிரத்தோடு அசைந்திட முள்ளம் பன்றியைக் கொன்று வீழ்த்துவர்.[63]

களிற்றியானை மேல் அம்பு செலுத்திக் கொன்று அதன் கோடுகளைக் கொண்டு வந்து தனது ஊகம் புல்லால் வேய்ந்த குடிசையில் புலால் நாற்றம் வீச ஊன்றுவர்.[64] யானையை வேட்டையாடி அதன் கோடுகளைப் புய்த்தெடுத்து அகன்ற பாறையில் உலர வைப்பர். யானையின் பசிய ஊனை அறுத்தெடுத்துத் தசையையும் பாறையில் உலர்த்துவர்.[65]

கானவர் கோட்டுக்காகவும் தசைக்காகவும் யானைகளை வேட்டையாடுவர். இதனை,

" .............. .............. .............. யானை
நற்கோடு நயந்த அன்பில் கானவர்"

(நற். 65 : 5-6)

என்பர் கபிலர்.

கானவர் காட்டில் வேட்டையாடிக் கொன்ற யானையின் கோடுகளைக் காவு மரமாகக் கொண்டு, பன்றி முதலியவற்றின் தசை நிறைந்த வட்டிகளைச் சுமந்து வருவர்[66].

## இறைச்சியைப் பகுத்தல்

கானவர் வேட்டையாடி வந்த இறைச்சியைத் தம்முள் பகுத்துக் கொள்வது நடைமுறையாகும். இதனை, "வேட்டையாடி உணவு சேகரிக்கும் சமுதாயங்களில் பொதுப்படியான பரிமாற்றம் பெரும்பாலும் உணவுப் பொருள்களைப் பரிமாறிக் கொள்வதாக அமைகிறது. வேட்டைக்குச் செல்லும் குழுவினர் வேட்டையாடிப் பெற்ற

இறைச்சியை அவர்களின் உறவினர்களுடன் சமமாகப் பகிர்ந்து கொள்வர் அல்லது உறவு நெருக்கத்தின் அடிப்படையில் பகிர்ந்து கொள்வர்"[67] என்பர் சீ. பக்தவத்சல பாரதி.

கானவர் வில்லாற் கொன்று கொணர்ந்த ஆண் பன்றியை மனைமகளிர் துண்டித்து ஊரிடத்து வாழ்வோரது குடிமுறைக்கேற்பப் பகுத்தளிப்பர். இதனை,

" .............. ........ ...................... கானவன்
வில்லின் தந்த வெண்கோட் டேற்றைப்
புனையிருங் கதுப்பின் மனையோள் கெண்டிக்
குடிமுறைப் பகுக்கும்"

(நற். 336 : 3-6)

என்பர் கபிலர். இதில் குடிமுறை என்பது கானவருள் உயர்வு தாழ்வு இருந்தமையை நன்குணர்த்தும். இவர்கள் ஒரு குழுவாக வேட்டையாடுவதால் இறைச்சியை அனைவரும் தகுதிக்கேற்ப பிரித்துக் கொள்வதும் விளங்கும்.

கானவர் வீழ்த்திக் கொணர்ந்த முள்ளம் பன்றியின் ஊனைக் குறமகளிர் சிறுகுடியில் வாழும் ஏனைய குறவர்க்குப் பகுத்துக் கொடுப்பர்.[68]

கானவர் தம் முன்றிலில் உடும்பினைச் சுட்டு அறுத்துத் தம்மவரிடையே கூறு செய்து கொள்வர். இதனை, "உடும்பினைப் பற்றிக் கொணர்ந்த கானவர் அதனைப் பகுத்தளித்தற் பொருட்டு நெருப்பில் வேக வைப்பர். அப்பொழுது எழும் மணம் தெருவெல்லாம் மணக்கும்"[69] என்பது உணர்த்தும்.

**பண்டமாற்று**

குறவர் தம் நிலத்தில் கிடைக்கும் பொருட்களைப் பண்டமாற்றாகப் பயன்படுத்துவர். ஆமாவின் இறைச்சியுடன் களிற்றியானையின் கோட்டையும் கொண்டுவந்து கொடுத்து விட்டு, அவற்றின் விலைக்கு ஈடாகப் பொன்னையும் கள்ளையும் பெறுவர். இதனை,

"செங்கோட் டாமா னூனொடு காட்ட
மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு
பொன்னுடை நியமத்துப் பிழிநொடை கொடுக்கும்"

(பதிற். 30 : 10-12)

என்பர்.

சிறுகுடியிலுள்ள குறவர் உணவின்றிப் பசித்தாராயின் யானைக் கோட்டை விற்று அவ்விலையில் உணவைக் கொள்வர்.[70] தேனையும் கிழங்கையும் நெய்தல் நிலத்துக்குக் கொண்டு வந்து கொடுத்துவிட்டு அதற்கு விலையாக மீன் நெய்யையும் நறவையும் பெறுவர்.[71] குறமகளிர் மான்தசையைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டு, அக்கடகம் நிறைய உழவர் மகளிடம் வெண்ணெல் பெறுவர்.[72]

**பகல் உணவு**

குறவர் தினைச்சோறு, இறைச்சி, பலாப்பழம் ஆகியவற்றைப் பகற்பொழுதில் உணவாகக் கொள்வர்.

குறமகளிர் மோரை உலையாக வார்த்துப் புளியம்பழத்தின் இனிய புளிப்பையும் கலந்து மூங்கிலரிசிச் சோறு ஆக்குவர்.[73] இவ்வுணவை, 'மனைதோறும் பெறுகுவீர்' என்று புலவர் குறிப்பிடுவதால் இவ்வாழ்க்கை முறை குறவர் அனைவருக்கும் பொதுவானது என்பது புலனாகும்.

குறவர் நெய்யில் பொறித்த தசையினையும் தினைச் சோற்றையும் உணவாகக் கொள்வர்.[74] பலாப் பழத்தின் விதையோடு மானின் தசையினையும் எய்ப்பன்றியின் தசையினையும் உடும்பின் தடியோடு கலந்து கறி செய்து உண்பர்.[75]

பலாப் பழத்தினைச் சில நாளைக்கு வைத்து உண்ணும் உணவாகக் கொள்வர். இதனை,

"குறவர்க்கு அல்குமிசை வாகும்"

(புறநா. 236 : 2)

என்பது நன்குணர்த்தும். பலாப்பழமும் அதன் விதைகளும் குறவர்க்கு எளிதாக, இயற்கையாகக் கிடைக்கும் உணவு ஆகும்.

### பொழுது போக்கு

கானவர் பகற்பொழுதில் 'கையாடு வட்டில்' கொண்டு விளையாடிப் பொழுது போக்குவர்.[76] இது கையின்கண் வட்டினை வைத்து ஆடும் ஒரு வகை விளையாட்டாகும்.

### கள்ளுண்டு களித்தல்

குறவர் வேலையில்லாத பொழுது கள்ளுண்டு மகிழ்ந்து பொழுது போக்குவர். மனமகிழ்ச்சியின் பொருட்டு விடியற்காலத்தே கள்ளுண்டு களித்தலை,

"நறவுநாட் செய்த குறவர்"

(மலைபடு.320)

என்பர். நறவை நாட்காலத்தே குடித்த குறவர் தம் மகளிரோடு சிறுபறை ஒலிக்கக் குரவையாடுவர்.[77]

வைகறைப் பொழுதில் மூங்கிற் குழாய்க்குள் பெய்த முற்றிய தேனாற் செய்த கள்ளின் தெளிவை நிரம்ப உண்பர். நெல்லாற் சமைத்த கள்ளை உண்டு மகிழ்வர்.[78]

குடிலின்கண் மனைவி தேனாற் செய்த கள்ளை வார்த்துக் கொடுப்பக் குறவர் உண்டு, மகிழ்ச்சி மிக்கு இருப்பர்.[79] பகற்பொழுதில் வேங்கைப் பூக்களைச் சூடித் தொண்டகப் பறையின் தாளத்திற்கேற்ப ஆடவர் பெண்டிரோடு தெருக்களில் ஆடி மகிழ்வர்.[80]

### ஆ. இரவு வாழ்க்கை

குறவர் இரவில் பஞ்சாலாகிய வெள்ளிய திரியையுடைய விளக்கினைத் தம் வீடுகளில் ஏற்றுவர்.[81] தம் ஊருக்குள் கொடிய விலங்கினங்கள் புகாவண்ணம் ஊர்க்காவலர் பாதுகாப்பர். மூங்கிலரிசிச் சோற்றையும் புலால் உணவையும் இரவு உணவாகக் கொள்வர். ஊர் அம்பலத்தில் பொழுது

போக்குவர். புலித்தோல் படுக்கையில் தூங்குவர். குறவர் இரவில் தினைப்புனங் காத்தலும் வேட்டையாடுதலும் குறிப்பிடத்தக்க வாழ்க்கை முறையாகும்.

### இரவு உணவு

கானவர் இரவில் மூங்கிலரிசிச் சோற்றில் நெல்லரிசி விரவி அவரை விதையாற் சமைத்த புளிங்கூழை உணவாகக் கொள்வர்.[82] வெள்ளாட்டை அரிந்து அதன் தசையோடு சேர்த்துச் சமைத்த அரிசிச் சோற்றுத் தடியைத் தினை மாவுடன் நாள்தோறும் செய்வர்.[83] இதனை 'அல்கலும்'[84] எனப் புலவர் குறிப்பிடுவதால் இது நடைமுறை வாழ்க்கையில் தினந்தோறும் உள்ள உணவு முறை என்பது தெளிவுறும்.

### பொழுதுபோக்கு

குறவர் இரவில் ஊர் அம்பலத்தில் கூடிப் பேசிப் பொழுதுபோக்குவர். இதனைக் கபிலர்,

"மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே"

(அகநா. 128 : 1)

என்பர். இங்கு 'மன்று' என்பது ஊர்ப்பொது இடமாகிய அம்பலத்தைக் குறிக்கும்.

### தூங்குதல்

கானவர் இரவில் புலித்தோலால் செய்யப்பெற்ற படுக்கையில் துயிலுவர். இதனை,

"வரியதள் படுத்த சேக்கை"

(அகநா.58:4)

என்பர் மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார்.

### ஊர்காத்தல்

குறவர் இரவில் கொடிய விலங்குகளிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளக் காவல் காப்பர். அதற்குத்

தொண்டகமாகிய சிறு பறையைப் பாதி இரவிலும் விடாது ஒலிப்பர்.[85]

சில சமயங்களில் ஊருக்குள் வர முயலும் விலங்குகளை அனைவரும் சேர்ந்து வெருட்டுவர். தம் குடிக்குள் வர முயலும் யானையைத் தடுக்க அம்பு செலுத்துவர். கிணைப்பறை கொட்டுவர். கையிலுள்ள கவணால் கல் எறிவர். விளிக்குரல் எழுப்புவர். ஊருக்குப் புறத்தே நின்று ஆரவாரம் செய்வர்.[86]

### தினைப்புனம் காத்தல்

இரவில் குறவர் தினைப்புனம் காத்தல் குறிப்பிடத்தக்கதாகும். கானமெல்லாம் அடங்கிய இரவில் தினையை மேய்ந்த யானையின் கூட்டம் நிலை கெட்டு ஓட உயர்ந்த பரணிலிருந்து கவண்கல் எறிவர்.[87] யானைகள் அஞ்சி ஓடும் பொருட்டுக் கொள்ளிக் கட்டையை இரவு முழுவதும் எரிய விடுவர்.[88] ஒளி விளங்குகின்ற குறைக் கொள்ளியை உடையராய் வில்லினை உடையராய்க் களிறு வந்ததென்று தினைப்புனம் காக்க ஆரவாரம் செய்வர்.[89]

நடு இரவில் யானை நடக்கும் ஓசையைக் கேட்ட கானவர் உயர்ந்த மலையில் ஆசினிப் பலாவின் மேல் இட்ட பரணில் ஏறிக் கவணையில் கல் எறிந்து ஓட்டுவர்.[90] நள்ளிரவில் மலையிடத்தே பரண் மீதுள்ள கானவன் இரவில் மேய்தலைப் பொருந்தி வரும் யானையின் நடையைக் கூர்ந்து அறிந்து கவணால் கல் எறிந்து துரத்துவான். இதனை,

"................ ................. .......... யானைக்
கால்வல் இயக்கம் ஒற்றி நடுநாள்
வரையிடைக் கழுதின் வன்கைக் கானவன்
கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல்"

(அகநா. 292 : 8-11)

எனக் கபிலர் விளக்குவர்.

இரவில் காட்டுப் பன்றிகளின் தொல்லை அதிகமாக

இருக்கும். இவை கூட்டமாக வந்து தினைப்பயிரை அழித்து விடும். எனவே இக்காட்டுப் பன்றிகளைத் தினைப்புனத்திலிருந்து கானவர் ஓட்டுவர்.

சிறிய கண்ணினையுடைய பன்றியின் பெருங் கூட்டத்தை ஓட்டுவதற்கு முற்றிய தினைப்புனம் காத்திருப்போர் அவை வரும் காலத்தை நினைந்து காத்திருப்பர். ஊது கொம்பினை ஓசையோடு ஊதுவர்.[91] பரண் மீது அமர்ந்து பன்றி வரும் திறம் நோக்கி நீண்ட சுடரின் ஒளியினைக் கொளுத்தி வைத்திருப்பர். இதனை,

"புருவைப் பன்றி வருதிறம் நோக்கிக்
கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய
நெடுஞ்சுடர் விளக்கம்"

(அகநா. 88 : 4-6)

என்பர் ஈழத்துப் பூதன்தேவனார்.

விலங்குகளை விரட்டக் கொள்ளிக் கோலினைக் கையில் வைத்திருத்தல் இயல்பு. இதனை,

"ஏனலஞ் சிறுதினைச் சேணோன் கையதைப்
பிடிக்கை அமைந்த கனல்வாய்க் கொள்ளி"

(அகநா. 73 : 14-15)

என்பர் எருமை வெளியனார்.

## இரவு வேட்டை

குறவர் கூதிர் கால நடு இரவில் காட்டில் விலங்குகளை வேட்டையாடுவர். இதனை,

" .......... .......... பானாட் கங்குல்
காடுதேர் வேட்டம்"

(அகநா. 58 : 2-3)

என்பர். இவர்களது நடு யாம வேட்டை 'அரைநாள் வேட்டம்'[92] எனச் சிறப்பிக்கப் பெறும்.

குறவர் நடுயாமத்தில், பன்றி நீருண்ண வரும் வருகையை எதிர்பார்த்து மூடுகுழிகளின் அகத்தே மறைந்திருந்து பன்றி வேட்டையாடுவர்.[93]

## III. பாலை வாழ்க்கை

பாலைக்குத் தனி நிலம் இல்லை. முல்லையும் குறிஞ்சியும் தத்தம் இயல்பு குன்றும் பொழுது பாலை எனப்பெறும். இங்கு வாழும் மக்கள் வாழ்க்கை, முல்லை நில மக்கள் வாழ்க்கையாகவோ குறிஞ்சி நில மக்கள் வாழ்க்கையாகவோ அமையாமல் தனித்த தன்மையுடையதாகும்.

பாலை நில மக்கள் அப்பகுதியில் எவ்வளவு வறட்சி ஏற்பட்டாலும் அங்கிருந்து செல்லாமல் அப்பகுதியிலேயே வாழ்ந்துள்ளனர். அவர்கள் அப்பகுதியின் தன்மைக்கேற்ப வாழ வேண்டிய சூழ்நிலையில் வாழ்க்கை முறைகளும் வேறுபடுகின்றன.

இங்கு வாழும் மக்கள் நில வறட்சியைப் போல மன வறட்சியும் மிக்கவர்களாக உள்ளனர். இங்கு எயினர், வேட்டுவர், மறவர், மழவர் என்னும் நான்கு வகையினர் வாழ்ந்துள்ளனர். இவ்வகையினர் ஒவ்வொருவரது நடைமுறை வாழ்க்கையும் தனித்தனியாகக் காணத்தக்கதாகும்.

### அ. எயினர் வாழ்க்கை

எயினர் ஈந்து வேயப்பட்ட குடிசையில் வாழ்வர். இவர்கள் வாழும் ஊர் சீறூர் எனப்பெறும். இது தலை கூம்பிய குடிசைகளைக் கொண்டது. இதனை,

"குவிந்த குரம்பை அங்குடிச் சீறூர்"

(அகம். 329 : 40)

என்பர். இவர்களது நடைமுறை வாழ்வில் பகற்பொழுது நிகழ்வுகள் மட்டும் காணப்பெறும். அவற்றுள் புல்லரிசி திரட்டல், ஊன் உலர்த்தல், பூ விற்றல், உணவு சமைத்தல் என்பன குறிக்கத்தக்கனவாகும்.

### புல்லரிசி திரட்டல்

புல்லரிசி என்பது எறும்பு, கரையான் போன்றவை நிலத்துக்கடியில் மழைக் காலத்துக்காகச் சேகரித்து வைத்திருக்கும் அரிசியாகும். எயினர் தமக்கு உணவு இன்மையால் நிலத்தைத் தோண்டி, புல்லரிசியினைத் திரட்டுவர். பாலை நிலம் முழுவதும் சென்று பகற்பொழுதில் புல்லரிசி திரட்டுவர்.

தோற்படுக்கையில் பிள்ளையோடு முடங்கிக் கிடக்கும் ஈன்ற எயிற்றி தவிர ஒழிந்தோரெல்லாம் போய் உளி போலும் பாரைகளால் கரம்பு நிலத்தைக் குத்திக் கிளறிப் புல்லரிசியினை வாரிக் கொணர்வர். அவற்றை மனையின் முற்றத்தே தோண்டப்பட்ட நிலவுரலில் பெய்து வயிரமேறிய உலக்கையால் குற்றித் தீட்டுவர்.[94] ஈன்ற நோவு காரணமாக எயிற்றி புல்லரிசி கொணரச் செல்லவில்லை. இல்லையெனில் அவளும் செல்வது நடைமுறை ஆகும்.

### ஊன் உலர்த்தல்

எயிற்றியர் பகற்பொழுதில் விலங்குகளைக் கொன்று தன் தமையன்மார் கொணர்ந்த நிணமுடைய ஊனை வெய்யிலில் காய வைப்பர். அவ்வூனை உண்ணவரும் பறவைகளை ஓட்டுவர். இதனை,

"கணமா தொலைச்சித் தன்னையர் தந்த
நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பு
நலமா ணெயிற்றி''

(ஐங். 365 : 1-3)

என்பர். இதில் எயினர் பகற்பொழுதில் விலங்குகளை வேட்டையாடுவதும் பெறப்படும்.

### பூவிற்றல்

எயினர் மகளிர், இருப்பை மரங்களின் பூக்களைப் பெண் கரடிகளின் கூட்டம் தின்றது போக எஞ்சியவற்றை மூங்கில் குழாயில் திரட்டிக் குன்றின்கண்ணவாகிய சீறூரின்

தெருக்கள் தோறும் சுழன்று விற்பர்.[95]

**உணவு**

எயிற்றியர் ஆழ்ந்த கிணற்றில் சில்லூற்றாகிய உவரி நீரை முகந்து பழைய பானையில் வார்த்த உலையை, முறிந்த அடுப்பில் ஏற்றிச் சோறு சமைப்பர். அதனைக் கருவாட்டோடு உண்பர்.[96]

புளிங்கறி இடப்பட்ட சோற்றையும் ஆமாவின் சூட்டிறைச்சியையும் ஆக்குவர். முட்பன்றியின் ஊனை உணவாகக் கொள்வர்.[97] இதனை,

"முளவுமா வல்சி யெயினர்"

(ஐங்.364:1)

என்பர். இவர்கள் மனைதோறும், ஈந்தின் விதை போன்ற அவிழாகிய சோறும் உடும்பின் பொரியலும் எப்பொழுதும் கிடைக்கும்.[98]

## ஆ. வேட்டுவர் வாழ்க்கை

வேட்டுவரை 'வயவர்'[99] என்றும் 'வில்லேர் உழவர்'[100] என்றும் கூறுவர். இவர்கள் பகற்பொழுதில் யானை, பறவை, முயல், உடும்பு போன்றவற்றை வேட்டையாடுவர். மாலையில் வீடு திரும்பியதும் கள்ளுண்டு களிப்பர். வேட்டுவச் சிறார்கள் பகற்பொழுதில் வட்டாடுவர்.

**வேட்டையாடுதல்**

வேட்டுவர் பகற்பொழுதில் வேட்டை நாயுடன் சென்று விலங்குகளை வேட்டையாடுவர். அப்பொழுது ஊது கொம்புகளை ஊதுவர்.[101] யானைகளைப் பிடிக்கப் பெரிய குழிகளை அகழ்ந்து வைப்பர்.[102] புள்ளினத்தை வலை வீசிப் பிடிப்பர். அதனால் 'படுவலை வேட்டுவன்'[103] எனப் பெறுவர்.

உடும்பினை வேட்டையாடுவர். புற்றுகளைத் தகர்த்து ஈயல்களைத் திரட்டுவர். புதர்களில் உறங்கும் முயல்களை வெருட்டி வேட்டையாடுவர்.[104]

**நெல்லி வட்டாடுதல்**

வேட்டுவச் சிறார்கள் பகற்பொழுதில் வேம்பின் நிழலில் வட்டாடும் அரங்கு வகுத்து நெல்லிக் காய்களை வட்டாகக் கொண்டு விளையாடுவர்.[105] இச்சிறார்கள் நெல்லிக்காய்களை வட்டுகளாகக் கொண்டு விளையாடுதலை,

"பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
மோட்டிரும் பாறை ஈட்டுவட்டு"

(அகநா. 5:9-10)

என்பர் பாலை பாடிய பெருங்கடுங்கோ.

***கள்ளுண்ணல்***

வேட்டுவர் பொழுது பட்டவுடன் தோளில் தொடுக்கப்பெற்ற அம்புப் புட்டிலுடன் உடும்பு முதலியவற்றைத் தம் மனையிடத்தே கொண்டு வந்து கொடுப்பர். பின் கள்ளை மிகவும் உண்டு மயங்கிக்கிடப்பர் [106].

கள் விற்கும் வாயிலில் வேட்டையில் பிடித்த யானைக் கன்றினைக் கடம்பு நார்க் கயிற்றால் கட்டிக் கொணர்ந்து பிணிப்பர். இதனை,

"கருங்கால் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து
பெரும்பொளி வெண்ணார் அழுந்துபடப் பூட்டி
........... ................ ................. .................
நறவுநொடை நல்லில் புதவுமுதற் பிணிக்குங்
கல்லா இளையர்"

(அகநா. 83 : 5-9)

என்பர் கல்லாடனார்.

**இ. மறவர் வாழ்க்கை**

மறவர் பனையோலை வேய்ந்த குடிசைகளில் வாழ்வர். இக்குடிசைகளைப் 'புல்லிலை வைப்பு'[107] என்பர்.

மறவர் புலால் நாறும் வில்லேந்தி உயிர்க்கொலை

புரியும் தொழிலை மகிழ்ச்சியுடன் செய்வர். இத்தொழிலைப் 'புலவுவில் உழவு'[108] என்பர்.

மறவரைக் 'கொள்ளை மாந்தர்'[109], 'கொலை வேல்மறவர்'[110], 'வில்லேர் உழவர்'[111] எனச் சிறப்பிப்பர்.

**(i). காலை வாழ்க்கை**

மறவர் நடைமுறை வாழ்வில் தினமும் நாட்காலையில் நாட்பலியிடுதல் சிறப்பிடம் பெறுகிறது.

**நாட்பலியிடுதல்**

பாலை நிலச் சீறூரில் வாழும் மறவர் அம்பலத்தில் விடியற்காலையில் நாட்பலியிடுவர். அம்பலத்தில் அதற்கான பலிபீடம் அமைக்கப்பட்டிருக்கும். தினமும் அம்பலத்தில் உள்ள இப்பலி பீடத்தில் பலியிடுவர். அவ்வாறு இடும் பலியை மறந்தமையால் இடம் வெளிதாகக் காணப்படுகின்றது.[112]

நாட்காலையில் நடுகல்லுக்கு விடியற்காலத்துப் பலியைப் படைத்து நீராட்டி நெய் விளக்கேற்றுவர்.[113] இவ்வாறு நடுகல்லுக்கு நாட்காலையில் தினமும் பூக்கள் தூவி வழிபடுவதை,

"நெடுநிலை நடுகல் நாட்பலி"

(அகநா. 289 : 3)

என்பர் எயினந்தை மகன் இளங்கீரனார்.

**(ii). பகல் வாழ்க்கை**

மறவர் பகற்பொழுதில் ஆறலைப்பர்; வேட்டையாடுவர். முதியோர் சூதாடுவர். மறவர் மகளிர் பாலை நிலத்தில் தினை, பருத்தி விதைகளைத் திரட்டுவர். தினை குற்றுவர்.

**ஆறலைத்தல்**

மறவர் பகற்பொழுது முழுவதும் ஆறலைத்தலில்

ஈடுபடுவர். வழிச் செல்லும் புதியவர் வரும் இயல்பினைக் காணும் பொருட்டு யாமரத்தின் உச்சியில் மறைந்திருப்பர்.[114]

பாரம் மிக்க கழுதைகளின் நீண்ட நிரையைப் பின்பற்றி வரும் வணிகரை வாட்டி அவர்களது தலையைத் துணிப்பர். துடியினைக் கொட்டி அணிகலன்களைக் கொள்ளையிடுவர். அவற்றை அவரவர் கொள்ள வேண்டிய முறைப்படிப் பிரித்துக் கொள்வர்[115].

மறவர், வழிச் செல்லும் வணிகச் சாத்தினைக் கொன்று, அவர் பொருளைக் கொள்ளை கொண்டு உண்பர். இதனை,

"............... ................ ..................... சாத்தெறிந்து
அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்
கொடுவில் ஆடவர்"

(அகநா. 167 : 7-9)

என்பர். இம்மறவர் எய்யுந்தொறும் ஒலித்துச் செல்லும் அம்பு, வழிச் செல்லும் புதியவரது உயிரைக் கெடுக்கும்.[116]

மறவர், வழிச்செல்லும் புதியவர்களைக் கொன்று தாம் எறிந்த படைக்கலத்தை நீரில் கழுவுவர். இதனை,

"நெறிசெல் வம்பலர்க் கொன்ற தெவ்வர்
எறிபடை கழீஇய சேயரிச் சின்னீர்"

(அகநா. 113 : 18-19)

என்பர் கல்லாடனார்.

மறவர் பாலை வழியில் செல்லும் புதியவர்களைக் கொன்று ஓரிடத்தில் போட்டுத் தழையால் மூடி வைத்து விடுவர். இதனை உவல் இடு பதுக்கை என்பர்[117].

மறவர் பாலை வழியில் வருபவர்களிடம் கைப்பொருள் இல்லையாயினும் அவர்களைக் கொன்றுவிடுவர். அவ்வாறு வழி வருவோரைக் கொல்லாது விட்டு வந்தால் கள்வர்களின் தலைவன் யானைக் கோட்டோடு புலியின் தோலையும் தண்டமாக விதிப்பது நடைமுறையாகும்[118].

மறவர், வழிச் செல்வோரைக் கொன்று அதிகமான பொருளைக் கைப்பற்றுதலைப் 'பெருநாள் வேட்டம்'[119] என்பர். அம்பு எய்யும்பொழுது குறித்த இலக்குத் தப்புவதாயின் அம்பினைத் தொடுத்த கைவிரலை வாயால் கவ்விக் கொள்வர் [120].

ஆறலைத்தலன்றிப் பிற தொழில் அறியாத மறவர் இளையர், தாம் அம்பு விடுத்தலின் சிறப்பினைக் காணும் பொருட்டுப் புதியராய் வருவோர் அணிகலன் இல்லாதவராயினும் அவர்களைக் கொன்று பறவைகட்கு உண்பிப்பர் [121].

மறவர், வழிவருவோரிடம் பெறுவதற்குப் பொருள் இல்லையாயினும் தம் அம்பு பட்டுப் பதைப்பதைக் கண்டு மனம் மகிழ்வர் [122]. வழிப்போவோருடைய பொருளைப் பறித்துக் கொண்டு அவர்களுக்குப் புண்ணைக் கொடுப்பர் [123].

மறவர் காட்டில் புதுவோராய் வரும் மக்கள் மேல் அம்பு தொடுத்து வருத்துவர். தோல் மடிக்கப்பட்ட வாயையுடைய தண்ணுமையை முழக்குவர்[124]. வழிச் செல்வோர் மீது கல் எறிந்து வழிப்பறி செய்வர் [125].

இவ்வாறு மறவர் பிறர் பொருளை வழிப்பறி செய்யாவிட்டால், வாழ இயலாது மடிந்து விடுவர். இதனை,

"................ ................ ................ யாவரும்
வழங்குநர் இன்மையின் வௌவுநர் மடிய"

(அகநா. 1:13-14)

என்பர். பகற்பொழுதில் மராப்பட்டையை மென்று நீர் வேட்கையைப் போக்கிக் கொள்வர்[126].

## வேட்டையாடுதல்

மறவர் பகலில் யாமரத்தின் கிளைகளில் உள்ள பார்ப்புகளை வில்லால் அம்பினை எய்து வேட்டையாடுவர்[127]. புலியால் கொன்று தின்னப் பெற்ற பெரிய யானையினது எஞ்சிய ஊனைக் கோலில் கோர்த்துக் கொண்டு வருவர்.[128]

**முதியோர் சூதாடல்**

நரையினையுடைய முதியோர் பகற்பொழுதில் பெரிய மன்றத்தின்கண் 'வல்லு' என்னும் கருவி கொண்டு சூதாடுவர்[129]

**மகளிர் வாழ்க்கை**

பாலையில் உள்ள சீறூரில் வாழும் மறவர் மகளிர் பகலில் மான்கள் தினை முதலியவற்றை உண்ணும் பொழுது அவற்றைத் துரத்திவிட்டு எஞ்சிய சிறிய உணவுப் பொருட் களைத் திரட்டுவர்[130] பருத்திக் கொட்டைகளை வைத்துண்ணும் உணவாகச் சேர்த்து வைப்பர்[131]

தினை முதலியற்றை உலக்கையால் குற்றும்போது உரலினின்று எழும் ஒலி மலையிலுள்ள ஆந்தை ஒலியோடு மாறிமாறி ஒலிக்கும். இதனை,

"கொடுநுண் ஓதி மகளிர் ஓக்கிய
தொடிமாண் உலக்கைத் தூண்டுரற் பாணி
நெடுமால் வரைய குடிஞையோ டிரட்டும்"

(அகநா.9 : 11-13)

என்பர் கல்லாடனார்.

**(iii) மாலை வாழ்க்கை**

மாலையில் மறவர் மகளிர் வீடுகளில் விளக் கேற்றுதலும் மறவர் கள்ளுண்டு களித்தலும் நடைமுறையாகும்.

**விளக்கேற்றல்**

ஞாயிறு மேற்கு மலையினைச் சேர்ந்து மறைந்திட மகளிர் மனையில் விளக்கின்கண் வெள்ளிய திரியைக் கொளுவுவர். இதனை,

"அகன்சுடர் கல்சேர்பு மறைய மனைவயின்
ஒண்டொடி மகளிர் வெண்திரிக் கொளாஅலிற்"

(அகநா. 47 :9-10)

என்பர் ஆலம்பேரிச் சாத்தனார்.

### கள்ளுண்ணல்

பொழுது சாய்ந்துவிட்டால் மறவர் கள்ளுண்டு களிப்பர். இருள் வரக் கள்விற்போர் மனையகத்தே நிற்பர். கள்ளிற்கு உரிய விலைப் பொருளுக்காக யானைக் கோட்டினை எடுத்து வருதல் குறித்து மன்றின்கண் விளையாடும் புதல்வனது புல்லிய தலையைத் தடவி ஏவுவர்[132].

### (iv) இரவு வாழ்க்கை

மறவர் இரவில் மாற்றார் ஊரில் உள்ள ஆநிரையைக் கவர்ந்து பங்கிட்டுக் கொள்வது நடைமுறையாகும்.

### ஆநிரைக் கவர்தல்

மறவர் இரவில் தீக்கொள்ளியுடன் அம்பினராகிச் சென்று மாற்றார் ஊரினைப் போரில் தொலைத்துப் பல ஆநிரையைக் கவர்வர்[133]. இவ்வாறு கொண்ட ஆநிரையைத் தங்களுக்குள் பகுத்துக் கொள்வர். பெரிய கற்பாறை முடுக்கில் ஆவின் தசையினை அறுத்துத் தின்பர்.[134]

எருதினைக் கொன்று கொழுப்புப் பொதிந்த தசையினை நெருப்பில் சுட்டு எடுத்து உண்பர். அவ்வூனைத் தின்று நீர் வேட்கை நீங்க முதிர்ந்த தோப்பிக்கள்ளைக் குடிப்பர். புலால் நீங்காத கையினராய்க் கழுவாத வாயினராய்ச் சிறிய ஊர்ப் பக்கத்தே கூத்தாடுவர்.[135]

## ஈ. மழவர் வாழ்க்கை

மழவர் நடைமுறை வாழ்க்கை ஆநிரை கவர் தலையும் வழிச்செல்வோரைக் கொள்ளையிடுதலையும் அடிப்படையாகக் கொண்டது. விடியற்காலையில் உணவின் பொருட்டு ஆநிரையைக் கவர்வர். அப்பசுக்களைத் தெய்வத்துக் குப் பலியிட்டு உணவாகக் கொள்வர். பகற்பொழுதில் வழிச் செல்வோரைக் கொள்ளையிடுவர். ஊன் சோற்றினை உணவாகக் கொள்வர்.

## காலையில் ஆநிரை கவர்தல்

மழவர் விடியற்காலையில் ஆக்களைக் கவர்வர்.[136] ஆநிரை கவரச் செல்லும்பொழுது வாயினின்றெழும் இருமலைத் தீர்க்கப் புற்று மண்ணை வாயில் அடக்கிக் கொள்வர்.[137]

பசுக்களைக் கவர்ந்து கொணர்ந்து தெய்வம் தங்கிய வேப்பமரத்தடியில் தடிவர். உதிரத்தைத் தூவிப் பலியிட்டுப் புலாலைப் புழுக்கி உண்பர்.[138]

## பகலில் ஆறலைத்தல்

வில்லினை இடப்பக்கத்தே தழுவிக்கொண்டு வழி வருவோரைப் பார்த்திருப்பர்.[139] பலகாலும் தூது செல்லும் பார்ப்பான் ஓலைச் சுருளுடன் வர அவன் கையில் உள்ளது பொன் ஆகுதலும் கூடும் எனக் கருதி, அப்பொழுதே கொன்று வீழ்த்துவர். அப்பார்ப்பானிடம் பொருள் ஒன்றும் இன்மையால் அவன் உடுத்தியிருக்கும் கந்தையைப் பார்த்துக் கையை நொடித்துச் செல்வர்.[140]

## ஊன்சோறு உண்ணல்

மழவர் பகலில் ஊன் சோற்றுடன் துவரைத் துவையலை உணவாகக் கொள்வர்.[141] உப்பு வணிகர் விட்டொழிந்த கல் அடுப்பில் நாற்றம் உண்டாக ஊனைப் புழுக்கி உண்பர்.[142]

## IV மருத வாழ்க்கை

மருத நிலம் வயலும் வயல் சார்ந்த பகுதியுமாகும். இங்கு வாழும் மக்கள் உழவர் எனப்பெறுவர். இவர்கள் பண்பட்ட வேளாண்மையைச் செய்வர். இவர்களது உழவு சார்ந்த நடைமுறை வாழ்க்கையைச் சங்க இலக்கியங்கள் நன்குணர்த்துகின்றன.

உழவுத்தொழில் வெய்யில் வெம்மை வருவதற்கு முன் செய்யக் கூடியதாகும். அதனால் உழவர் பொழுது விடிவதற்கு முன்பாகவே வயலுக்குச் சென்று விடுவர். இது இன்றும்

காணும் நடைமுறையாகும்.

உழவுத் தொடர்பான எச்செயலும் விடியற் காலையிலேயே தொடங்கி விடும். உழவர் விடியற் காலையில் எழுந்து மிகவும் சுறுசுறுப்பாகச் செயல்படுவர்.

உழவு, பருவ மழைக்கு ஏற்பச் செய்யப்பெறும். ஆடிப்பட்டத்தில் உழுது விதைத்து, தை மாதத்தில் அறுவடை செய்தல் பண்டைய வழக்கமாகும்,. அதனால் நீண்ட காலம் படிப்படியாகச் செய்யக் கூடிய நிகழ்வுகள் உழவுத் தொழிலில் நடைமுறையாக அமையும்.

உழவர் பருவ மழை பெய்ததும் நிலத்தை உழுதல், விதைத்தல், நாற்று நடுதல், களையெடுத்தல்,காவல் காத்தல், அறுவடை, நெற்கட்டுகளைக் களங்களுக்குக் கொண்டு வருதல், கடா விடுதல், நெல் அளத்தல் ஆகியன உழவு சார்ந்த நடைமுறை வாழ்க்கை நிகழ்வுகளாகும்.

களத்தில் கள் விற்றல், பண்டமாற்றாகக் கள் பெற்று உண்ணல், உழத்தியர் உணவு ஆக்குதல் என்பனவும் பகற்பொழுது வாழ்க்கை நிகழ்வுகளாக உள்ளன.

இம்மருத நிலத்தில் வாழும் தண்டலை உழவர், வலைஞர், பூ விலைஞர் ஆகியோரது பகற்பொழுது வாழ்க்கையும் காணத்தக்கதாக உள்ளது.

**உழுதல்**

உழவர் பெரிய மழை பெய்த இருள் புலர்ந்த காலைப்பொழுதில் ஏர்களால் இடமுண்டாக நிலத்தைக் கீழ்மேலாகப் புழுதி புரளும்படி உழுவர்.[143] அதற்காக உழவில் நன்கு நடைபயின்ற பெரிய எருதுகளை வீட்டின் வாயிலிலேயே நுகத்தில் பூட்டிக் கொண்டு செல்வர். கலப்பையின் முழுக் கொழுவும் மறையும்படி அழுக்கி உழுவர்.[144]

உழவர் இருள் புலர்ந்திடும் விடியற்காலையில் எருமைகள் நிலத்தே பாந்து செல்ல நெற்பயிர் நட்ட கழனியில் அரிதாளையுடைய நிலத்தைப் பிளந்து மண் பிறழும்படி உழுவர்.

அவ்வாறு உழும்பொழுது ஏர் ஓட்டும் ஓசை இடந்தோறும் பரக்கும்.[145]

உழவர் எருதுகளை அடித்து உழும்பொழுது ஏர்மங்கலப் பாட்டுப் பாடுவர். இதனை,

"எருதெறி களமர் ஓதை"

(மலைபடு.469)

என்பர்.

**விதைத்தல்**

பழங்கொல்லையை உழுத உழவர் வைகறையில் விதைக்கும் பொருட்டுச் சிறிய வட்டிகளில் விதையை எடுத்துச் செல்வர்.[146] மறுசால் உழுததனால் ஈரம் புலராத நன்செய்யில் விதைப்பதற்கு, விதைகளைக் கூடையில் கொண்டு செல்வர். இதனை,

"அரிகால் மாறிய அங்கண் அகன்வயல்
மறுகால் உழுத ஈரச் செறுவயின்
வித்தொடு சென்ற வட்டி"

(நற். 210 : 1-3)

என்பர் மிளை கிழான் நல்வேட்டனார்.

உழவர் செவ்விய மேட்டு நிலத்தைப் பிளந்து சென்ற நெடிய படைச் சாலிடத்து விதைப்பர்.[147] வயலில் விதைகளை விதைத்துவிட்டு மீளும் பொழுது அவ்வட்டி நிறைய மலர் பறித்து வருவர்.[148]

உழவர் விதைப்பதற்குக் கூலித் தொழிலாளர்களையும் பயன்படுத்துவர். அவர்கள் வித்தினை விதைத்து, அதற்குக் கூலியாக நெல் பெறுவர். இதனை,

"வித்திய உழவர் நெல்லொடு பெயரும்"

(ஐங்.3 : 4)

என்பர் ஓரம்போகியார்.

## நடுதல்

உழவர் விதைக்காமல் நாற்று வளர்த்துப் பக்குவமடைந்ததும் நடுதல் வழக்கமாகும். விதைப்பதை விட நடுதல் சிறந்ததாகும்.

உழவர் நுணணிய சேற்றில் முடியாக வீசிய நாற்றை நடுவர்[149]. மறுநாள் செய்தற்கிருக்கும் நடவு வினையின் காரணமாக விடியற்காலையில் எழுவர். வரால் மீன் குழம்புடன் அரிசிச் சோற்றைக் கையேந்தி வாய்கொள்ள உண்பர். நீர் நிரம்பிய வயலின்கண் நாற்றுகளை முடியவிழ்த்து நடுதற் பொருட்டு நடுநரோடு செல்வர். இதனை,

" ...................... ...................... தண்புலர் விடியல்
கருங்கண் வராஅற் பெருந்தடி மிளிர்வையொடு
புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ்சோறு
கவர்படு கையை கழும மாந்தி
நீருறு செறுவின் நாறுமுடி அழுத்தநின்
நடுநரோடு சேறி"

(நற். 60 : 3-8)

என்பர் தூங்கல் ஓரியார்.

## களையெடுத்தல்

வயலில் களையெடுக்கும் உழவுத் தொழிலாளர் 'துளர்எறி வினைஞர்' எனப்படுவர். இவ்வினைஞர் களைக்கொட்டினை உடைய கையினராய்க் கள்ளை நிறைய உண்டு களிப்பர்.[150] விதைத்த செய்யில் களைக்கொட்டு கொண்டு களையெடுத்தல் வழக்கமாகும். தண்ணீர் இல்லாதபொழுது இவ்வாறு களையெடுப்பர்.

நாற்று நட்ட வயலில் பயிர் செழித்து வளரும் பொழுது களையும் வளரும் அக்களையைக் கையால் பறிப்பர். நீரையுடைய செய்யில் உள்ள களையாகிய நெய்தலைப் பறித்து நீக்குவர்.[151] பயிர்கள் வளையும்படி ஒதுக்கிக் களைகளைப் பறிப்பர்.[152]

**காவல் காத்தல்**

வயலைக் காவல் காக்கக் காவலர் இருப்பர். இவர்கள் நெற்பயிரைத் தின்ன வரும் கால்நடைகளை ஓட்டுவர். நெற்பயிரைத் தின்ற முதிய பசுவினைப் பகன்றைக் கொடியால் கட்டிக் காஞ்சி மரத்தில் பிணிப்பர்.[153]

**அறுவடை**

நெல்லறுக்கும் உழவர் 'தொழுவர்' எனப்படுவர். இவர்களைக் 'களமர்' என்றும் கூறுவர். கூரிய வாயுடைய அரிவாளால் நெல்லினை அறிவர்.[154]

அறுவடை செய்யத் தொடங்கும்போது அக்கழனிகளில் வாழும் பறவை முதலிய சிற்றுயிர்கள் ஓடி உய்தற் பொருட்டுப் பறையை முழக்குவர். தண்ணுமை என்னும் கருவியையும் கொட்டுவர்.[155] தண்ணுமைகொட்டுதலை,

"வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ"

(மலைபடு. 471, நற். 350 : 1)

என்பர்.

**நெற்கட்டுகளைக் களங்களுக்குக் கொண்டு வருதல்**

உழவர் நெல்லினை அறுத்த பிறகு நெற்கட்டுகளைக் களங்களுக்குக் கொண்டு வருவர். களத்தே வெற்றிடம் அற நெற்கட்டுகளைக் கொண்டு போய்ப் போடுவர்.[156]

நெல் அறுத்த களமர் அசையும் பக்கங்களையுடைய பெரிய நெற்கட்டுகளைக் களங்களுக்குத் தூக்கிச் செல்வர். இதனை,

"அரிஞர் யாத்த அலங்குதலைப் பெருஞ்சூடு
கள்ளார் வினைஞர் களந்தொறும் மறுகும்"

(அகநா. 84 : 12-13)

என்பர். பசுமையாறும் பபு முற்றின செந்நெல்லை அறுத்து,

அகன்ற களங்களில் போராக உயர்த்துவர்[157].

**கடாவிடுதல்**

உழவர் நெற்கதிர்களைத் தரையில் அடித்து நெல்மணிகளை உதிரச் செய்வர். அதில் முழுவதும் உதிராது. அவ்வாறு மீதம் இருக்கக் கூடிய நெல்மணிகளை உதிரச் செய்வதற்கும் அரிந்த தாளானது மடங்கிக் கூலமாவதற்கும் மாட்டின் காலில் மிதிபடச் செய்வர். இதற்குக் கடாவிடுதல் என்று பெயர்.

கதிர் அடித்த நெற்தாளினைக் கீழே வட்டமாகப் பரப்பி அதில் நான்கைந்து மாடுகளை ஒன்றாகப் பிணைத்துச் சுற்றி வரச் செய்வர். மாடுகளின் குளம்பு பட்டு, ஒட்டியிருக்கும் நெல்மணிகள் உதிர்ந்துவிடும். அத்துடன் நெற்தாளானது மடங்கிக் கூலமாகிவிடும்.

உழவர் நாட்காலையில் நெற்சூட்டினை அழித்துக் கடாவிட்டு நெல்லைக் குவிப்பர். இதனை,

"நாட்கடா வழித்த நனந்தலைக் குப்பை"

(புறநா.353 : 9)

என்பர் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.

வைகறையில் ஆட்களை அழைத்துக் கொண்டு களத்துக்குச் செல்வர். வைக்கோலைப் பிரித்துக் கடாவிடுவர். அதை அலைத்தெடுத்து வலியற்ற நுண்ணிய கூலங்களை மேகம் போலத் திசையெங்கும் மறைக்கத் தூற்றுவர்[158]

நெற்கதிரின் போரினைப் பிரித்துக் கடாவிட்ட உழவர் கள்ளுண்டு அக்கடாக்களைக் கட்டவிழ்த்து விட்டுக் காற்றில் நெல்லினைத் தூற்றுவர்.[159] வைக்கோலையும் கூலத்தையும் அதனிடத்தினின்று நீக்குவர். அந்நெல்லை மேல்காற்றில் கையால் தூவித் தூற்றுவர். அந்நெற்பொலி வடதிசைக்கண் உள்ள மேருமலை போலத் தோன்றும்.[160]

### நெல் அளத்தல்

உழத்தியர் களத்தில் எருமைகளைக் கொண்டு கடாவிட்டு உதிர்த்த நெற்குவையில் அளப்பதற்காக மரக்கால்களைச் செருகி வைத்திருப்பர்.[161] இம்மரக்கால்களை 'அம்பண அளவை'[162] என்பர்.

### களங்களில் கள் விற்றல்

கள் விற்கும் மகளிர் களங்கள்தோறும் நாட்காலையில் கொண்டு சென்று கள் விற்பர். இதனை,

"................ ............ பசும்பொதித் தேறல்
இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கடொறும்"

(மலைபடு. 463-464)

என்பர். கள் விற்போர் கள்ளொடு வாளை மீனின் தடியை, வரால் மீனின் தடியோடு கலந்து கொடுப்பர்[163].

உழவர் நெல்லினைக் கொடுத்துக் கட்டெளிவைப் பெறுவர்[164]. இனிய கரும்பையும் அவலையும் விற்று அவற்றிற்கு மாறாக மான் தசையையும் கள்ளையும் பெறுவர். இதனை,

"தீங்கரும்போடு அவல்வகுத்தோர்
மான்குறையொடு மதுமறுகவும்"

(பொருந. 216-217)

என்பர் முடத்தாமக் கண்ணியார்.

### களங்களில் கள்ளுண்ணல்

உழவர் செய்த தொழில் வருத்தம் நீங்க, மாமரத்தின் காய்களைக் கொத்துகளிலிருந்து கிள்ளி எடுத்து அவற்றோடு புளிக்கும் பதனைச் சேர்த்தாக்கிய கள்ளைப் பருகுவர்[165].

### நெல் குற்றுதல்

உழவர் மகளிர் வேண்டும் பொழுது நெல்லை எடுத்துக் குற்றி அரிசியாக்குவர். இதனை,

"அடுமண் முகந்த வளவா வெண்ணெல்
தொடிமா ணுலக்கைப் பரூஉக்குற் றரிசி"

(புறநா. 399: 1-2)

என்பர் ஐயூர் முடவனார். இரும்புப் பூணிட்ட உலக்கையால் நெல்லினைக் குற்றி அரிசியாக்குவர்[166]

## உணவு நிலை

உழவர் விடியற்காலையில் பழஞ்சோற்றை உணவாகக் கொள்வர். இதனை,

" .............. ............. ............. வைகிற்
பழஞ்சோ றயிலும்"

(புறநா. 399: 10-11)

என்பர். வெண்ணெல் அரிசிச்சோறு சமைப்பர்[167]. அதனை நண்டின் கலவையோடு உண்பர்[168].

கொள்ளும் பயறும் பாலுடன் கலந்து ஆக்கிய அவிழ்க் கஞ்சியை உண்பர்[169]. மாமரத்தின் கனிகளைப் பிசைந்து புளிக்குழம்பு ஆக்குவர். வரால் இறைச்சியையும் வள்ளைக் கீரையையும் பாகற்காயையும் வற்றலோடு கலந்து உணவாகக் கொள்வர்[170]. வெள்ளிய சோற்றை மனையின்கண் உள்ள கோழிப்பெடையினாற் சமைத்த பொரியலோடு உண்பர்[171].

அவல் உழவருக்குரிய சிறந்த உணவாகும். மகளிர் அடுப்பில் பாலை உலையாக வார்த்து நெல்லின், விளைந்த கதிரை அவலாகக் குற்றுவர்[172]. இப்பசிய அவலை வயலிடத்து முற்றிய கரும்பின் பாகுடன் பாலினையும் கலந்து உண்பர்[173].

## தண்டலை உழவர்

மருத நிலத் தோப்பில் வாழ்பவர்களைத் தண்டலை உழவர் என்பர். இவர்களது இருப்பிடம் தென்னையின் வாடிய மடலால் வேயப்பட்டது. மஞ்சளையுடைய முற்றத்தையுடையது. இவர்கள் விருந்தினருக்குப் பலாப் பழத்தையும் தெங்கிள நீரையும் வாழைப்

பழத்தையும் பனை நுங்கையும் பிற இனிய பண்டங்களையும் கொடுப்பர். அவை வெறுத்தால் கிழங்குகளையும் கொடுத்து உண்ணச் செய்வர்[174].

***வலைஞர்***

மருத நில வலைஞர் வலையால் மீன் பிடிக்கும் பொழுது மிகுந்த ஆரவாரம் செய்வர். அவ்வாறு பிடித்த மீன்களை விலை கூறி விற்பர்[175].

**பூ விலைஞர்**

உழவர் பூஞ்செடிகளை நட்டுப் பயிர் செய்வர். இவர்களது இளமகளிர் குருக்கத்திப் பூவுடன் பித்திகைப் பூ விரவிய பூக்களைத் தெருவில் விலை கூறி விற்றுத் திரிவர்[176].

**தண்ணிழல் வாழ்க்கை**

உழவர் வாழ்க்கை 'தண்ணிழல் வாழ்க்கை' எனச் சிறப்பிக்கப் பெறும். இவ்வாழ்க்கை முறையை,

" அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்
நல்லானொடு பகடோம்பியும்
நான்மறையோர் புகழ்பரப்பியும்
பண்ணிய மட்டியும் பசுப்பதங் கொடுத்தும்
புண்ணிய முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக்
கொடுமேழி நசையுழவர்"

(பட்டினப். 200-205)

என்பர். இது உழவரது உயர்ந்த வாழ்க்கையை நன்கு எடுத்துரைக்கும்.

**V. நெய்தல் வாழ்க்கை**

கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தலாகும். இங்கு வாழும் மக்கள் பரதவர் எனப்படுவர்.

**பரதவர் பாக்கம்**

பரதவர் குடியிருப்புகள் பாக்கம் என வழங்கப்பெறும். இதனை,

" புலாஅன் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்து
இனமீன் வேட்டுவர்"

(அகநா.270 : 2-3)

என்பர். பரதவர் சேரி புலால் நாறும் தன்மையுடையது. இதனை,

"புலாலஞ் சேரிப் புல்வேய் குரம்பை "

(அகநா.200 : 2)

என்பர் உலோச்சனார். புல்லால் வேயப்பட்ட குறிய இறப்பினையுடைய (தாழ்வாரம்) குடிசைகளில் வாழ்வர். இதனை,

" குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்"

(அகநா.210 : 1)

என்பது உணர்த்தும்.

பரதவர் வேழக்கோலை நிரைத்து மரக்கொம்புகளை இடையிடையே கலந்து, தாழை நாரால் கட்டித் தருப்பைப் புல் வேயப்பட்ட குறிய தாழ்வாரமுடைய குடிலில் வாழ்வர்[177]. முள்ளிகளால் வேயப்பட்ட குறிய கூரையை உடைய வீடுகளிலும் வாழ்வர்[178].

**பரதவர் வாழ்க்கை**

பரதவர் வாழ்க்கை முழுவதும் கடலோடு தொடர்புடையதாகும். கடல் அலையின் தன்மை, காற்று, தட்பவெப்பநிலை இவற்றுக்கேற்ப கடலுக்குள் செல்வர். அதனால் காலை, பகல், இரவு ஆகிய எல்லாக் காலங்களிலும் மீன் பிடிக்கச் செல்வது நடைமுறை ஆகும்.

நாட்காலையிலும் பகலிலும் மீன்பிடிக்கச் செல்வோர் மாலையில் கரை திரும்புவர். இரவில் மீன் பிடிக்கச் செல்வோர் நாட்காலையில் கரை திரும்புவர்.

பரதவர் மீன் பிடித்தலோடு உப்பு விளைத்தல், முத்தெடுத்தல் போன்ற செயல்களிலும் ஈடுபடுவர். மகளிர் பகற்பொழுதில் பரதவர் பிடித்து வந்த மீன்களை விற்பர்; மீதமுள்ளவற்றைக் காய வைப்பர். பொழுது போக்காகப் பல விளையாட்டுகளை ஆடி மகிழ்வர். கடலையே நம்பி வாழும் பரதவர் நடைமுறை வாழ்க்கை நாட்காலை, பகல், மாலை, இரவு என்ற பொழுதுகளில் காணத்தக்கதாக உள்ளது.

### அ. நாட்காலை வாழ்க்கை

பரதவர் நாட்காலையில் மீன் பிடிக்கச் செல்வதும், மீன் பிடித்து வருதலும் அவற்றைப் புலர்த்தலும், விலை கூறி விற்றலும் நடைமுறையாக உள்ளது.

### மீன்பிடித்தல்

பரதவர் நாட்காலையில் தோணியில் சென்று மீன் வேட்டையாடுவர். இதனை,

"வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி
நாள்வேட்டு எழுந்த நயனில் பரதவர்
வைகுகடல் அம்பி"

(அகநா.187 : 21-23)

என்பர் மாமூலனார்.

காலை வேட்டத்திற்குச் சென்ற புற்கென்ற தலையினையுடைய பரதவச் சிறுவர் நுண்ணிய கயிற்றாலாகிய வலையில் மீன் வேட்டையாடுவர். இதனை நக்கீரர்,

" ........... .............. நாட்புலம் போகிய
கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்
நுண்ஞாண் அவ்வலை"

(அகநா. 290 : 2-3)

என்பர்.

இளையரும் முதியருமாகிய நுளையர் சுற்றத்துடன் சேர்ந்து கடலில் மீன்பிடிக்கச்செல்வர். வலையால் மீன்களைப் பிடித்து ஆரவாரம் பெருகக் கரைக்கு இழுத்து வருவர்[179]. பெரிய மீன்களை எறியுளி கொண்டு தாக்கிப் பிடிப்பர்[180].

நாட்காலையில் வலையினால் மீன்களை அதிகமாகப் பிடித்த பரதவர் அவற்றை நுண்ணிய மணலிடத்தே புலர்த்துவர்[181]. தம்மிடம் வந்து இரப்போர்க்குக் கலன்கள் நிறைய மீன்களைக் கொடுப்பர்[182].

### மீன் விற்றல்

நாட் காலையில் பிடித்து வந்த மீன்களைப் பல கூறுகளாகச் செய்து விலை கூறி விற்பர்[183]. இவ்வாறு விலை கூறுதலைக் கொள்ளை சாற்றுதல் என்பர்[184]. பரதவர் பிடித்து வந்த மீன்களைத் தங்கைமார் தெருக்களில் இன்ன விலையின என்று கூறி விற்பர்[185]. பசிய மீனை விற்று அதற்கு ஈடாக வெண்ணெல்லைப் பெறுவர். இதனை,

"பசுமீன் நொடுத்த வெண்ணெல்"

(அகநா. 340 : 14)

என்பர். பரணரும்,

"மீனொடுத்து நெற்குவைஇ"

(புறநா. 343 : 1)

எனக் கூறுவர்.

### ஆ. பகல் வாழ்க்கை

பரதவர் பகற்பொழுதில் மீன் பிடிக்கத் தகும் பதத்தை நோக்கியிருப்பர். நல்ல பதத்தில் கடலுக்குள் சென்று மீன் பிடித்து வருவர். அம்மீன்களை அனைவருக்கும் பகுத்துக் கொடுப்பர். உப்பளத்தில் உப்பு விளைவிப்பர். கடலில் முத்துக் குளிப்பர்.

பரதவ மகளிர் மீன் உணக்குவர்; உணவு ஆக்குவர். வண்டல், குரவை, ஊசல் போன்ற விளையாட்டுகளை ஆடி மகிழ்வர்.

### பதம் நோக்கியிருத்தல்

பரதவர் புன்னை மரத்தின் நிழலில் தங்கிக் கடலில் புகுவதற்கான செவ்வியை எதிர் நோக்கியிருப்பர். அப்பொழுது சிக்குண்டு கிடக்கும் வலையை மணலில் பரப்பிச் செம்மைப்படுத்துவர். அவ்வாறு செவ்வியை எதிர் நோக்கியிருத்தலை 'ஒண்பதம் நோக்கி'[186] என்பர் அம்மூவனார்.

### மீன் பிடிக்கச் செல்லல்

பரதவர் தோணியில் வலிய நூற்கயிற்றால் செய்யப்பட்ட

வலையைக் கொண்டு மீன்பிடிக்கச் செல்வர்[187].

### மீன் பிடித்து வருதல்

பரதவர் இனத்து இளையர் படகின் மேல் ஏறிக் கடலகத்தே சென்று வலை வீசிச் சுறா மீன்களோடு வலிய பெருமீன்களையும் பிடிப்பர். அவற்றைத் தம் படகு கொள்ளுமாறு துண்டித்த துண்டங்களாகிய ஊன் பெய்த தோணிகளோடு வந்து மணற்பரப்பில் இறங்குவர்[188]. அவ்வாறு படகில் சென்று பகலில் மீன்பிடித்து வருதலை,

" ...................... .................. ............ திண்டிமில்
எல்லுத்தொழில் மடுத்த வல்வினைப் பரதவர்"

(அகநா. 340: 18-19)

என்பர் நக்கீரர்.

### மீன் பகுத்துக் கொடுத்தல்

பரதவர் மீன் வேட்டை நன்கு கைகூடியதனால் தம் கடற்கரையூரில் வலையின் பயனைப் பாராட்டிக் கூறி அயிலை மீனை அனைவருக்கும் பகுத்துக் கொடுப்பர்[189]. வேட்டையாடி வந்த சுறா மீன் கொள்ளையினைப் பாக்கத்தில் பலருக்கும் பகுத்து வழங்குவர்[190].

### மீன் பிடிக்கச் செல்லாதிருத்தல்

சில சமயங்களில் பரதவர் பகலில் மீன் பிடிக்கச் செல்லா திருத்தலும் உண்டு. இதனை,

" ................ ................ திமில்தொழில் மறப்பச்
.................. ........................ ........................ .......................
எல்லை பைப்பயக் கழிப்பி"

(அகநா. 260: 5-10)

என்பது உணர்த்தும்.

### உப்பு விளைத்தல்

பரதவர் உப்பினை ஏரால் உழுவதன்றிக் கையால் பாத்தி கட்டி விளைவிப்பர். இவர்களை,

"உவர்விளை உப்பின் உழாஅ உழவர்"

(நற். 331: 1)

என்பர் உலோச்சனார்.

பரதவர் உப்பளத்தில் சிறுசிறு பாத்திகளில் உப்பினை விளைவிப்பர்[191]. நேர்நேராக வகுக்கப்பட்ட சிறுசிறு பாத்திகளில் கடல் நீரைப் பாய்ச்சி உப்பு விளைவிப்பர். இவ்வாழ்க்கையை,

"நேர்கட் சிறுதடி நீரின் மாற்றி
வானம் வேண்டா வாழ்வின்எம்
கானலஞ் சிறுகுடி"

(நற். 254: 10-12)

என்பர். பரதவர் பெரிய உப்பங்கழியாய செய்யில் உழாமலேயே கல் உப்பினை விளைவிப்பர். இதனை,

"இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த
வெண்கல் உப்பு"

(அகநா. 140: 2-3)

என்பர் அம்மூவனார்.

## உப்பு விற்றல்

பரதவர் விளைவித்த உப்பினை உப்பு வணிகரிடம் விற்பர். அதற்காக அவ்வணிகரது வரவு நோக்கி உப்பினைத் தொகுத்துக் குவித்து வைத்திருப்பர். இவ்வுப்பினை விற்று, மாறாக வெண்ணெல் பெறுவர்[192].

## முத்தெடுத்தல்

பரதவர் பகலில் பெரிய கடற்பரப்பில் சுறா மீனை ஒதுக்கி முத்தினை மூழ்கி எடுப்பர். அம்முத்தினை விலை கூறி விற்பர். இதனை,

"வலைபடு முத்தம் பரதவர் பகரும்"

(ஐங். 195: 1)

என்பர் அம்மூவனார்.

**மகளிர் மீன் உணக்கல்**

பரதவ மகளிர் பகற்பொழுதுகளில் மீன் வற்றலை உணக்குவர். அதனைக் கவர வரும் புள்ளினங்களை விரட்டும் பொருட்டு அங்கேயே தங்குவர். சுறா மீன்களின் அறுத்த தசைகளை உணக்குவது குறித்து, அவற்றைக் கவர வரும் புள்ளினங்களை ஓட்டிக் காவல் புரிவர்[193].

இறால் மீன் உணங்கலைக் கவர வரும் புள்ளினங்களை ஓட்டும் செயலில் பகற்பொழுது கழியும். இதனை,

"படுபுள் ஓப்பலின் பகல்மாய்ந் தன்றே"

(நற். 49: 4)

என்பர் நெய்தற்றத்தனார்.

பரதவர் மகளிர் தந்தை கடற்பரப்பினின்று கொண்டு வந்த மீன் வற்றலைக் கவர வரும் பறவைகளைப் பகலில் ஓட்டுவர்[194]. பகற்குறி நேரும் தோழி,

"...................... .................. யாமே எந்தை
புணர்திரைப் பரப்பகம் துழைஇத் தந்த
பன்மீன் உணங்கற் படுபுள் ஓப்புதும்"

(அகநா. 80: 4-6)

எனத் தலைவனுக்குக் கூறுவது மகளிர் பகற்பொழுதில் மீன் உணக்கலை நடைமுறையாகக் கொள்வதை எடுத்துரைக்கும்.

**உணவு நிலை**

பரதவர் இறால் மீன்களின் சுடப்பட்ட தசையினையும் ஆமையைப் புழுக்கின இறைச்சியையும் உணவாகக் கொள்வர்[195]. பரதவ இளமகளிர் தம் தந்தைக்கு உப்பு விற்றுக் கொண்ட நெல்லினால் சமைத்த வெண்சோற்றை அயிலை மீன் இட்டு ஆக்கிய புளிங்கறியினைச் சொரிந்து கருவாட்டுடன் உணவு இடுவர்[196].

பரதவ மகளிர், குற்றாத கொழியலரிசியைக் களியாகத் துழாவிக் கூழாக அடுவர். அதனை மலர்ந்த

வாயுடைய தட்டுப் பிழாவில் இட்டு உலரும்படி ஆற்றுவர். நல்ல முளையை இடித்துச் சேர்ப்பர். அதனை இரண்டு பகலும் இரண்டு இரவும் கழித்துச் சாடியில் இட்டு வெந்நீரில் வேக விடுவர். நெய்யரியால் வடிகட்டிக் கள்ளைப் பிரித்தெடுப்பர்[197]. நுளையர் மகளிர் காய்ச்சி அரித்த தேறலையும் உலர்ந்த குழல் மீனையும் எப்பொழுதும் தம் மனையில் செய்து வைத்திருப்பர்[198].

### மகளிர் பகற் பொழுதுபோக்கு

பரதவ இளமகளிர் பகல் முழுவதும் கவலையின்றி மகிழ்ச்சியுடன் விளையாடி மகிழ்வர். தாழை விழுதாலாய கயிற்றால் கொன்றை மரத்தின் உயர்ந்த கிளையில் கட்டித் தொங்கவிட்ட ஊசலில் ஆடுவர். கடல் நீரில் ஆயத்தாரோடு விளையாடுவர். மணலில் குரவையாடுவர்[199].

வாடைக் காற்று குவித்த உயர்ந்த மணல் மேடாகிய கரையில் ஆயத்தாரோடு வண்டல் இயற்றுவர்[200]. ஆயத்தாரோடு கடலில் ஒருங்கு விளையாடியும் கடற்கரைச் சோலையில் சிறுவீடு கட்டியும் சிறுசோற்றை அட்டுக் குவித்தும் ஆடுவர்[201].

மகளிர் பொழிலின்கண் சிற்றில் இழைத்து விளையாடுதலை,

"பொய்கை சூழ்ந்த பொழின்மனை மகளிர்
கைசெய் பாவை"

(அகநா. 181: 18-19)

என்பர். இங்கு மனைமகளிர் என்பது சிறுமிகளைக் குறிக்கும்.

பரதவ மகளிர் சிறுகுடியில் ஊதுகொம்பு ஒலிக்க விளையாட்டுக்குரிய பாவையை நீர் உண்ணும் துறையில் கொணர்ந்து வைத்துக் குரவையாடுவர்[202].

பேதைப் பருவத்து மகளிர் காமக் குறிப்பில்லாத விளையாட்டையும் அது வெறுப்புழிக் குரவையினையும் ஆடுவர். இதனை,

"பொய்த லாடிய பொய்யா மகளிர்

குப்பை வெண்மணற் குரவை நிறூஉம்"

(ஐங். 181: 2-3)

என்பர் அம்மூவனார்.

காமக்குறிப்பில்லாத பேதை மகளிர் பலர் கூடி இவள் கணவன் இவள் மனைவி என்று தம்முட் கூறிக் கொண்டு, சிறுவீடு கட்டி அட்டும் உண்டும் ஆடும் ஆட்டத்தைப் பொய்தல் ஆடுதல் என்பர். இவ்விளையாட்டில் ஆடவராகிய இளஞ்சிறாரும் சேர்ந்து விளையாடுதலும் உண்டு. ஆடவரோடு கூடாது மகளிரே ஆடவர்க்கு மாறாக மற்றோரிடத்தே ஆடுதலும் உண்டு. இதனை,

"................ ................ ............... திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையெனல் அறியா மாயமில் ஆயமொடு"

(புறநா. 243: 1-5)

என்றும்

"மையாடல் ஆடன் மழபுலவர் மாறெழுந்து
பொய்யாட லாடும்"

(பரி. 11: 88-89)

என்றும் கூறுவர். இதில் குரவையானது எழுவரேனும் எண்மரேனும் கைகோத்து ஆடும் கூத்து ஆகும். இதில் மகளிர் தங்களுக்குள் ஒருத்தியைக் கணவன் என்றும் ஒருத்தியையோ அல்லது பலரையோ மனைவி அல்லது மனைவியர் என்றும் கற்பித்துக் கொண்டு காமக் குறிப்பிலரேனும் காமச்சுவை ததும்பும் பாடல்களைப் பாடிக் கொண்டு ஆடுதலாகும்.

## இ. மாலை வாழ்க்கை

பரதவர் மாலையில் கடலில் மீன் பிடித்துத் திரும்புவர். மனைகளில் விளக்கேற்றுவர். கடற்கரையில் விளக்கொளியில் மீன் விற்பர். கள்ளுண்டு மகிழ்வர்.

**மீன் பிடித்து வருதல்**

பரதவர் கடலில் மீன்பிடித்துக் கொண்டு மாலை நேரத்தில் கரைக்குத் திரும்புவர். அலையில் விளையாடியமையால் தளர்ச்சியுற்ற மகளிர் உப்பு மேட்டில் ஏறி நின்று இருள் வர, கரைக்கு மீண்டு வரும் படகுகளை எண்ணுவர்[203].

**விளக்கேற்றுதல்**

பரதவர் மாலைப் பொழுதில் மீன்களின் கொழுப்பைக் காய்ச்சிப் பெற்ற நெய் விளக்குகளை மனைகளில் ஏற்றுவர். இதனை,

> "................... ..................... புன்கண் மாலை
>
> .................. .................... ...................... .................
>
> மீனிணம் தொகுத்த நெய்விளக் குறுப்ப"
>
> (நற். 215: 3-5)

என்பர் மதுரைச் சுள்ளிப்போதனார்.

**மீன் விற்றல்**

பரதவர் கடற்கரையின்கண் மீன் எண்ணெய் சொரிந்து, கிளிஞ்சலை அகலாகக் கொண்ட சிறுசுடர் விளக்கில், கொழுவிய மீன்களைக் குவிப்பர். இதனை,

> "மீனெய் அட்டிக் கிளிஞ்சல் பொத்திய
>
> சிறுதீ விளக்கில்"
>
> (நற். 175: 3-4)

என்பர் மதுரைக் கணக்காயனார்.

**கள்ளுண்ணல்**

ஞாயிறு மேலை மலையில் மறையவும் இருள் மங்கிய மாலைப் பொழுதில் பரதவர் கட்குடித்து மகிழ்வர்[204].

**ஈ. இரவு வாழ்க்கை**

பரதவர் இரவில் மீன் பிடிக்கச் செல்வர். மீன் பிடித்து வருவர்.

***மீன் பிடிக்கச் செல்லல்***

பரதவர் இரவில் விளக்குகளுடன் படகில் மீன் பிடிக்கச் செல்வர். இரவு முழுவதும் மீன் வேட்டையாடுவர். இரவில் மீன்பிடிக்கப் படகில் தீச்சுடர் ஏற்றுதலை,

"மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளிசுடர்"

(அகநா. 65: 11)

என்பர் மாமூலனார். இதனை உலோச்சனாரும் குறிப்பிடுவர்[205]. தோழி தலைமகனுக்கு,

"எல்லிமிழ் பனிக்கடல் மல்குசுடர்க் கொளீஇ
எமரும் வேட்டம் புக்கனர்"

(நற். 67: 8-9)

என்பதால் பரதவர் இரவில் கடலின்கண் பலவாகிய விளக்குகளைக் கொண்டு மீன்பிடிக்கச் செல்லுதல் தெளிவாகும்.

கடலில் பெரிய மீன்களைப் பிடித்து வாழும் சிறுகுடியினராய பரதவர் இரவில் தம் படகுகளில் ஏற்றிய விளக்குகள் கதிரவன் ஒளியை நிகர்க்கும் என்பர் தாயங்கண்ணனார்[206].

இரவில் மீன் பிடிக்கச் செல்லும் பொழுது விரைவாகச் சென்று தைக்கக் கூடிய எறியூசிகளைப் படகுகளில் கயிறு அடியில் சேர்த்துக் கட்டியிருப்பர். அதில் ஒள்ளிய விளக்குகளை ஏற்றி நள்ளிரவில் மீன் வேட்டைக்குச் செல்வர்[207].

***மீன் பிடித்துவருதல்***

பரதவர் திசை மாறிச் சென்று விடா வண்ணம் கரையை நோக்கி வருதலுக்குக் கரையின் உயர்ந்த இடத்தில் தீச்சுடர் கொளுத்துவர். இரவு முழுவதும் இச்சுடர் அணையாமல் பரதவருக்கும் கலங்களுக்கும் வழிகாட்டும். இதனைக் கலங்கரை விளக்கம் என்பர்.

வளைந்த கட்டுமரத்திலேறிக் கடலில் சென்ற பரதவர் நீண்ட தூண்களையுடைய மாடத்தில் எரியும் தீச்சுவாலையை நோக்கி வருவர். இதனை,

"நெடுங்கால் மாடத் தொள்ளெரி நோக்கி"

(பட். 111)

என்பர்.

## VI நானிலப் பொதுமை வாழ்க்கை

நானிலங்களுக்கும் பொருந்தும் சில பொதுவான நடைமுறை வாழ்க்கைக் கூறுகளைச் சங்க இலக்கியங்கள் விளக்குகின்றன. செல்வர், இல்லற மகளிர், கைம்மை மகளிர் தொடர்பாக இக்கூறுகள் அமைந்துள்ளன.

### அ. செல்வர் வாழ்க்கை

செல்வர் முரசு, தேர், புரவி ஆகியன கொண்டிருத்தல் நடைமுறையாகும். இவர்கள் உயர்ந்த உணவினைக் கொள்வர். மகிழ்ச்சியாகப் பொழுது போக்குவர். ஏவிய பணிகளைச் செய்ய ஏவலர்களை வைத்திருப்பர். இவர்கள் செல்வத்தை நுகர்ந்து வாழும் வாழ்க்கையைத் 'துய்த்தியல் வாழ்க்கை'[208] என்பர் கயமனார்.

### முரசம், புரவி, தேர்

செல்வர் அன்றாட வாழ்வில் பயன்படுத்தும் முரசம், புரவி,தேர் என்பன சமுதாய மதிப்பைப் பறைசாற்றுவனவாகும். பெருஞ்செல்வர் அரசரைப் போல முரசம் வைத்திருப்பர். தெருவில் செல்லும்பொழுது அம்முரசம் ஒலிக்கும். புரவியில் கவரியை இணைத்திருப்பர். இதனை,

"முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டு
மூட்டுறு கவரி தூக்கி"

(அகநா. 156: 1-2)

என்பர் ஆவூர் மூலங்கிழார்.

செல்வர் விரைந்து செல்லும் தேரினை நாள்தோறும் பயன்படுத்துவர். இதனை,

" .................. ................ ................... செல்வர்
கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்"

(அகநா. 326: 3-4)

என்பர். 'கடுந்தேர்ச் செல்வர்'[209] என்பதும் செல்வரது இயல்பை விளக்குவதாகும்.

**உணவு**

செல்வர் மணிகள் இழைத்த பொற்கலத்தில் உணவு உண்பர். இச்செல்வச் செழிப்பான வாழ்க்கையை,

" ................ .............. .......... தேம்பெய்து
மணிசெய் மண்டைத் தீம்பால் ஏந்தி
ஈனாத் தாயர் மடுப்பவும் உண்ணாள்
நிழற்கயத் தன்ன நீள்நகர் வரைப்பின்
எம்முடைச் செல்வமும் உள்ளாள்"

(அகநா. 105: 4-8)

என்பர். மகட்போக்கிய செவிலித்தாயரின் புலம்பல் செல்வ மகளிரின் நடைமுறை வாழ்க்கையை எடுத்துரைக்கும். செல்வ மகளிர் பெரிய மனையில் சிலம்பு ஒலிக்க ஆயமகளிருடன் பந்து எறிந்து விளையாடிக் கொண்டு உணவு கொள்வர். செவிலித் தாயர் அம்மகளிரை அழைத்துப் பாராட்டிக் கிண்ணத்தில் உள்ள பாலை "என் பகுதிக்கு இதை உண்பாயானால் இனி ஒரு கால், உன் தந்தையின் பகுதிக்கும் உண்பாயாக"[210] என உண்பிப்பர். இத்தகைய மனையைப் 'பெருஞ்சோற்று இல்லம்'[211] என்பர்.

## பொழுதுபோக்கு

செல்வச் சிறுவர் உள்ளே பரல் இடப்பட்ட பிளந்த வாயையுடைய தவளை வாய்க் கிண்கிணி ஒலிக்கத் தெருவில் விளையாடுவர்[212]. பொற்றாலி அணிந்து, தோளில் மாட்டிய அரிப்பறையில் குருவியின் வடிவமைய அமைத்த கண்ணை ஓயாமல் அடித்து விளையாடுவர்[213].

செல்வ மகளிர் மனையில் சிறுபொழுது பந்தாடியும், ஆயத்தாரோடு இணைந்து கழங்காடியும் பொழுது போக்குவர்[214]. மாளிகை மாடத்து வேதிகையில் இருந்து விளையாடுவர். இதனை,

" ..................... .................... ............. மாடத்

திலங்குவளை மகளிர் தெற்றி யாடும்''

(புறநா. 53: 2-3)

என்பர். தெற்றி என்பது கைகோத்தாடும் குரவையாகும்.

**ஏவலர்**

செல்வர் தம் மனையில் குறுந்தொழில்கள் செய்யச் சிறுவர்களை வைத்திருப்பர். இவர்களைச் 'சிறுதொழில் மகாஅர்'[215] என்பர். குற்றேவல் செய்யும் இவ்வினைஞர்களைச் 'சிறுகுறுந் தொழுவர்'[216] என்றும் கூறுவர்.

ஏவலர் மனையில் அம்மனைக்குரியோர் ஏவும் சிறுசிறு தொழில்களைச் செய்வர். கொள் போன்ற நிறமுடைய சாத்தம்மியில் கத்தூரி முதலிய பசுங்கூட்டினை அரைப்பர். இதனை,

"கடியுடை வியனகர்ச் சிறுகுறுந் தொழுவர்
கொள்ளுறழ் நறுங்கல் பலகூட்டு மறுக"

(நெடுநல். 49-50)

என்பர்.

செல்வர் தம் மனையில் குற்றேவல் செய்ய மகளிரையும் வைத்திருப்பர். இவர்களைச் 'சிறு தொழு மகளிர்' என்பர். இவர்கள் கொறுக்கைச்சி என்னும் வேழத்தின் உட்துளையுடைய திரண்ட தண்டின்கண் அஞ்சனம் பெய்வர். இதனை,

"ஓங்குபூ வேழத்துத் தூம்புடைத் திரள்காற்
சிறுதொழு மகளிர் அஞ்சனம் பெய்யும்"

(ஐங். 16: 1-2)

என்பர் ஓரம்போகியார்.

## ஆ. இல்லறமகளிர் வாழ்க்கை

இல்லற மகளிர் பகலில் காக்கைக்குப் பலியிடுவர். ஊருணியில் நீர் எடுத்து வந்து, தேற்றா விதை கொண்டு தேற்றுவர். மாலையில் வீடுகளில் விளக்கேற்றுவர்.

**காக்கைக்குப் பலியிடுதல்**

இல்லற மகளிர் நாள்தோறும் காக்கைக்குப் பலியிடுதல் நடைமுறையாகும். பெடைக்காக்கை குஞ்சினைத் தழுவிச் சுற்றமாகிய ஏனைக் காக்கைகளைக் கரைந்து கடுகு பொரிக்கப்பட்ட செந்நெல்லரிசியாகிய வெண்சோற்றினைத் தெய்வத்துக்கு இடும் உண்பலியோடு ஒருங்கு உண்டற் பொருட்டு மனை முன்றிலில் தங்கியிருக்கும்[217]. இவ்வாறு வெண்ணெல்லரிசிச் சோற்றைக் காக்கைக்குப் பலியாகக் கொடுத்தலை,

"விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே"

(குறுந். 210: 6)

என்பர். பலியுணவு உண்ட காக்கைகளை,

" ................. ............... செஞ்சோற்ற பலிமாந்திய
கருங்காக்கை"

(பொருந. 183-184)

என்றும்

"........... ............ பலியுண் காக்கை''

(நற். 281: 1)

என்றும் கூறுவர்.

நண்பகலில் பலிச் சோற்றினை அருந்திய காக்கைகள் மாலையில் கடவுள் உறையும் ஆலமரத்தின் கிளைகளில் வந்து தங்குதலை,

" ................ ................. கடவுள் ஆலத்து
உகுபலி அருந்திய தொகுகருங் காக்கை
புன்கண் அந்திக் கிளையொடுஞ் செறிய''

(நற். 343: 4-6)

என்பர் கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார்.

**ஊருணி நீர் தேற்றல்**

ஊருணி என்பது மக்கள் பருகுவதற்குரிய நீர்

எடுக்கும் இடமாகும். ஒவ்வொரு ஊரிலும் ஊருணி அமைந்திருக்கும். ஊருணி நீர் மண்ணின் தன்மைக்கேற்ப நிறம் பெறும். செம்மண் நிலத்தில் தண்ணீர் செந்நிறமாக இருக்கும். இதனை 'மண்டி' என்பது நாட்டுப்புற வழக்கு. இம்மண்டியை வடிகட்ட இயலாது. மண்பானையில் நீர் எடுத்து வந்து அதைத் தேற்றா விதை கொண்டு தேற்றும் பொழுது அந்நீர் திரிந்து மண்டி முழுவதும் பானையின் அடியில் தங்கி விடும். நீர் தெளிவாக இருக்கும்.

மகளிர் தினமும் ஊருணியில் நீர் எடுத்து வந்து அதனைத் தேற்றிப் பயன்படுத்துவது நடைமுறையாகும். மகளிர் உண்ணுதற்குரிய நீரைத் துறைகளில் சென்று கொணர்வதை 'உண்டுறை மகளிர்' [218] என்பர் பரணர்.

மகளிர் கொணர்ந்த நீரைத் தேற்றா விதை கொண்டு கலத்தே மெல்லத் தேற்றித் தெளியச் செய்வர். இதனை,

"கலஞ்சிதை யில்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போல் தெளிந்து"

(கலித். 142: 64-65)

என்பர் நல்லந்துவனார்.

## மாலையில் விளக்கேற்றுதல்

மகளிர் நாள்தோறும் மாலைப்பொழுதில் வீடுகளில் விளக்கேற்றித் தெய்வத்தை வழிபடுதல் நடைமுறையாகும். இம்மகளிர் செந்தீயால் விளக்கு ஏற்ற மாலை வந்ததை ,

"செந்தீச் செவ்வழல் தொடங்க"

(கலித். 119: 13)

என்பர். விளக்கினை நெய் வார்த்து ஏற்றுவர். இதனை,

"கயலே ருண்கட் கனங்குழை மகளிர்
கைபுனையாக நெய்பெய்து மாட்டிய
சுடர்துய ரெடுப்பும் புன்கண் மாலை"

(குறுந். 398: 2-4)

என்பர். முல்லைப் பாட்டு,

" .................. ................. .................. மங்கையர்
நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக்
கையமை விளக்க நந்துதொறு மாட்ட"

(முல்லைப். 47-49)

என்று விளக்கும்.

மகளிர் விளக்கேற்றும் பொழுது பேய்களுக்காகப் பூப்பலியிடுதலும் நடைமுறையாகும். மாலைப் பொழுதில் பேய்கள் மன்றம் நோக்கி வரும் என்ற கொள்கையால் பெண்கள் மனைகளில் தெருக்களில் தினமும் விளக்கேற்றிப் பூச் சொரிவர். அப்பூவாகிய பலியைப் பேய்கள் ஏற்றுண்ணும்.

இதனை,

" .............. ............... மலர்ப்பலி உணீஇய
மன்றம் போதரும் புன்கண் மாலை"

(நற். 73. 3-4)

என்பர் மூலங்கீரனார்.

## இ. கைம்மை மகளிர் வாழ்க்கை

கணவனை இழந்த மகளிர் கைம்மை நோன்பு நோற்பர். இம்மகளிர் கூந்தல், வளை, அணி முதலியவற்றைக் களைவர். பனி நீரில் நீராடுவர். நூல் நூற்பர். உப்பில்லாத உணவை உண்பர். கற்படுக்கையில் துயிலுவர்.

### கூந்தல் களைதல்

கைம்மை மகளிர் உணவு, உடை, உறையுள் போன்றவற்றில் சில கட்டுப்பாடுகளைக் கொண்டு வாழ்வர். கைம்மை நோன்பு மேற்கொண்டவுடன் தம் அழகிய கூந்தலைக் கொய்து விடுவர். இதனைக் கல்லாடனார்,

"ஒண்ணுதல் மகளிர் கைம்மை கூர
அவிரறல் கடுக்கு மம்மென்
குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே"

(புறநா. 25: 12-14)

என்பர்.

**வளை களைதல்**

கைம்மை மகளிர் கூந்தலோடு வளையலையும் களைந்து விடுதல் நடைமுறையாகும். இதனை,

"கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி"

(புறநா. 250: 4)

என்பர் தாயங்கண்ணியார்.

**அணி அணியாமை**

கைம்மை மகளிர் அணிகலன் ஒன்றும் அணிவது இல்லை. அதனால் இவர்களைக் 'கழிகல மகடூஉ' என்பர். ஆவூர் மூலங்கிழார்,

"கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய
கழிகல மகடூஉ"

(புறநா. 261: 17-18)

எனக் கூறுவர். இவர்களை, ஆளில் பெண்டிர்[219], உயவற் பெண்டிர்[220] என்றும் கூறுவர்.

**பனி நீராடல்**

கைம்மை மகளிர் அன்றாட நோன்பு வாழ்க்கையில் குளிர்ந்த நீரில் நீராடுதல் நடைமுறையாகும்[221].

**அன்றாட உணவு**

கைம்மை மகளிர் பிடி யானையின் அடி போன்ற சிறிய இடத்தை மெழுகி, இலையிட்டு அதன்மேல் தருப்பைப் புல்லை வைத்துச் சுவையில்லாத உணவை உண்பர். இதனை வெள்ளெருக்கிலையார்,

"பிடியடி யன்ன சிறுவழி மெழுகித்
தன்னமர் காதலி புன்மேல் வைத்த
இன்சிறு பிண்டம்"

(புறநா. 234: 2-4)

என்பர். தினமும் பசிய இலையை உணவாகக் கொள்வர்[222].

பழைய சோறு, நெய்யில் பொரிக்காத வெள்ளரிக்காய், எள், புளி, வேளையிலை கலந்து செய்த வேவை ஆகியவற்றை உணவாகக் கொள்வர். இதனை,

"அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட
காழ்போ னல்விளர் நறுநெய் தீண்டா
தடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாக"

(புறநா. 246: 4-5)

என்பர் பெருங்கோப்பெண்டு.

இவ்வுணவையும் கைம்மை மகளிர் வேளா வேளைக்கு உண்பதில்லை. எப்பொழுது உண்ணத் தோன்றுகிறதோ அப்பொழுது உண்பர்.

கைம்மை மகளிர் புல்லரிசியினை இன்னாத வைகும் பொழுதில் உண்பர். இதனை ,

" கொழுநன் மாய்ந்தெனப் பொழுதுமறுத்
தின்னா வைக லுண்ணும்
அல்லிப் படூஉம் புல்லா யினவே"

(புறநா.248 : 3-5)

என்பர் ஒக்கூர் மாசாத்தியர்.

**நூல் நூற்றல்**

கைம்மை மகளிர் பஞ்சில் நூல் நூற்றலை நடைமுறையாகக் கொள்வர். இதனை ,

"ஆளில் பெண்டிர் தாளிற் செய்த
நுணங்குநுண் பனுவல்"

(நற்.353 : 1-2 )

என்பர் கபிலர்.

**கற்படுக்கை**

கைம்மை மகளிர் கற்படுக்கை அல்லது

வெறுந்தரையில் துயிலுவர். அதில் விரிப்பு விரித்துக் கொள்வதில்லை. பாயுமின்றிக் கற்றரையில் துயிலுதலை,

"பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்

உயவற் பெண்டிர்"

(புறநா.246 : 9-10)

என்பர் பெருங்கோப்பெண்டு.

**நிறைவுரை**

1.சங்கப் புலவர்கள் அக ஒழுக்கத்தைப் பாடும் பொழுது அவ்வந்நிலத்துக்குரிய கருப்பொருளை அடிப்படையாகக் கொண்ட வாழ்வியலைப் பாடியிருப்பது போற்றுதற்குரியது.

2.நானில மக்கள் இயற்கையைச் சார்ந்து, இயற்கையோடு இயைந்த வாழ்க்கையினராக உள்ளனர்.

3.நானில மக்கள் வாழ்நாள் முழுவதும் தத்தம் நிலத்திலேயே வாழ்க்கை நடத்துவர். எக்காலத்திலும் வேற்று நிலங்களுக்குக் குடி பெயர்ந்து சென்று வாழ்தல் இல்லை.

4. முல்லை,குறிஞ்சி,நெய்தல்,பாலை நில மக்கள் சிறுசிறு குடிசைகளில் வாழ்வர். மருத நில மக்கள் உயர்ந்த மாடங்கள் கொண்ட மாளிகைகளில் செல்வச் செழிப்போடு வாழ்வர்.

5. முல்லை நில மக்கள் ஆநிரையையும், குறிஞ்சி நில மக்கள் தினை விளைவித்தலையும், மருத நில மக்கள் உழவையும், நெய்தல் நில மக்கள் மீன் பிடித்தலையும், பாலை நில மக்கள் ஆறலைத்தலையும் சிறப்பான தொழிலாகக் கொள்வர்.

6. நானில மக்கள் உணவு தேடுதலையும் உணவுப் பொருட்களை விளைவித்தலையும் வாழ்க்கைப் போராட்டமாகக் கொண்டு செயல்படுவர்.

7. நானில மக்கள் தத்தம் நிலப் பொருட்களைக் கொடுத்துப் பிற நிலப் பொருட்களைப் பண்டமாற்று அடிப்படையில் பெறுவர்.

8. மருத நில மக்கள் தவிர மற்ற நில மக்கள் அனைவரும் இரவு, பகல் பாராது செயலாற்றுவர்.

9. நானிலங்களிலும் மகளிர் ஆடவரோடு செயலாற்றுதல் இயல்பாக உள்ளது.

10. நானில மக்களுள் பாலை நில மக்கள் மிகுந்த வறுமையினராக உள்ளனர்.

11. ஓய்வு நேரத்தில் ஆயர் தவிர மற்றோர் கள்ளுண்டு களிப்பர்.

12. செல்வர் முரசு , புரவி , தேர் ஆகியவற்றைக் கொண்டுள்ளனர்.

13. இல்லற மகளிர் காக்கைக்குப் பலியிடுதலும், ஊருணி நீரைத் தேற்றிப் பயன்படுத்துதலும், மாலையில் விளக்கேற்றுதலும் நானில மக்களுக்கும் உரிய பொது நிகழ்வுகள் ஆகும்.

14. கைம்மை மகளிர் கடுமையான நோன்புகளை மேற்கொள்ளுதல் நடைமுறையாக உள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. தொல். பொருள். அகத். நூ. 22.
2. மேலது, நூ. 23.
3. .....(1953), **தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம் பூரணர் உரையுடன்**, சென்னை-1, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப. 20.
4. தொல். பொருள். அகத். நூ. 24.
5. .....(1953), **தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம் பூரணர் உரையுடன்**, மேலது, பக். 20-21.
6. அ. ஆறுமுகம், (1994), **சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு**, திருமழபாடி, பாவேந்தர் பதிப்பகம், ப.41.
7. அ. முத்துச்சாமி, (1993), **சங்க இலக்கியத்தில் ஆயர்**, சென்னை-14. இராணி பதிப்பகம், ப.12.
8. அகநா. 87: 3.
9. அகநா. 394: 8-9.
10. பெரும்பாண். 159-165.
11. அகநா. 321: 7-8.
12. நற். 240: 7-8.
13. அகநா. 14: 7-8.
14. பதிற். 21:20.
15. அகநா. 399: 11-12.
16. அகநா. 399: 9-10.
17. கலித். 106: 1-2.
18. நெடுநல். 3-5.
19. கலித். 111: 1-5.
20. கலித். 112: 12.

21. கலித். 108: 31-33.

22. அகநா. 55: 7-12.

23. அகநா. 264.: 4-6.

24. சி.பக்தவத்சலபாரதி,(1990),பண்பாட்டு மானிடவியல், சென்னை-1, மணிவாசகர் பதிப்பகம், ப.471.

25. அகநா. 94: 3-7.

26. அகநா. 274: 3-11.

27. நற். 289: 7-8.

28. புறநா. 215: 1-4.

29. பெரும்பாண். 192-196.

30. அகநா. 393: 13-17.

31. அகநா. 394: 1-6.

32. சி.பக்தவத்சலபாரதி,(1990),பண்பாட்டு மானிடவியல், மேலது, ப.471.

33. பெரும்பாண். 186-191.

34. அகநா. 393: 5-11.

35. மலைபடு. 162.

36. நற். 114:3.

37. நற். 285: 7.

38. புறநா. 129: 1, அகநா. 272:11.

39. மலைபடு. 439, ஐங்.252:1, அகநா. 172:10, புறநா. 120:13.

40. மலைபடு. 315-318, கலித். 39-9.

41. குறுந். 273: 5.

42. அகநா. 140:11, 368:1.

43. சி.பக்தவத்சலபாரதி,(1990),பண்பாட்டு மானிடவியல் மேலது, ப.472.

44. நற். 209: 2-3.

45. குறுந். 72:4.

46. மலைபடு. 343.

47. குறுந். 392: 4-5.

48. மலைபடு: 328-329.

49. குறுந். 291:1-2, 360: 5-6; நற். 306:3;
அகநா.32: 5-6; குறிஞ்சிப் 41-45.

50. நற். 134: 3-6.

51. அகநா. 188: 11-13.

52. மலைபடு. 343-344.

53. நற். 306: 3-5.

54. நற். 44: 5-8.

55. நற். 344: 8-11, குறுந். 335: 1-2.

56. நற். 373: 2-4.

57. கலித். 43: 2-4.

58. கலித். 41: 1-3, 42:7.

59. கலித். 40: 3-5.

60. சீ.பக்தவத்சலபாரதி,(1990),**பண்பாட்டு மானிடவியல்,**
மேலது, ப. 470.

61. நற். 82: 7-11.

62. பெரும்பாண். 111-116.

63. அகநா. 182: 2-8.

64. அகநா. 172: 6-10.

65. நற். 114: 1-2.

66. மலைபடு. 152-155.

67. சீ.பக்தவத்சலபாரதி,(1990),**பண்பாட்டு மானிடவியல்,**
மேலது, ப.476.

68. நற். 85: 8-10.

69. புறநா. 325: 7-8.

70. குறுந். 100: 4.

71. பொருந. 214-215.

72. புறநா. 33: 1-6.

73. மலைபடு. 179-185.

74. மலைபடு. 168-169.

75. மலைபடு. 174-177.

76. அகநா. 108: 17.

77. மலைபடு. 320-322.

78. மலைபடு. 171-173.

79. குறிஞ்சிப். 153-155.

80. அகநா. 118: 2-4.

81. குறுந். 353: 4-5.

82. மலைபடு. 435-437.

83. மலைபடு. 440-443.

84. மலைபடு. 443.

85. குறுந். 375: 4-6.

86. நற். 108: 2-5.

87. அகநா. 392: 12-15.

88. குறுந். 357: 5-6.

89. கலித். 52: 13-14.

90. கலித். 41: 7-10.

91. அகநா. 94: 9-11.

92. பெரும்பாண். 111.

93. பெரும்பாண். 106-110.

94. பெரும்பாண். 89-97.

95. அகநா. 331: 5-7.

96. பெரும்பாண். 97-100.

97. சிறுபாண். 175-177.

98. பெரும்பாண். 130-134.

99. நற். 276: 3.

100. நற். 32:5.

101. நற். 276: 1-2.

102. அகநா. 21: 24-25.

103. நற். 212: 1.

104. நற். 59: 1-3.

105. நற். 3: 1-4.

106. நற். 59: 3-5.

107. பதிற். 15: 13.

108. பதிற். 15: 12.

109. அகநா. 3: 10.

110. குறுந். 283: 5.

111. அகநா. 193: 2.

112. அகநா. 287: 6-7.

113. புறநா. 329: 2-4.

114. அகநா. 263: 6-8.

115. அகநா. 89: 10-16.

116. அகநா. 175: 2-4.

117. அகநா. 109: 8.

118. அகநா. 109: 7-14.

119. அகநா. 193: 3.

120. அகநா. 215: 7-8.

121. அகநா. 375: 3-5.

122. கலித். 4: 3-5.

123. கலித். 15: 7-8.

124. நற். 298: 1-3.

125. அகநா. 285: 9.

126. குறுந். 274: 4-5.

127. அகநா. 31: 5-7.

128. அகநா. 169: 3-4.

129. அகநா. 377: 7-8; புறநா. 52: 14-15.

130. அகநா. 283: 4-5.

131. அகநா. 129: 7-10.

132. அகநா. 245: 7-12.

133. அகநா. 239: 3-5.

134. அகநா. 97: 4-6.

135. அகநா. 265: 15-20.

136. அகநா. 131: 6-7.

137. அகநா. 101: 5-6.

138. அகநா. 309: 2-6.

139. அகநா. 127: 15-16.

140. அகநா. 337: 7-13.

141. பதிற். 55: 7-8.

142. அகநா. 119: 8-9.

143. அகநா. 194:1-3.

144. பெரும்பாண். 197-202.

145. அகநா. 41:1-6.

146. குறுந். 155:1-2.

147. அகநா. 104:4-5.

148. குறுந். 155:1-2.

149. பெரும்பாண். 211-212.

150. அகநா. 184: 13-14.

151. பெரும்பாண். 213.

152. அகநா. 194 : 8-9.

153. அகநா. 156 : 3-6.

154. நற். 195:6.

155. அகநா. 40:13-14, 204:10; புறநா. 348:1.

156. அகநா. 236: 2-5.

157. பெரும்பாண். 230-234.

158. அகநா. 37: 2-5.

159. அகநா. 366 : 2-4.

160. பெரும்பாண். 239-241.

161. பதிற். 71:4-5.

162. பதிற். 66:8.

163. மலைபடு. 455-459.

164. மலைபடு. 463-464.

165. அகநா. 37:7-11.

166. சிறுபாண். 193-194.

167. சிறுபாண். 194.

168. சிறுபாண். 195.

169. அகநா. 37: 12-13.

170. புறநா. 399: 4-8.

171. பெரும்பாண். 255-256.

172. அகநா. 141:14-18.

173. அகநா. 237 : 11-13.

174. பெரும்பாண். 353-362.

174. மதுரைக். 255-256.

175. மதுரைக். 255-256.

176. நற். 97: 6-9.

177. பெரும்பாண். 263-265.

178. நற். 207:2.

179. அகநா. 30:1-7.

180. அகநா. 210:2.

181. அகநா. 300:1-2.

182. அகநா. 30:9.

183. அகநா. 30:10.

184. அகநா. 30:10.

185. அகநா. 320:1-4.

186. நற். 4:3.

187. நற். 74:1-2.

188. நற். 111:6-8.

189. அகநா. 70:1-4.

190. அகநா. 10:10-12.

191. அகநா. 366:5.

192. குறுந். 269: 4-6.

193. நற். 45:6-7.

194. அகநா. 20:1-2.

195. பட்டினப்.62-64.

196. அகநா. 60:2-6.

197. பெரும்பாண். 275-281.

198. சிறுபாண். 158-159 ; 163.

199. அகநா. 20: 3-8.

200. அகநா. 60: 9-10, 90:2, 180: 2-3.

201. அகநா. 110: 6-7.

202. அகநா. 269 : 19-20.

203. அகநா. 190 : 1- 3.

204. நற். 239 : 1 - 2.

205. அகநா. 100:7.

206. நற். 219 : 6-8.

207. நற். 388: 3-6.

208. அகநா. 145:16.

209. நற். 45:5.

210. அகநா. 219:5-7.

211. அகநா. 275:9.

212. நற் : 250: 2-3.

213. நற். 58:1-4.

214. அகநா. 17:1-2.

215. அகநா. 206:5.

216. நெடுநல் 49.

217. நற். 367: 1-5.

218. நற். 310:3.

219. நற் 353:3.

220. புறநா. 246:10.

221. புறநா. 62:14.

222. புறநா. 62:14.

அரசாட்சி

அரண்மனை

அரசர்களது நடைமுறை வாழ்க்கை

துயிலெடை நிலை

அவையம்

முறை வழங்கல்

திறைபெறுதல்

நாண்மகிழிருக்கை

விருந்தோம்பல்

பரிசில் வழங்கல்

அரசியர் வாழ்க்கை

கண்படை நிலை

நிறைவுரை

12/9/98

# இயல்-3

## அரசர் வாழ்க்கை

சங்ககாலத் தமிழகத்தின் எல்லைகளைத் தொல்காப்பியர்,

> ''வடவேங்கடந் தென்குமரி
> ஆயிடைத்
> தமிழ்கூறு நல்லுலகம்''[1]

என வரையறுப்பர். இப்பரந்துபட்ட நிலப்பரப்பைச் சேர, சோழ, பாண்டியர்கள் ஆண்டனர். இவ்வேந்தர்களுக்கு அடங்கியும் தனியாகவும் பல சிற்றரசர்களும் ஆட்சி புரிந்தனர்.

### அரசாட்சி

அரசுரிமை வாரிசு அடிப்படையில் அமையும். தந்தைக்குப் பிறகு மகன் என்ற முறையில் உரிமை தொடரும். அதிலும் மூத்தோர்க்கே உரிமை உண்டு. இதனை,

> ''மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்
> பால்தர வந்த பழவிறற் றாயம்''
>
> (புறநா. 75: 1-2)

என்பர்.

### அரண்மனை

அரசர்கள் மிகப் பெரிய அரண்மனைகளில் வாழ்ந்துள்ளனர். இம்மனை, பாதுகாப்பு மிகுந்த அரண்களால் சூழப்பட்டமையால் அரண்மனை எனப்பட்டது. இதனைக் 'கோயில்'[2] எனவும் சங்க இலக்கியங்கள் சுட்டும்.

அரண்மனைகள் பரந்தகன்ற இடப்பரப்பில் உயர்ந்த மாடங்களோடு கட்டப்பட்டவையாகும். இவை எழுநிலை மாடங்கள் கொண்டன[3].

அரண்மனைகளில் மிகப் பெரிய வாயில்கள் உண்டு.

அவை யானை மீது அமர்ந்து கொடியை உயர்த்திக் கொண்டு செல்லும் அளவிற்கு உயரமுடையன. இதனை,

"வென்றெழு கொடியோடு வேழஞ் சென்றுபுகக்
குன்றுதுயின் றன்ன ஓங்குநிலை வாயில்"

(நெடுநல். 87-88)

என்பர் நக்கீரர்.

அரண்மனைகளில் அழகிய ஓவியங்கள் தீட்டப் பட்டிருக்கும். இதனை,

"ஓவத் தன்ன வுருகெழு நெடுநகர்"

(பதிற். 88: 28)

எனவும்

"ஓவத் தன்ன விடனுடை வரைப்பின்"

(புறநா. 251: 1)

எனவும் கூறுவர்.

அரண்மனைகள் காவல் பொருந்தியன. அவற்றின் வாயிலில் காவலர் எப்பொழுதும் நிற்பர்[4]. இங்கு அரசனுக்கென்று தனி மனையும் அவன் தேவிக்குத் தனி மனையும் அமைந்திருக்கும். அரசி வாழும் பகுதி ஆடவர் புகவியலாத காவலையுடையது. இங்கு யவனர் முதலான வேற்று மொழி பேசும் மக்கள் பணியாளராக அமர்த்தப்படுவர்.

அரண்மனைகளில் அரசர்களைச் சுற்றிலும் புலவரும் கலைஞரும் எப்பொழுதும் சூழ்ந்திருப்பர். அவர்கள் அரசரைப் பாடியும் ஆடியும் மகிழ்விப்பர். அரசர்கள் அவர்களுக்குப் பல்வேறு பரிசில்களை வரையாது வழங்குவர். அரசவையில் அமைச்சரும் சுற்றத்தினரும் நல்லாட்சிக்கு உதவுவர். அரசர்கள் அரசவையில் இருந்து நாட்டினை நல்லாட்சி புரிவர். நீதி வழுவாது ஒழுகுவர்.

### அரசர்களது நடைமுறை வாழ்க்கை

அரசர்கள் காலையில் சூதர் இன்னிசை பாடத் துயிலெழுவர். தினமும் அரசவையில் இருந்து நல்லாட்சி புரிவர். மக்களுக்கு முறை வழங்குவர். தன் கீழ் உள்ள சிற்றரசர்களிடம் திறை பெறுவர். நாண்மகிழிருக்கையில் பாணர் முதலிய கலைஞருடன் கள்ளுண்டு களிப்பர். தினமும் தன்னை நாடி வரும் இரவலரையும் பரிசிலரையும் விருந்தோம்பிப் பரிசில் வழங்குவர்.

### துயிலெடை நிலை

அரசர்கள் வைகறையில் சூதர் பாட, துயில் எழுதல் நடைமுறையாகும். இதனைத் தொல்காப்பியர்,

"தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயில்எடை நிலை"[5]

என்பர். நச்சினார்க்கினியர், "கிடந்தோர்க்கு எனப் பன்மை கூறவே, அவர் துயிலெடுப்புத் தொன்றுதொட்டு வரும் என்பதூஉம், சூதர், மாகதர், வேதாளிகர், வந்திகர் முதலாயினோருட் சூதரே இங்ஙனம் வீரத்தால் துயின்றாரைத் துயில் எடுப்புவர் என்பதூஉம், யாண்டும் முன்னுள்ளோரையும் பிறரையும் கூறப்படும் என்பதூஉம் கொள்க"[6] என விளக்குவர். இவற்றால் அரசர்களைத் துயிலெடுப்புதல் தொன்றுதொட்டு வரும் நடைமுறை வாழ்க்கை நிகழ்வு என்பது புலனாகும்.

"வைகறையில் அரண்மனையுள் முரசு ஒலிக்கும். அது 'பள்ளியெழுச்சி முரசம்' எனப்படும்"[7] என்பர் மா. இராச மாணிக்கனார். அப்பொழுது சூதர் அரசனை நின்றேத்துவர்; மாகதர் இருந்தேத்துவர்; வைதாளிகர் இசைக் கருவிகளை இயக்குவர்; நாழிகைக் கணக்கர் நேரத்தை அறிவிப்பர். இந்நடைமுறைகளை மாங்குடி மருதனார்,

"சூதர் வாழ்த்த மாகதர் நுவல
வேதா ளிகரொடு நாழிகை இசைப்ப
இமிழ்முர சிரங்க ஏறுமாறு சிலைப்பப்
பொறிமயிர் வாரணம் வைகறை இயம்ப"

(மதுரைக். 670-673)

எனப் பாண்டிய நெடுஞ்செழியன் துயில் எழுவதைப் பாடுவதில் எடுத்துரைப்பர்.

ஆலத்தூர் கிழார் சோழன் நலங்கிள்ளியின் அரண்மனையில் பள்ளியெழுச்சிக் காலத்தில் வலம்புரிச் சங்கம் முழங்குவதை எடுத்துரைப்பர். இதனை,

"............ .......... திரிவாய் வலம்புரி
ஞாலங் காவலர் கடைத்தலைக்
காலைத் தோன்றினும்"

(புறநா. 225: 12-14)

என்பர். "பள்ளியெழுச்சிக் காலத்தே வேந்தர் மனை முன்றிலில் வலம்புரி முழக்குவது மாபு"[8] என்னும் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையின் கருத்தும் இதனை விளக்கும்.

அரசர்கள் அரண்மனைகளில் இருக்கும் பொழுது நிகழும் இம்மரபு பாசறையில் இருக்கும் பொழுதும் பின்பற்றப்படும். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பாசறையில் தங்கியிருக்கும்பொழுது, வலம்புரியுடன் முரசமும் ஒலிக்கத் துயில் எழுவான். இதனை,

"இரங்குகுரன் முரசமொடு வலம்புரி யார்ப்ப
இரவுப் புறங்கண்ட காலைத் தோன்றி
எஃகிரு ளகற்று மேமப் பாசறை"

(புறநா. 397: 5-7)

என்பர் எருக்காட்டூர் தாயங்கண்ணனார். பாசறையில், வலம்புரியுடன் முரசமும் ஆர்ப்பது நடைமுறையாகும்.

இம்மரபு பிற்காலத்தில் துயிலெடை நிலை என்னும் சிற்றிலக்கியமாக வளர்ச்சி பெற்றது. பாட்டியல் இலக்கணங்களுள் பன்னிரு பாட்டியலும் பிரபந்த தீபிகையும் துயிலெடை நிலை என்னும் இலக்கிய வகையை விளக்கும். இவை அரசனைத் துயில் எழுப்புதலையே இலக்கியப் பொருண்மையாகக் கூறும்.

பன்னிருபாட்டியல், "அரண்மனையில் விழுயளிலே

திறை கொண்டு வந்த மன்னரும் திறையளிக்காமையால் சிறைப்பட்ட மன்னரும் எத்தி நிற்றலைக் கூறித் துயிலெழும்படி விளம்புதலாகும்"[9] என்று விளக்கும்.

அரசர்களுக்கு இருந்த இந்நடைமுறை பக்தி இயக்க காலத்தில் திருப்பாவை, திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி ஆகிய சிற்றிலக்கியங்கள் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்துள்ளது.

## அவையம்

அரசர்கள் தினமும் அவைக்கு வருதலை நடைமுறையாகக் கொள்வர். அரசர்களது அவையின் தன்மையைத் தொல்காப்பியர்,

"எட்டுவகை நுதலிய அவையகம்"[10]

என்பர். இது எட்டுப் பாகுபாட்டுடன் கூடிய அவை என்ற பொருள் தரும்.அவ்வெட்டு வகை எவை எனத் தொல்காப்பியர் தெளிவுறுத்தவில்லை.

இளம்பூரணர், "குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை, அழுக்காறாமை, அவாவின்மை"[11] என்ற எட்டு வகையால் சிறப்புப் பெற்ற அவை என விளக்குவர்.

"அரசனது ஆட்சிக்குழு கூடும் இடம் அவை எனப் பெயர்பெற்றது. அரசனைச் சார்ந்த சான்றோர், பெரியோர் கூடும் இடம் அரசவையாகும்"[12] என்பர் அ. ஆறுமுகம்.

அரசர்கள் நாள்தோறும் அரசவையில் இருந்து செங்கோல் செலுத்தி முறை செய்தலை,

"முறையுடை யரசன் செங்கோ லவையத்து"

(குறுந். 276:5)

என்பர் கூழிக்கொற்றன்.

ஓர் அரசன் அவையில் இருத்தலே சிறப்பு

வாய்ந்ததாகும். மூவேந்தரும் ஓர் அவையில் ஒருங்கு இருந்தால் அந்த அவை எவ்வளவு சிறப்புடையது என்பதை,

"முரசுமுழங்கு தானை மூவருங் கூடி
அரசவை யிருந்த தோற்றம் போல"

(பொருந. 54-55)

என முடத்தாமக்கண்ணியார் குறிப்பிடுவர்.

சேரமான் மாவண்கோவும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தபோது ஔவையார் அவர்களை வாழ்த்திப் பாடுவர். அதில் அவர்களது நடைமுறை வாழ்க்கையை எடுத்துரைப்பர்.

அரசர்கள் மூவரும் அவையில் கூடும்பொழுது பொருள் வேண்டி இரந்து நின்ற பார்ப்பனருக்கு, அவருடைய நனைந்த கை நிறையும்படிப் பொற்பூவும் பொற்காசும் நீர் வார்த்துக் கொடுப்பர். பசிய இழையணிந்த மகளிர் பொன் வள்ளங்களில் எடுத்து வந்த கட்டெளிவை உண்டு களிப்பர். இரவலர்க்கு அவர் வேண்டிய பொருளைக் குறைவறக் கொடுப்பர்[13].

இளந்திரையன் உரும்பில் சுற்றத்தோடு அரசவையில் வீற்றிருந்து ஆற்றிய செயலை,

"முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டுநர்க் கருளி
இடைதெரிந் துணரும் இருவர் காட்சிக்
கொடைக்கட னிறுத்த கூம்பா வுள்ளத்து
உரும்பில் சுற்றமோ டிருந்தோன்"

(பெரும்பாண். 443-447)

என்பர். இதில் அரசவையில் நாளும் நிகழும் செயற்பாடுகள் நன்கு விளங்கும். மக்கள் குறை தீர்த்தல், முறை வழங்கல், கொடைக்கடன் இறுத்தல் என்பன அச்செயற்பாடுகளாகும்.

குறைதீர்த்தல் என்பது மக்களுக்குத் தேவையான

குறைகளைக் கேட்டுத் தீர்த்தல். முறைவழங்குதல் என்பது நீதி வழங்குதல். கொடைக்கடனிறுத்தல் என்பது போர்மறவர், புலவர், பாணர், கூத்தர் முதலியோருக்குக் களிறு முதலியன வழங்குதலாகும்.

அரசர்கள் இவ்வாறு இருக்கும் அவையினைப் பெருநாளிருக்கை எனக் குறிப்பிடுவர். சேர மன்னனுடைய நாளோலக்க இருக்கையில் கலையினை முழுதும் உணர்ந்த பெரியோர் கூடித் தருக்கம் செய்வர். இதனை,

" ............ .................. .................. கோதை
பெருநா ளிருக்கை விழுமியோர் குழீஇ
விழைவுகொள் கம்பலை"

(மதுரைக். 524-526)

என்பர்.

சோழன் கரிகாற் பெருவளத்தானின் அவையத்தைக் கருங்குளவாதனார்,

"அறமறக் கண்ட நெறிமா ணவையம்"

(புறநா. 224:4)

என்பர். சோழனின் அவைக்களம் அறத்தைத் தெளிய உணர்ந்த ஒழுக்கம் மாட்சிமைப்பட்ட அந்தணர்களையுடையது என்பது கருத்து.

சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியின் அவையத்தை,

"சான்றோ ரிருந்த அவை"

(புறநா. 266:8)

என்பர் பெருங்குன்றூர் கிழார். சோழரது உறையூரில் அறப் பொருந்திய நல்ல அவை இருந்தமையைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் குறிப்பிடுவர்[14]. சோழரது உறந்தையிலுள்ள அவையின், அறம் நீங்காத தன்மையை ஆலங்குடி வங்கனார் எடுத்துரைப்பர்[15].

பாண்டிய நெடுஞ்செழியனது அவையினை,

"பொற்புவிளங்கு புகழவை"

(மதுரைக். 778)

என்பர். இவ்வரசர்கள் அரசவையில் பொருள் நூலோர், இன்னின்ன காலத்தே இன்னின்ன பொழுதில் இசையின்பம் நுகரற்பாலர் என வகுத்தோதிய முறையில் பிறழாது அவ்வப்பொழுதில் இசையின்பம் நுகர்வர். இதனை,

"............... ........... அருள்நெறி திரியாது
இசைபெறு திருவின் வேத்தவை''

(மலைபடு. 38-39)

என்பர் பெருங்கௌசிகனார்.

நல்லியக்கோடன் அரசவையில் சுற்றம் சூழ இருந்த சிறப்பை,

"பன்மீன் நடுவண் பால்மதி போல
இன்னகை ஆயமோ டிருந்தோன்"

(சிறுபாண். 219-220)

எனச் சிறப்பிப்பர்.

நன்னன் அவையினை,

"நல்லோர் குழீஇய நாநவில் அவையம்"

(மலைபடு. 77)

என்பர். நல்லோர் என்றது அரசனைத் தீநெறி விலக்கி நன்னெறி செலுத்தும் பேரறிவுடைய பெரியோரைக் குறிக்கும். நாநவில் அவையம் என்பது கல்வியை நன்கு கற்று முதிர்ந்தாரும் தாம் கற்றவற்றை விரித்துரைக்குங்கால் அவ்வுரையின் நுண்பொருளை உணரும் பிற சான்றோரும் உடைய அவையினை விளக்கும்.

நன்னன் அமைச்சர் முதலிய சுற்றம் சூழப் பேரவையில் அரசுகட்டிலில் வீற்றிருந்தலை,

"கல்லென் ஒக்கல் நல்வலத் திரீஇ
உயர்ந்த கட்டில் உரும்பில் சுற்றத்து"

(மலைபடு. 549-550)

என்பர்.

வேந்தர் அவையில், குறுநில மன்னரும் தலைவரும் சென்று காண்பர். நம்பி நெடுஞ்செழியன் என்னும் குறுநிலத் தலைவன் இறந்தபொழுது அவனது சிறப்புகளைப் பேரெயில் முறுவலார் பாடுவர். அதில்,

"வேந்துடை யவையத் தோங்குபுகழ் தோற்றினன்"

(புறநா. 239: 10)

என அவனது சிறப்புகளுள் ஒன்றாக, வேந்தன் அவையில் நடத்தலைக் குறிப்பிடுவர். இவ்வேந்துடை அவையம் பாண்டிய நெடுஞ்செழியனின் அவையமாகும். "இவன் காலத்துப் பெருநில வேந்தன் பாண்டிய நெடுஞ்செழியன் எனக் கருதலாம்"[16] என்பர் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை.

ஏறைக்கோன் குறிஞ்சி நிலக் குறவர் தலைவன். இவனது பண்புகளைப் பாடும் குறமகள் இளவெயினியார்,

"வேந்துடை யவையத் தோங்குபு நடத்தல்"

(புறநா. 157:4)

என்பர். இதில் வேந்தன் அவையில் தலைவன் செம்மாந்து நடத்தல் சிறப்பாகக் கூறப்பெறும். இவற்றால் குறுநில மன்னரும், தலைவரும் நாள்தோறும் சுற்றம் சூழ வீற்றிருக்கும் வேந்தன் அவையத்துக்கு வந்து அவனைக் கண்டு சென்றுள்ளமை விளங்கும்.

வேந்தர் அவை போலக் குறுநில மன்னருக்கும் தனி அவை உண்டு. அவர்கள் தம் சுற்றம் சூழ அரசவையில் இருப்பர். கோசர் அவையினை,

"வலம்புரி கோச ரவைக்களத் தானும்"

(புறநா. 283:6)

என்பர். கோசர் அம்பலத்தில் அவையைக் கூட்டுவர். இதனை,

"தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய
நாலூர்க் கோசர்"

(குறுந். 15:2-3)

என்பர். பலர் கூடியிருத்தற்கேற்ற கிளைப்பரப்பும் நிழலுமுடைய ஆலமரத்தடியில் இப்பொதியில் அமையும்.

"பொதியில் கிராமத்தில் பெரும்பாலும் அதற்கு வெளியில் அமைந்த ஓரிடம்; அநேகமாக மரத்தடியில் இருக்கும். இது முற்றிலும் ஒரு கிராம நிறுவனமாம்"[17] என்பர் ந. சுப்பிரமணியன்.

கோசரது இப்பொதியினை மாமூலனார்,

"................ ............... புனைதேர்க் கோசர்
தொன்மூ தாலத் தரும்பணைப் பொதியில்"

(அகநா. 251. 7-8)

எனக் கூறுவர்.

பழையன் என்னும் குறுநில மன்னனுக்கு மோகூரில் அரசவை இருந்தது. இதனை,

"மழையொழுக் கறாஅப் பிழையா விளையுட்
பழையன் மோகூர் அவையகம்"

(மதுரைக். 507-508)

என்பர். அரசவை பெரும்பாலும் பருவமழை பொய்யாததும் விளையுள் குறையாததுமான சிறப்புகள் உள்ள ஊரில் இருக்கும் என்பதை இது உணர்த்தும்.

இவற்றால் அரசர்கள் தினமும் அரசவையில் கூடும் நடைமுறை தெளிவாகும். வேந்தர், குறுநில மன்னர் ஆகிய அனைவருக்கும் அரசவை உண்டு. வேந்தரவைக்குக் குறுநில மன்னரும் தலைவரும் வந்து செல்வர். இவ்வவையில் முறை வழங்குதல், திறை பெறுதல் என்பன, அரசாட்சி சார்ந்த நடைமுறைகளாக நிகழும்.

**முறை வழங்கல்**

முறை வழங்குதல் என்பது நீதி வழங்குதலாகும். தன் குடிமக்களுக்கு முறை வழங்குதல் அரசவையில் நாள்தோறும் நிகழும்.

சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னியின் இயல்பினை விளக்கும் ஊன்பொதி பசுங்குடையார், சோழன் முறை வழங்குதலைக் கூறுவர். சோழன் மெய்யாக, மனத்தான் ஆராய்ந்து பார்க்கும் இயல்பினன். ஒருவனிடம் அறுதியிடப்பட்ட கொடுமையைக் காணின் அத்தீமைக்குத் தகத் தண்டனை செய்வான்[18] என்பர்.

சோழன் நலங்கிள்ளி அரண்மனையில் முரசு இனிதாக ஒலிக்கத் தீயோரைத் தண்டித்தலும் நடுவு நிலையோர்க்கு அருள் செய்தலுமாகிய முறைமையில் சோம்புதல் இல்லாதவனாக இருப்பான். இதனை,

"கொடியோர்த் தெறுதலுஞ் செவ்வியோர்க் களித்தலும்
ஒடியா முறையின் மடிவிலை யாகி"

(புறநா. 29: 9-10)

என்பர்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுக்குச் செவியறிவுறுத்தும் வெள்ளைக்குடி நாகனார்,

"அறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து
முறைவேண்டு பொழுதிற் பதனெளி யோர்"

(புறநா. 35:14-15)

என்று அரசனுக்கு வேண்டிய பண்பாக உணர்த்துவர். அறக்கடவுள் போன்று ஆராய்ந்து செங்கோல் செலுத்து தலையும், முறை செய்யும்பொழுது செவ்வி எளியோனாக இருத்தலையும் குறிப்பிடுவர். இவன் உறையூர் அவையில் அறம் நின்று நிலைபெறுமாறு முறை செய்தலை மாறோக்கத்து நப்பசலையாரும் கூறுவர்[19].

அரசன் தனக்கு வேண்டியவர் என்று ஒருவன்

செய்த கொடுந்தொழிலைப் பொறுத்துக் கோல் வளைதல் கூடாது. இவன் தனக்கு அயலோர் என்று அவனது நற்குணங்களை மறத்தல் கூடாது எனப் பாண்டியன் இலவந்திகைப்பள்ளி துஞ்சிய நன்மாறனுக்கு மதுரை மருதனிளநாகனார்,

"அறநெறி முதற்றே யரசின் கொற்றம்
அதனால், நமரெனக் கோல்கோ டாது
பிறரெனக் குணங்கொல் லாது
............. ................. ............. .............
நீநீடு வாழிய"

(புறநா. 55:10-17)

என அறிவுறுத்துவர்.

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனின் வஞ்சினம் முறை வழங்குதலின் இன்றியமையாமையை உணர்த்தும். அவையில் அறம் நிலை கலங்க அறத் திறப்பாடில்லாத ஒருவனை வைத்து முறை கலங்கிக் கொடுங்கோல் செய்தல் இகழுதற்குரிய செயலாகக் கூறுவர்.

"அறநிலை திரியா வன்பி னவையத்துத்
திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தே னாகுக"

(புறநா. 71:7-9)

என்பது பாண்டியனின் வஞ்சினமாகும்.

இவ்வாறு நீதி வழங்கும் அவை, அறங்கூறவையம் எனவும் பெயர் பெறும். இங்கு அரசனுக்கு ஆலோசனை கூறச் சிறந்த கொள்கையாளர் இருப்பர். இவ்வியல்பை,

"அச்சமும் அவலமும் ஆர்வமு நீக்கிச்
செற்றமும் உவகையுஞ் செய்யாது காத்து
ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகிச்
சிறந்த கொள்கை அறங்கூ றவையமும்"

(மதுரைக். 489-492)

என்பர்.

"நீதி வழங்குவதற்கென்று இயங்கிய ஓர் அமைப்பே அறங்கூறவையமாகும். இது இக்கால நீதிமன்றத்தைப் போன்று அக்காலத்து நீதி வழங்கும் இடமாய்த் திகழ்ந்தது. இந்த அவையம் பேரூர்களில் செயல்பட்டதெனத் தெரிய வருகின்றது"[20] என்பர் அரங்க. இராமலிங்கம்.

## திறைபெறுதல்

"போரில் ஈடுபட்டு இழப்பு ஏற்படுவதை விரும்பாதவர்கள் அருங்கலங்களைத் தந்து பகையைக் குறைத்துக் கொள்வர். இவ்வாறு பெறப்படுவது திறை எனப்படும்"[21]. வேந்தருக்கு அவன்கீழ் உள்ள மன்னர் திறையாகப் பல வகையான கலன்களையும் கொடுத்து வணங்கிச் செல்வர். இது அரசவையில் நாள்தோறும் நிகழக்கூடிய செயலாகும்.

பாண்டியன் நெடுஞ்செழியனுக்குச் சிற்றரசர்கள் நாள்தோறும் செல்வம் மிகும்படி அவனைக் கையால் தொழுது வாழ்த்தி நாட்காலத்தே சீரிய கலங்களைத் திறையாகக் கொடுப்பர். இதனை,

"நாடொறும் விளங்கக் கைதொழூஉப் பழிச்சி
நாடர வந்த விழுக்கலம்"

(மதுரைக். 694-695)

என்பர்.

சேரலாதனுக்குப் பணிந்த பகைவர் அவனது மாந்தை நகர் முற்றத்தில் நல்ல அணிகலன்களுடன் பொன்னாலாகிய பாவையினையும் வயிரங்களையும் இடம் நிறைய, ஆம்பல் என்னும் எண்ணளவு குவிப்பர்[22].

அரசனுக்குத் திறை கொடுத்தால் அவன் போர் தொடுக்க மாட்டான் என்பதும் திறைப்பொருளாக அணிகலன்களும் களிறும் கொடுக்க வேண்டும் என்பதும் நடைமுறையாகும்[23].

பகைவர் அரசனுக்குத் தாம் கொடுக்க வேண்டிய திறையைக் கொடுத்து அவனுக்குச் சுற்றமாய செய்தியை,

"............ .......... .......... பகைவரும்
தந்திறை கொடுத்துத் தமரா யினர்"

(அகநா. 44:1-2)

என்பர் குடவாயிற் கீரத்தனார்.

**நாண்மகிழிருக்கை**

அரசர் நடைமுறை வாழ்வில் நாண்மகிழிருக்கை குறிப்பிடத்தக்கதாகும். நாள்தோறும் அரசர் மகிழ்ந்திருக்கக் கூடிய இருக்கை நாண்மகிழிருக்கை எனப்பெறும். இவ்விருக்கையில் வேந்தர், குறுநில மன்னர், ஊர்த்தலைவர் ஆகிய அனைவரும் இருந்து கலைஞரைப் பேணிக் கள்ளுண்டு களிப்பர்.

நாண்மகிழிருக்கையை நாளவை[24], நாளிருக்கை[25], கலிமகிழ்[26], தேர் வீசிருக்கை[27], நறவு மகிழிருக்கை[28], நாண்மகிழிருக்கை[29] எனப் பல பெயர்களால் குறிப்பிடுவர்.

நாண்மகிழிருக்கை காலையில் யாவரும் தன்னைக் (அரசர்) காணும்படிக் காட்சிக்கு எளியனாய வீற்றிருக்கை ஆகும்[30]. இதற்குத் தமிழ் அகராதி அரசனது தர்பார், நாளோலக்கம் எனப் பொருள் கூறும்[31].

"ஒவ்வொரு நாளும் தன் உடன் பணியாற்றுவோருடன் தலைவன் கூடி உரையாடி மகிழ்தல் உண்டு. இவ்வாறு கூடும் அவை நாளவை, நாண்மகிழிருக்கை எனப் பெயர் பெற்றது"[32] என்பர் அ. ஆறுமுகம்.

"குடிகளின் குறையைக் கேட்பதற்கும் கேட்டு முறை செய்வதற்கும் தன்னை நாடி வரும் புலவர்க்கும் வறியவர்க்கும் பரிசில் நல்குவதற்கும் வேந்தன் வீற்றிருக்கும் அவையை நாள்மகிழிருக்கை எனவும் நாளவை எனவும் வழங்குவர்"[33] என்பர் அரங்க. இராமலிங்கம்.

நாட்காலையில் வேந்தன் திருவோலக்கம் இருக்கும்போது முதற்கண் பாணரும் பின் மகளிரும் சென்று இன்புறுத்துவர். இதனை,

"பாண்முற் றுகநின் னாண்மகி ழிருக்கை
பாண்முற் றொழிந்த பின்றை மகளிர்
தோண்முற் றுகநின் சாந்துபுல ரகலம்"

(புறநா. 29:5-7)

என்பர் உறையூர் முதுகண்ணன் சாத்தனார்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் அமைச்சர், தானைத் தலைவர், முதலாகிய சுற்றம் சூழ இரவலரோடு திருவோலக்கத்தில் வீற்றிருத்தலைப் 'பெருங்கலி மகிழ்வு'[34] என்பர்.

களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் பாணருடன் நாளோலக்கத்தில் இருந்து இசையின்பம் துய்ப்பான். இதனை,

"............. ............ பாணர் நாளவை
வாணுதல் கணவ"

(பதிற். 38:9-10)

என்பர் காப்பியாற்றுக் காப்பியனார்.

பாணர் முதலாயினோர் உண்ட வழியும் குறையாத கள்ளினையுடைய கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனின் திருவோலக்கத்தைப் பரணர் குறிப்பிடுவர்[35]. சேரமான் குட்டுவன் கோதை நாளவையில், இரவலர் புகுதல் எளிது. இதனை,

"செம்ம னாளவை யண்ணாந்து புகுதல்
எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே"

(புறநா. 54:3-4)

என்பர் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார்.

அந்தணருக்குப் பொற்கலன்களை நீர்வார்த்துக் கொடுத்தல், பொருநர் முதலாயினோர்க்குக் குதிரையும் யானையும் வழங்குதல், புலவர்க்குத் தேர்கள் பலவற்றையும் உவந்தளித்தல், பாடினிக்குப் பொன்னரி மாலையும் பாணருக்குப் பொன்னாற் செய்த தாமரைப்பூவும் வழங்குதல், அவர்களோடு கலந்து அளவளாவியிருத்தல் ஆகியன அரசர்

நீளிருக்கையில் நிகழும் செயல்களாகக் கயமனார் விளக்குவர். இவ்வாறு அரசர் அனைவரோடும் கலந்து அளவளாவியிருக்கும் இருக்கையை,

"கலந்தளைஇய நீளிருக்கை"

(புறநா. 361:13)

என்பர் கயமனார்.

கபிலர் செல்வக்கடுங்கோ வாழியாதனின் நாண்மகிழிருக்கையினை விழாக்களத்தின் செல்வத்தோற்ற முடையதாக இருந்தது எனக் கூறுவர். அவ்விருக்கையின்கண் நாட்காலையில் அரசன் மகிழ்வுடன் இருந்தமை கண்டு தானும் மகிழ்வர்[36].

செல்வக்கடுங்கோ வாழியாதன் கள்ளுண்டு மகிழ்ந்த திருவோலக்கத்தையும், அதில் ஏனை அரசர் பணிந்து தொழில் கேட்ப அறம் செய்து விளங்கிய மறம்புரி கொள்கையையும் கபிலர் பாடிய சிறப்பினைப் பெருங்குன்றூர் கிழார்,

"சூடா நறவி னாண்மகி ழிருக்கை
அரசவை பணிய வறம்புரிந்து வயங்கிய
மறம்புரி கொள்கை"

(பதிற். 85:8-10)

எனக் கூறுவர். இதில் நாண்மகிழிருக்கையில் பணிந்த அரசர் ஏவல் புரிய அறம் செய்ததாகக் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

சோழன் நலங்கிள்ளி, இருக்கையில் நாரால் வடிக்கப்பட்ட கள்ளையுண்டு நாள்தோறும் மகிழ்ச்சி மிக்கு இருப்பான். விடியற்காலையில் கிணை கொட்டித் தன் புகழ் பாடிவந்த பொருநனுக்குப் பழைய கிழிந்த உடையைக் களைந்து புத்தாடை கொடுப்பான். அதோடு நல்ல கலன்களையும் பரிசாக வழங்குவான்[37].

பாணர் சுற்றம் சூழச் சோழன் நலங்கிள்ளி நாண்மகிழிருக்கையில் இருக்க வேண்டும் என உறையூர் முதுகூத்தனாரும் வாழ்த்துவர். அம்மகிழிருக்கையில் எரியால்

ஆக்கப்பட்ட தகடாகச் செய்த தாமரைப் பூவினை, கம்பியாகச் செய்த நூலில் இட்டு அலங்கரித்த பொன்னரிமாலையைப் பாணர் தலையில் சூட்டுவதைப் புகழ்வர்[38].

கிள்ளி வளவனின் கடும்பகல் தேர் வீசிருக்கையினை ஆலத்தூர்கிழார் சுட்டுவர்[39]. ஒரு நாளுள் முதலன பத்து நாழிகையும் அறத்தின் வழி ஒழுகிப் பின் பத்து நாழிகையும் இறையின் முறைமை கேட்டுச் செய்த பொருளைப் பரிசிலர்க்குக் கொடுத்து மகிழ்ந்திருத்தலால் கடும்பகல் தேர் வீசிருக்கை என்றார்[40] என்பர் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை.

கிள்ளிவளவன் வாயிலில் காலம் பார்த்து நிற்க வேண்டியதில்லை. கடும்பகல் தேர் வீசிருக்கையில் அவனைக் கண்ட பிறகு பூவில் ஆடும் வண்டு ஊதாத பொற்றாமரைப் பூவைச் சூடலாம் என அவனது நாண்மகிழிருக்கையில் பரிசில் கொடுக்கும் நிலை கூறப்பெறும்[41].

நன்னன் நாளோலக்கத்தை,

"வீயாது சுரக்குமவ னாண்மகி ழிருக்கை"

(மலைபடு. 76)

என்பர். இதில் பருவம் பொய்யாத மழை மேலும் மேலும் பொழியுமாறு நன்னன் இரவலர்க்கு வழங்கும் தன்மை சிறப்பிக்கப்பெறும்.

நன்னன் வேண்மானின் நறவுமகிழிருக்கையினை மாமூலனார் சுட்டுவர். அவனை நுண்ணிய மூங்கில் கோலினைக் கொண்ட விறலியரோடு பாணரையும் அன்பால் புரக்கும் இயல்பினன்[42] என்பர்.

பாரியின் தேர்வீசிருக்கை முன்றில் மதுச்சேறாக இருத்தலை,

"நறவுப்பிழிந் திட்ட கோதுடைச் சிதறல்
வாரசும் பொழுகு முன்றிற்
றேர்வீ சிருக்கை நெடியோன்"

(புறநா. 114:4-6)

என்பர் கபிலர். பாரி கள்ளுண்டு களித்து இரவலரையும் பருகச் செய்து தேர் முதலிய பரிசில்களை நாண்மகிழிருக் கையில் வரையாது வழங்குவான்.

அதியமான் நெடுமான் அஞ்சி அன்புள்ளத்தோடு நாடெல்லாம் அறியும்படி ஏற்பார்க்குத் தேர்களை வழங்கும் திருவோலக்கம் காண்போரை மயங்க வைக்கும். இதனை,

"கடும்பகட் டியானை நெடுமான் அஞ்சி
ஈர நெஞ்சமொ டிருஞ்சேண் விளங்கத்
தேர்வீ சிருக்கை''

(நற். 381:7-9)

என்பர் ஔவையார்.

மலையமான் திருமுடிக்காரியைப் பாடும் கபிலர், "நாட்காலையிலேயே மதுவையுண்டு நாளோலக்கத்து மகிழ்ச்சியை மகிழின் தேர் வழங்குதல் யாவர்க்கும் எளிது"[43] என்பர். இம்மன்னனைப் பாடும் வடமவண்ணக்கனார். "நின் மகிழ்ச்சியை உடைய இருக்கையில் நின் தாளாற்றலாற் செய்த பொருளை யாவர்க்கும் அளித்துப் பின் நீ விரும்பி உண்ணும் கள் நல் அமிழ்தாகுக"[44] என வாழ்த்துவர்.

ஆய் அண்டிரன் கள்ளுண்டு மகிழ்ந்திருக்கும் நாளோலக்கத்தில் இரவலர் பரிசிலாகப் பெற்ற நெடிய தேர்களின் மணியோசையை உலோச்சனார் குறிப்பிடுவர்[45].

அஃதை என்பானது நாண்மகிழிருக்கையைப் பரணர் பாடுவர். அவன் யானைகளையும் நல்ல அணிகலன்களையும் பரிசிலர்க்கு மகிழ்ச்சி பொருந்திய நாளோலக்கத்தில் வழங்குதல் இயல்பு என்பர்[46].

திதியன் தன்னை நாடிப் பாடி வரும் பாணருக்குப் பல அணிகலன்களையும் நாளவையில் கொடுத்தலை,

" ............ ............... பலகலம் உதவி
நாளவை யிருந்த நனைமகிழ் திதியன்"

(அகநா. 331:11-12)

என மாமூலனார் குறிப்பிடுவர்.

வழுதுணைத் தழும்பனின் பெருநாளிருக்கையை,

"வருநர் வரையாப் பெருநா ளிருக்கை"

(அகநா. 227.:15)

என நக்கீரர் விளக்குவர். பாடி வரும் இரவலருக்கு வரையாது வழங்குதல் இவ்விருக்கையின் சிறப்பாகும்.

சோழ நாட்டுக் கடற்கரை ஊர்களுள் ஒன்றான பொறையாறுக்குத் தலைவன் பெரியன். இவனது நறவு மகிழிருக்கையினை,

"நறவுமகிழ் இருக்கை நற்றேர்ப் பெரியன்"

(நற்.131:7)

என உலோச்சனார் பாடுவர்.

மூவன் என்பான் நேர நாட்டு ஊர்த்தலைவன். இவன் பெருந்தலைச் சாத்தனாருக்குப் பரிசில் நீட்டித்தான். அவனைப் பாடும் புலவர், "யான் நின்பால் வந்து வறிதே செல்லும் செய்தி நினது திருவோலக்கத்தில் நினக்கு மிக அண்மியோர் அன்றிப் பிறர் அறியாராக வேண்டும்"[47] என்பர்.

இந்நாண்மகிழிருக்கையை இனக்குழு மக்கள் வாழ்க்கையின் எச்சமாகக் கருதுவர். "இனக்குழு மக்கள் உணவு சேகரித்தல் நிலையிலிருந்து (Food Gathering Stage) உணவு உற்பத்தி நிலைக்கு (Food Growing Stage) மாறிய போது பகைக் குழுவை எதிர்த்துத் தற்காத்துக் கொள்ளத் திரண்டனர். அப்போது அவர்கள் மது அருந்தினர்"[48] என்பர் கா. சுப்பிர மணியன்.

### விருந்தோம்பல்

அரசர் அவைக்குப் புலவர், பாணர், பொருநர், கூத்தர், விறலியர், இரவலர் போன்றோர் பரிசில் நாடி வருவர். இவர்களை அரசர் இன்முகத்துடன் வரவேற்று விருந்தோம்புவர்.

இவ்விருந்தோம்பல் நாள்தோறும் தொடர்ந்து நிகழ்வதாகும்.

இரவலர் அரசரை அவையில் மட்டும் சென்று காணாது அவர்கள் எங்கு இருந்தாலும் (அந்தப்புரம் தவிர) சென்று காண்பதும் நடைமுறையாகும். அரசரும் அவர்களை வெகுளாது, அவையில் வந்து பார்க்குமாறு கூறாது அன்புடன் வரவேற்று விருந்தோம்புவர்.

இரவலரில் கிணைப் பொருநர் மட்டும் அரசரை விடியற்காலையில் அரண்மனைக்குச் சென்று துயில் எழுப்பிப் புகழ்ந்து பாடுவர். அரசர் அவர்களை வரவேற்று விருந் தோம்புவர்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தன்னை நாடி வரும் இரவலரைச் சிறப்பாக விருந்தோம்பும் இயல்பினன். இரவலர் மண்படிந்து மாசேறிய கிழிந்த ஆடை உடுத்தியிருக்க அரசன் அவ்வுடையை நீக்கிப் பட்டாலியன்ற ஆடையை உடுக்கச் செய்வான். நெடு நாட்களாகப் பசியால் வருந்திய வருத்தம் கெட ஊன் இறைச்சியும் ஆட்டிறைச்சியும் பெய்து சமைத்த வெண்ணெற் சோற்றினைக் கட்டெளிவுடன் கொடுத்து உண்பிப்பான்[49].

கிணைப்பொருநன் சேரமான் வஞ்சனைக் காணச் சென்றபோது அவனை விருந்தோம்பிய சிறப்பினைத் திருத்தாமனார் எடுத்துரைப்பர். பொருநன் இடையில் சிதர்ந்து நார்நாராய்க் கிழிந்த உடை உடுத்தியிருக்க அதனை நீக்கி உயர்ந்த உடையைத் தந்து உடுக்கச் செய்வான். தெளிந்த கட்டெளிவை நிரம்பப் பெய்து பருகச் செய்வான். மானிறைச்சியாகிய வறுத்த பொறிக்கறியையும் கொக்கின் நகம் போன்ற முறியாத நெல்லரிசிச் சோற்றையும் கொடுத்து உண்ணச் செய்வான்[50].

தொண்டைமான் இளந்திரையன் தன்னை நாடி வரும் பாணனுக்கு அவனது பாசி வேர் போன்ற கந்தையை அகற்றிப் பாலாவியன்ன நூலாற் செய்த துகில்களை அவனுக்கும் அவனது சுற்றத்தாருக்கும் கொடுத்து உடுக்கச் செய்வான். மடையன் ஆக்கின பல இறைச்சியிற் கொழுவிய

தசைகளையும் செந்நெல்லின் பொறுக்கரிசியால் ஆக்கிய சோற்றையும் அமிழ்தத்தை ஒக்கும் உண்டிகளோடு பிறவற்றையும் வெள்ளிக் கலங்களில் பரப்பி உண்பிப்பான்[51]. இவனது விருந்தோம்பல் பண்பு,

"மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து
ஆனா விருப்பிற் றானின் றூட்டி"

(பெரும்பாண். 478-479)

என்பதில் நன்கு விளங்கும். தாய் தன் குழந்தையைப் பார்க்குமாறு போலப் பார்த்து இன்முகத்துடன் தானே எதிர் நின்று உபசரித்து உண்ணச் செய்துள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.

சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியின் வாழ்க்கையை,

"அமிழ்தட் டானாக் கமழ்குய் யடிசில்
வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை"

(புறநா. 10:7-8)

என்பர் ஊன்பொதி பசுங்குடையார். இம்மன்னனை, அமிழ்தம் போன்ற மணங்கமழும் தாளிப்புடைய அடிசிலை விருந்தினருக்கு மிகுதி குறைபடாமல் வழங்கும் பழி தீர்ந்த வாழ்க்கையினன் என்பர். இதனால் விருந்தினரைப் பேணாத வாழ்க்கை பழியுடைய வாழ்க்கையாகக் கருதப் பட்டுள்ளமை தெளிவாகும்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் நெடுங்கடை முன் விடியலில் சென்ற பொருநனை, அரசன் உபசரித்து விருந்தோம்பும் தன்மையை எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் எடுத்துரைப்பர். பொருநன் பெரிய தடாரிப் பறையை ஒலித்து அரசன் எழும் முன்பாகவே அவனது நெடுங்கடை முற்றத்தில் நிற்க, அவனுக்கு அரசன் நெய் சொரிந்து பொரித்த தாளிதத்தையுடைய சூட்டிறைச்சியினையும் வள்ளத்தில் நிறையப் பெய்த கட்டெளிவையும் கொடுத்து விருந்தோம்புவான். பாம்பினது உரியாகிய தோல் போன்ற

வெள்ளிய பூ வேலை செய்த ஆடையைக் கொடுத்து உடுக்கச் செய்வான்[52]. இந்நிகழ்வு விடியற்காலையில் நிகழ்ந்துள்ளமை நோக்கத்தக்கதாகும்.

கரிகாற்பெருவளத்தான் தன்னை நாடி வரும் பொருநரைச் சிறப்பாக விருந்தோம்பும் பண்பினன். ஈரும் பேனும் நிறைந்து வேர்வையினால் நனைந்த வேற்று நூலால் தைக்கப்பட்ட அப்பொருநனின் ஆடையை முழுவதுமாக அகற்றி நுண்மையான பூத்தொழில் முற்றுப்பெற்ற பாம்பின் தோலையொத்த ஆடைகளை அளித்து உடுக்கச் செய்வான். ஏவல் மகளிரிடம் வட்டில் நிறையக் கள்ளை வார்த்துக் கொடுக்குமாறு பணிப்பான்[53]. கொழுத்த செம்மறியாட்டின் புழுக்காகிய இறைச்சியையும் சுடப்பட்ட இறைச்சித் துண்டத்தையும் பல்வேறு வடிவங்களையுடைய தின்பண்டங் களையும் கொடுத்து உண்ணச் செய்வான்[54].

மற்றொரு பொருநன் கொட்டைப் பாசியின் வேர் போன்று அழுக்கோடு குறைந்துபோன தையலையுடைய ஆடை உடுத்தியிருக்கக் கரிகாற் பெருவளத்தான் அவற்றை நீக்கிக் கரையில் கொட்டைகள் முடியப்பெற்ற தூய பட்டுடைகளைக் கொடுத்து உடுக்கச் செய்வான். பொற்கலத்தில் பூமணம் கமழும் கட்தெளிவை விரும்பியவெல்லாம் உண்க எனக் கொடுத்து விருந்தோம்புவான்[55] இவ்விருந்தோம்பல் "வைகல் வைகல்"[56] நிகழ்வதாகக் கூறுவர். இதனால் பொருநராகிய விருந்தினர் தங்கியிருக்கக் கூடிய ஒவ்வொரு நாளும் விருந்தோம்பல் குறைவற நிகழ்ந்துள்ளமை தெளிவாகும்.

நன்னன் சேய் நன்னன் தன்பால் வரும் கூத்தருக்கு நுண்ணிய நூலால் இயன்ற ஆடைகளைக் கொடுத்து உடுக்கச் செய்வான். நாள்தோறும் தசைகளுடன் கூடிய வெண்ணெல் சோற்றைக் கொடுத்து உண்பிப்பான். பல நாள் தங்கினாலும் முதல் நாள் விருப்புடன் விருந்தோம்புவான்[57].

கபிலர் பாரியின் விருந்தோம்பலை,

"மட்டுவாய் திறப்பவு மைவிடை வீழ்ப்பவும்
அட்டான் றானாக் கொழுந்துவை யூன்சோறும்

பெட்டாங் கீயும்"

(புறநா.113: 1-3)

என்பர். இது பாரியின் விருந்தோம்பலை நன்கு விளக்கும். பாணர் மண்டைகள் நிறைய வார்க்க வேண்டி வடிக்கப் பெற்ற கள் பாரியின் குன்றத்தில் கல்லை உருட்டி ஒழுகுமளவுக்கு ஒரு காலத்தில் நிறைந்திருந்தது எனக் கபிலர் கையறுநிலையாகப் பாடுவர்[58]. பாணர் முதலாயினோர் தன்னை நாடி வரும் பொழுது முதலில் இனிய கள்ளை வழங்கி அவர்களைக் களிக்கச் செய்தல் நடைமுறை என்பது தெளிவாகும்.

ஓய்மானாட்டு நல்லியக்கோடன் பாணனுக்கு மூங்கில் உட்பட்டையை உரித்தது போன்ற தூய ஆடையைக் கொடுத்து உடுக்கச் செய்வான். பாம்பு வெகுண்டன்ன தேறலைப் பருகச் செய்வான். பல்வேறு சுவையுடைய அடிசிலைப் பொற்கலத்தில் தானே நின்று உண்ணச் செய்வான்[59].

குமணன் தன்னை நாடி வரும் இரவலர்க்குக் கொழுவிய துவையலோடு கூடிய நெய்யுடை அடிசிலைப் பொற்கலங்களில் வைத்து ஊட்டுவான்[60].

பிட்டங்கொற்றன் கள்ளாகிய தெளிவைப் பாணர் சுற்றத்துக்குக் கொடுத்து நுகர்விப்பான்[61].

காரியாதி என்னும் பாண்டி நாட்டுக் குறுநில மன்னன் இறந்துவிட, அதனை அறிந்த ஆலூர் மூலங்கிழார் கையறுநிலையாகப் பாடுவர். அதில் அவனது விருந்தோம்பற் பண்பை நினைவர். காரியாதி "அடையாத பெரிய இல்லில் மதுவினால் ஒழியாத மண்டையுடன் சோற்றை யாவர்க்கும் வரையாது வழங்குவான். நெய்யில் வறுத்த இறைச்சியைப் பலர்க்கும் கொடுத்து உண்பிப்பான்"[62] எனப்பாடுவர்.

அதியமான் நெடுமான் அஞ்சியை இரவுப் பொழுதில் பொருநன் காணச் செல்லுதலை,

"சென்ற ஞான்றைச் சென்றுபட ரிரவின்"

(புறநா. 390 : 10)

என்பர். அவ்வாறு இரவில் வரும் போதும் அதியமான் சிறப்பாக விருந்தோம்புவான். பொருநனின் இடையிலிருந்த பழமையான நீர்ப்பாசி போல் சிதர்ந்திருந்த ஆடையை நீக்கிப் புத்தாடை கொடுத்து உடுப்பிப்பான். களிப்பினைத் தரும் கள்ளோடும் ஊன் துவையலோடு கூடிய சோற்றை வெள்ளிக் கலத்தில் பெய்து உண்பிப்பான்[63]. இரவுப் பொழுதில் வந்த பொருநனை அரசன் இவ்வாறு விருந்தோம்பியுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.

அதியமான் மகன் பொகுட்டெழினியின் நெடுமனை முற்றத்தில் பொருநன் ஒருவன் பசலை நிலவின் பனிபடு விடியலில் சென்று பாட, அவனுக்கு அரசன் நூலானியன்ற உடையைத் தந்து உடுக்கச் செய்வான். தேளின் கடுப்பைப் போல் நாட்படப் புளிப்பேறிய கள்ளை வள்ளத்தில் பெய்து உண்ணுமாறு கொடுப்பான்[64].

நாட்காலையில் தன்னை நாடி வரும் கிணைப் பொருநனுக்கு ஓய்மான் வில்லியாதன் சோற்றுணவோடு பன்றியின் கொழுவிய ஊன் துண்டங்களை நெய் பெய்து பொரித்து வழங்குவான்[65].

### *பரிசில் வழங்கல்*

இரவலர் நாள்தோறும் அரசரை நாடிப் பரிசில் வேண்டி வருவர். அவர்களுக்கு அரசர் பல்வேறு வகையான பரிசில்களை வரையாது வழங்குதலை நடைமுறையாகக் கொள்வர். அப்பரிசில்களைக் காலம் தாழ்த்தாது உடனே வழங்குவர். இரவலர்களின் தன்மைக்கேற்பக் கொடுப்பர். பாணர், கூத்தர், பொருநர், பாடினி, விறலி ஆகிய யாவரும் அரசரிடம் பரிசில் பெறுவர். அரசவை நிகழ்வுகளுள் பரிசில் வழங்குதல் நாள்தோறும் நிகழ்வதாகும்.

கொடை வழங்குதலை அரசர் தம் கடனாகக் கொள்வர். ஈகையாகிய கொடைக் கடனை ஏற்றுக் கொண்ட கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமானை,

"கொடைக்கடன் என்ற கோடா நெஞ்சின்

உதியன்'

(அகநா. 168 : 6-7)

என்பர். இவ்வரச வாழ்க்கையை 'அளியியல் வாழ்க்கை'[66] எனச் சிறப்பிப்பர்.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், இரப்பவர் வறுமை கெடப் புகழமைந்த நல்ல அணிகலன்களை நாள்தோறும் வரையாது வழங்கும் இயல்பினன்[67].

சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ தனது வீரத்தைப் பாடிய பாடினிக்கு இழையினையும் பாணனுக்கு வெள்ளி நாரில் கட்டிய பொற்றாமரையினையும் பரிசாக வழங்குவான்[68].

சேரமான் வஞ்சன் தன்னைப் பாடிய கிணைப் பொருநனுக்குப் பல மணிகள் விரவிக் கோக்கப்பட்டு ஒளி விளங்கும் மாலையையும் பூவேலை செய்யப்பட்ட உடைகளையும் பரிசாக நல்குவான்[69].

தொண்டைமான் இளந்திரையன் தன்னை நாடி வரும் பாணனுக்குப் பொற்றாமரை மலரையும் விறலிக்குப் பொன்னரி மாலையையும் பரிசாகக் கொடுப்பான். தேர், அணிகலன் ஆகியவற்றையும் தந்து, காலம் தாழ்த்தாது அன்றே விடுப்பான்[70].

கரிகாற் பெருவளத்தான் பொருநருக்குப் பிடிகளையும், களிறுகளையும் கன்றுகளுடன் பரிசாகக் கொடுப்பான். அவர்கள் விரும்பிய ஆடை அணிகலன்களை வேண்டுமளவு கொடுத்து மகிழ்விப்பான்[71]. பொருநனுக்குப் பொற்றாமரை மலரையும் பாடினிக்குப் பொன்னரி மாலையையும் பரிசிலாகக் கொடுப்பான். நான்கு குதிரைகள் பூட்டிய யானைக் கொம்பால் செய்த கொடிஞ்சி உடைய தேரையும் வழங்கி அதில் அவர்களை ஏறுமாறு செய்து தன் காலில் ஏழடி பின்வந்து வழியனுப்புவான்[72].

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பொருநனுக்கு வேனிற் காலத்து வெம்மை போன்ற வறுமை

நீங்குமாறு அணிகலன்கள் பலவும் கொடுத்தருளுவான்[73].

பாண்டிய நெடுஞ்செழியன் விடியற்காலையில் பாடி வரும் பொருநருக்குத் தேருடன் குதிரைகளையும் பரிசிலாக வழங்குவான்[74]. கன்றும் பிடியுமாகிய யானைத் திரளோடு களிற்றினையும் கொடுப்பான். அவர்களுக்குப் பொற்றாமரை மலரைச் சூட்டி அணிகலன்கள் பலவற்றையும் பரிசாக நல்குவான்[75].

இலவந்திகைப் பள்ளி துஞ்சிய பாண்டியன் நன்மாறன் இரப்போர்க்குப் பெறுதற்கரிய அணிகலன்களைப் பெரிதும் வழங்குவான்[76].

ஓய்மானாட்டு நல்லியக்கோடன் பாணனுக்குத் தேர், வெள்ளை எருது, யானை, பாகன், குதிரை ஆகிய பரிசில் களைக் காலம் தாழ்த்தாது அன்றே கொடுத்தனுப்புவான்[77].

நன்னன் சேய் நன்னன் கூத்தர் தலைவனுக்குப் பொற்றாமரை மலரையும் விறலியருக்கு உயர்ந்த அணிகலன் களையும் பரிசிலாக வழங்குவான். தேர், வேழம், பகுநிரை, குதிரை ஆகிய பலவற்றையும் மழை சுரப்பது போன்ற ஈகையோடு நல்குவான்[78].

நன்னன் வறுமையால் அழிந்த சுற்றத்துடன் பாணர் முதலியோர் செல்லின் விலைமிக்க அணிகலன் முதலிய செல்வங்களை அவர்களது தகுதியை ஆராயாது கொடுப்பான்[79].

பாரி அறிவு பற்றுக்கோடாக வரும் இரவலருக்கு மலை போலும் களிறுகளுடன் நல்ல அணிகலன்களைப் பரிசிலாக வழங்குவான்.[80]

வெளியன் வேண்மாள் ஆய் எயினன் இரவின் கடையாமத்தில் கடைவாயிலில் நின்றுபாடும் நுண்கோல் அகவுநருக்கு வெள்ளிய கொம்புடைய யானையைப் பரிசாக நல்குவான்[81].

நள்ளி இரப்போர்க்கு அணிகலன்கள் அணிந்த நெடிய தேரைக் களிற்றுடன் எஞ்ஞான்றும் வானம்

சுரந்தளிப்பது போன்று அளிப்பான்[82]. நாள்தோறும் நல்ல அணிகலன்களைக் களிற்றோடு கொண்டு வந்து மேற்கூடு விளங்கும் அகன்ற நகரின்கண் இருந்து சூழ்ந்திருக்குப் பரிசிலர்க்கு வழங்குவான். இதனை,

"நாடொறு நன்கலங் களிற்றொடு கொணர்ந்து
கூடுவிளங்கு வியனகர்ப் பரிசின்முற் றளிப்ப"

(புறநா. 148 3-4)

என்பர் வன்பரணர்.

முசுண்டை என்னும் அரசன் பாணர் இரந்து வேண்டின் நாள்தோறும் பொற்பூணினைக் கொம்பில் நெருங்கச் சேர்த்துப் பொன்னரி மாலையைக் கழுத்தில் அணிவித்து, உயர்ந்து அசையும் அழகிய திமிலினையுடைய ஏற்றை முன்னர் நிறுத்தி, நீண்ட தேரை, யானையுடன் சேர வழங்குவான்[83].

வேள் ஆய் ஆண்டிரன் எந்நாளும் மன்றத்தின் கண் வரும் பரிசிலர்க்கு யானையைக் கன்றுடன் அணி அணியாகக் கொடுப்பான்[84].

குமணன் பாடுவார் சுற்றம் கேடின்றி இருக்க வேண்டுமெனப் பொன்னால் ஆன அணிகலன்களை எளிதாக வழங்குவான்[85].

பிட்டங்கொற்றன் யானை வெண்கோடு பயந்த முத்தை விறலியருக்குக் கொடுப்பான்[86].

அதியமான் நெடுமான் அஞ்சி ஊருக்கு முன்னிடமான பொதியிலில் தங்கியிருக்கும் பாண் சுற்றத்தார் பெருந்துயர் போக்கச் செந்நெல்லை நெற்போரோடு நல்குவான்[87].

இவ்வாறு அரசர் பல்வேறு வகையான பரிசில்களை இரவலர்க்கு வழங்குதல் நடைமுறையாகும்.

## அரசியர் வாழ்க்கை

அரசன் மனைவியைக் 'கோயிலாள்'[88] எனப்

பதிற்றுப்பத்து குறிப்பிடும். கோயில் என்பது அரண்மனையைக் குறிக்கும். அதற்கு உரிமையுடையவள் என்னும் பொருளில் இவ்வாறு அழைக்கப்பெறுவாள்.

"அரசவையில் அரசருக்குப் பக்கத்தில் அமரும் தகுதி ஒருவருக்கே வழங்கப்பட்டது. அவர் அரசமாதேவி-பெருந்தேவி என்றழைக்கப்பட்டார்"[89] என்பர் அரங்க. இராமலிங்கம். சங்கப்பாடல்களில் அரசியர் அரசருக்குப் பக்கத்தில் அரசவை, நாண்மகிழிருக்கை போன்றவற்றில் இருந்தமை வெளிப்படை யாகச் சுட்டப்பெறவில்லை.

அரசியின் பண்பு நலத்தைப் போற்றி "இத்தகைய தன்மையுடையவளுக்குக் கணவனே" என அரசரை விளிப்பது புலவர் மரபாகும். இளஞ்சேரலிரும்பொறையை,

"சேணாறு நல்லிசைச் சேயிழை கணவ"

(பதிற். 88:36)

என்பர். இம்மரபு அக்கால அரசனும் அரசியும் ஒத்த மதிப்புடையோராய் விளங்கினர் என்பதை உணர்த்தும்.

அரசியரின் நடைமுறை வாழ்க்கையினை முழுமையாக அறிந்துகொள்ள இயலாவிடினும் ஒரு சில நிகழ்வுகள் அவர்கள் வாழ்க்கையை உணர்த்துவனவாக உள்ளன.

அரசியின் நடைமுறை வாழ்க்கை நெடுநல்வாடையில் ஓரளவு புலனாகும். அவள் அரண்மனையில் பாண்டியன் தவிர சிறுகுறுந்தொழில் செய்யும் ஆடவரும் அணுக இயலாத காவலையுடைய கட்டுகளில் வாழ்வாள்[90].

அரசி துயில்கொள்ளும் கட்டில், படுக்கை, விரிப்பு போன்றவை அவளது செல்வ வாழ்க்கையை எடுத்துரைக்கும். அவளுக்குத் தூக்கம் வரச் சிலதியர் அடி வருடுவர். இதனை,

"மெல்லியல் மகளிர் நல்லடி வருட"

(நெடுநல். 151)

என்பர் நக்கீரர்.

**கண்படை நிலை**

அரசன் இனிது துயின்றது கூறலைப் பாடுதலுக்குத் தொல்காப்பியர்,

"கண்படை கண்ணிய கண்படை நிலையும்"[91]

என்பதில் இலக்கணம் வகுப்பர். இளம்பூரணர் "இறைவன் கண்படை நிலையைக் குறித்த கண்படை நிலையும் என்றது அரசன் இனிது துயின்றது கூறல் என்றவாறாம்"[92] என்பர். கண்படை நிலைக்குச் சங்க இலக்கியங்களில் சான்று இல்லை.

**நிறைவுரை**

அரசர் மிகப்பெரிய அரண்மனைகளில் வாழ்வர். விடியற்காலையில் சூதர் முதலானோர் துயில் எழுப்ப எழுவர். துயிலெழும்பொழுது வலம்புரி, முரசு முதலானவை முழங்கும். அரசர் எங்கு சென்றாலும் இம்மரபு பின் பற்றப்படும். இதனைப் பாசறைத் துயிலெடை நிகழ்வு நன்குணர்த்தும்.

அரசர் தினமும் தத்தம் அரசவையில் கூடுவர். இவ்வவையில் முறைவழங்குதல், திறை பெறுதல் என்பன அரசாட்சி சார்ந்த நடைமுறைகளாகும்.

நாண்மகிழிருக்கை வேந்தர், குறுநில மன்னர், ஊர்த்தலைவர் ஆகிய அனைவருக்கும் உரிய நடைமுறையாகும். இம்மகிழிருக்கையில் அரசரைப் பாணரும் விறலியும் ஆடிப் பாடி மகிழ்விப்பர். பாடினி பொன்னரி மாலையும் பாணர் பொற்றாமரை மலரும் பரிசாகப் பெறுவர். அந்தணர் பொற்கலன் பெறுதல், பொருநர் யானை, குதிரை பெறுதல், புலவர் தேர் பெறுதல் என்பனவும் நடைமுறைகளாகும். நாண்மகிழிருக்கையில் தேர் வழங்குதல் குறிப்பிடத்தக்கதாகும். இந்நிகழ்வு கடும்பகலில் நிகழ்ந்துள்ளது. இங்கு ஏனைய அரசர் பணிந்து தொழில் கேட்க அறம் செய்வதும் நிகழும்.

அரசர் நடைமுறை வாழ்வில் விருந்தோம்பல் அன்றாடம் நிகழ்வதாகும். அரசர் பகற்பொழுதில் விருந்தோம்புதல் பெரும்பான்மை ஆகும். அரசன் துயிலெழும்

விடியற்காலையிலும், அவனது அரண்மனை வாயில் முன்றிலில் கிணைப் பொருநர் காணச் செல்வர்; இரவிலும் செல்வர். அவ்வாறு விடியலிலும் இரவிலும் வரும் இரவலரையும் விருந்தோம்புதல், அரசரின் உயர்ந்த பண்பினைக் காட்டும்.

அரசர் விருந்தோம்பல் செயற்பாடுகளில் பழைய ஆடையை நீக்கிப் புத்தாடை உடுக்கச் செய்தல், கள்ளைக் கொடுத்துக் களைப்பைப் போக்குதல், ஊன் சோற்றை இறைச்சியுடன் உண்ணச் செய்தல் என்பன சிறப்பிடம் பெறும். இவ்விருந்தோம்பல் வேந்தர், குறுநில மன்னர் ஆகிய அனைவருக்கும் உரிய பொதுப் பண்பாகும். விருந்தோம்பும் பொழுது அரசர் இரவலர் அருகிருந்து இன்சொல் கூறி உண்பித்தல் குறிப்பிடத்தக்கதாகும்.

அரசர் இரவலருக்கு ஆடை, அணிகலன், இழை, பொற்றாமரை மலர், பொன்னரி மாலை, பிடி, களிறு, யானைக் கன்று, குதிரை பூட்டிய தேர், வெள்ளை எருதுடன் கூடிய தேர், தேர்ப்பாகன், பசு நிரை ஆகியவற்றைப் பரிசிலாகக் கொடுப்பர். நெற்போரோடு செந்நெல்லையும் பரிசிலாக வழங்குவர். இரவலரை ஏழடி பின் வந்து வழியனுப்புவர்.

அரசியர் அரசனுக்கு இணையான மதிப்பைப் பெறுவர். அந்தப் புரத்தில் இருப்பர். இவர்கள் அரசனோடு அவையில் இருத்தல், பிறபொழுதுபோக்குகள் போன்ற நிகழ்வுகள் பாடப்பெறவில்லை.

அரசர் துயிலச் செல்லல் பற்றிப் பாடுதற்குத் தொல்காப்பியர் இலக்கணம் கூறினும் இலக்கியம் இல்லை.

## அடிக்குறிப்புகள்

1. தொல். சிறப்புப்பாயிரம். 1-3.

2. புறநா. 378:5.

3. முல்லைப். 86.

4. மலைபடு. 489-491.

5. தொல். பொருள். புறத். நூ. 30: 1-2.

6. க. வெள்ளைவாரணன், (1983), **தொல்காப்பியம் புறத்திணையியல் உரைவளம்**, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், ப.336.

7. மா. இராசமாணிக்கனார், (1970), **பத்துப்பாட்டு ஆராய்ச்சி**, சென்னைப் பல்கலைக் கழகம், ப.450.

8. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை (வி.உ.), (1962), **புறநானூறு 201-400 பாட்டுக்கள்**, மறுபதிப்பு, சென்னை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.58.

9. ச.வே. சுப்பிரமணியன், (1978), **இலக்கணத்தொகை யாப்பு பாட்டியல்**, சென்னை-20, தமிழ்ப் பதிப்பகம் பக்.443-444.

10. தொல். பொருள். புறத். நூ. 17:17.

11. ...(1953), **தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரையுடன்**, சென்னை-1. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.121.

12. அ. ஆறுமுகம், (1994), **சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு**, திருமழபாடி, பாவேந்தர் பதிப்பகம் ப.237.

13. புறநா. 367: 4-8.

14. அகநா. 93: 4-5.

15. நற். 400: 7-8.

16. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை (வி.உ), (1962), **புறநானூறு 201-400 பாட்டுக்கள்**, மேலது, ப.85.

17. ந. சுப்பிரமணியன், (1982), **சங்ககால வாழ்வியல்**, சென்னை, நியூசெஞ்சுரி புக் உறவுஸ், ப.137.

18. புறநா. 10: 3-4.

19. புறநா. 39: 8-10.

20. அரங்க. இராமலிங்கம், (1987), **சங்க இலக்கியத்தில் வேந்தர்**,சென்னை, ஐந்திணைப் பதிப்பகம் (வி.உ), ப.214.

21. அ. ஆறுமுகம், (1994), **சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு**, மேலது, ப.234.

22. அகநா. 127: 3-10.

23. அகநா. 124: 1-5.

24. புறநா. 54:3, பதிற். 38: 9, அகநா. 331: 12.

25. அகநா. 227: 15.

26. பதிற். 12: 25.

27. புறநா. 114: 6, நற்.381: 9.

28. அகநா. 97: 12, நற். 131: 7.

29. புறநா. 29: 5.

30. உ.வே. சாமிநாதையர்(உ.ஆ), (1974), **புறநானூறு**, ஏழாம்பதிப்பு, சென்னை-41, உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், ப.79.

31. தமிழ் அகராதி, ப.2211.

32. அ. ஆறுமுகம், (1994), **சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு**., மேலது, ப.238.

33. அரங்க. இராமலிங்கம், (1987), **சங்க இலக்கியத்தில் வேந்தர்**, மேலது, ப.216.

34. பதிற். 12: 25.

35. பதிற். 43: 34-36.

36. பதிற். 65: 12-17.

37. புறநா. 400: 8-11.

38. புறநா. 29: 1-5.

39. புறநா. 69: 17-18.

40. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, (1967), **புறநானூறு 1-200 பாட்டுக்கள்**, மறுபதிப்பு, சென்னை-1 சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.178.

41. புறநா. 69: 17-22.

42. அகநா. 97: 9-12.

43. புறநா. 123: 1-2.

44. புறநா. 125: 6-8.

45. நற். 167: 2-4.

46. அகநா. 76: 3-5.

47. புறநா. 209: 13-19.

48. கா. சுப்பிரமணியன், (1987), **சங்ககாலச் சமுதாயம்**, இரண்டாம் பதிப்பு, சென்னை-98, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், ப.62.

49. பதிற். 12: 14-21.

50. புறநா. 398: 19-25.

51. பெரும்பாண். 468-477.

52. புறநா. 397: 13-16.

53. பொருந. 79-88.

54. பொருந. 103-108.

55. பொருந. 153-158.

56. பொருந. 108.

57. மலைபடு. 560-566.

58. புறநா. 115: 2-4.

59. சிறுபாண். 235-245.

60. புறநா. 160: 7-9.

61. புறநா. 170: 12-13.

62. புறநா. 261: 1-3 & 8-10.

63. புறநா. 390: 14-18.

64. புறநா. 392: 1-5 & 13-19.

65. புறநா. 379: 8-10.

66. அகநா. 208: 6.

67. பதிற். 54: 7-8.

68. புறநா. 11: 10-18.

69. புறநா. 398: 27-29.

70. பெரும்பாண். 480-493.

71. பொருந. 125-127.

72. பொருந. 159-167.

73. புறநா. 397: 17-18.

74. மதுரைக். 223-224.

75. மதுரைக். 99-105.

76. புறநா. 56: 17.

77. சிறுபாண். 257-261.

78. மலைபடு. 569-581.

79. அகநா. 349: 7-8.

80. அகநா. 303: 8-10.

81. அகநா. 208: 1-5.

82. அகநா. 238: 11-14.

83. அகநா. 249: 4-9.

84. புறநா. 135: 11-13.

85. புறநா. 160: 10-11.

86. புறநா. 170: 10-11.

87. புறநா. 390: 19-23.

88. பதிற். எட்டாம்பத்து - பதிகம்.

89. அரங்க. இராமலிங்கம், (1987), **சங்க இலக்கியத்தில் வேந்தர்**, மேலது, ப.242.

90. நெடுநல். 106-107.

91. தொல். பொருள். புறத். நூ. 29:5.

92. ....(1953), தொல்காப்பியம் பொருளதிகாரம் **இளம்பூரணர் உரையுடன்**, மேலது, ப.146.

16/7/18

I. தொல்காப்பியத்தில் கலைஞர்

II. பாணர்

பாணர் பிரிவு

பாணர் குடியிருப்பு

பாண் சுற்றம்

பாணர் வறுமை

நாடோடி வாழ்க்கை

பாணர் வைகறைச் செலவு

பாணர் நாளவை

பாணர் இசைமரபு

பாணர் பெறும் பரிசில்

பாணர் பாசறைச் செலவு

பாணர் மீன் பிடித்தல்

பாண்மகளிர் மீன் விற்றல்

அகவாழ்வில் பாணர்

பாணர் - மருத நிலம்

III. கூத்தர் வாழ்க்கை

ஊரிஃதென்னா வாழ்க்கை

கூத்தர் செலவு

கூத்தர் - அரசவை நிகழ்வு

கூத்தர் பெறும் பரிசில்

ஆரியக் கூத்தர்

# இயல்-4

## கலைஞர் வாழ்க்கை

கலை உள்ளதை உணர்ந்தவாறு உணர்த்தும் தன்மை உடையது. உணர்ச்சியும் கற்பனையும் கொண்டு வளர்வது. இக்கலை உணர்ச்சி மனிதனின் உணர்வு முழுமைக்கும் விருந்தாக அமையும்.

ஓவியம், சிற்பம், இசை, இலக்கியம், நாட்டியம், நாடகம் எனக் கலை பல வகைப்படும். இவை நுண்கலைகள் (Fine Arts) அல்லது கவின்கலைகள் (Aesthetic Arts) எனப்பெறும்.

கலை மனித வாழ்வோடு நெருங்கிய தொடர்புடையது. சங்க காலத்தில் இசை, கூத்துக் கலைகள் பெரிதும் போற்றப் பெற்றன. கலைஞர்கள் மிகவும் மதிக்கப்பெற்றனர். இக்கலைஞருள் பாணர், கூத்தர், பொருநர், விறலியர் என்போர் குறிப்பிடத் தக்கவராவர்.

### I. தொல்காப்பியத்தில் கலைஞர்

தொல்காப்பியர், மக்கள் புறவாழ்விலும் அக வாழ்விலும் கலைஞர் பெறும் பங்கினை இலக்கணமாகக் கூறுவர்.

புற வாழ்வில் கலைஞர் பங்கினைத் தொல்காப்பியர்,

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும்"[1]

என்பர். இது ஆற்றுப்படை இலக்கியங்களுக்கு இலக்கணமாக இருப்பினும் கலைஞர் புரவலரை நாடிச் சென்று பரிசில் பெறுதல், தத்தம் இனத்தவரைப் பரிசில் பெற்ற புரவலர்பால் ஆற்றுப்படுத்துதல் என்னும் நடைமுறை உண்மைகளை நன்குணர்த்தும்.

கலைஞருள் சூதர், அரசர் அரண்மனையில் விடியற் காலையில் சென்று பாடுதலை,

"சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்"[2]

என்பர். சூதர் என்பார் பாணர் குடியினர் ஆவர்.

கலைஞர் அகத்தில் கற்பு வாழ்க்கையில் பெரிதும் பங்காற்றுவர். கற்பில் கூற்றுக்குரிய மாந்தரைக் கூறும் தொல்காப்பியர்,

"பாணன் கூத்தன் விறலி
.................... ............ .......... ...........
தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர்"[3]

என்பர். அகவாழ்வில் தலைவன், தலைவியை இடைநின்று கூட்டும் வாயில்கள் பன்னிருவருள் பாணன், பாடினி, கூத்தர், விறலியர் என்னும் நால்வரையும் குறிப்பிடுவர்[4].

கற்பில் தோழிக்குரிய கூற்று வகைகளைக் குறிப்பிடும் தொல்காப்பியர்,

"பாணர் கூத்தர் விறலியர் என்றிவர்
பேணிச் சொல்லிய குறைவினை எதிரும்"[5]

என்பர். பாணர், கூத்தர், விறலியர் ஆகிய மூவரும் வேண்டும் வேண்டுதலைத் தோழி மறுப்பாள் என்பது இதன் பொருள். தலைவனுக்காக இம்மூவரும் குறை நேர்ந்து செல்லும் மரபை இது உணர்த்தும்.

கூத்தருக்குரிய கூற்று வகைகளைத் தொல்காப்பியர்,

"தொல்லவை உரைத்தலும் நுகர்ச்சி ஏத்தலும்
பல்லாற் றானும் ஊடலில் தகைத்தலும்
உறுதி காட்டலும் அறிவுமெய்ந் நிறுத்தலும்
ஏதுவின் உணர்த்தலும் துணியக் காட்டலும்
அணிநிலை உரைத்தலும் கூத்தர் மேன"[6]

என்பர். இவ்வெட்டுக் கூற்று வகைகளுள் முதல் நான்கினைத் தலைவியிடத்துக் கூறும் கூற்றாகவும் இறுதி நான்கினைத் தலைவனிடத்துக் கூறும் கூற்றாகவும் பகுப்பர்[7].

தலைவன் தொலைவிடத்து உறையுங்கால் தலைவியை நோக்கி அவ்விடத்தை விட்டு, மீண்டு வரும் நிலைமை கூறுதல்

கூத்தருக்கும் பாணருக்கும் உரிய பொதுக் கூற்றாகும். இதனை,

"நிலம்பெயர்ந் துறைதல் வரைநிலை யுரைத்தல்
கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை யுரிய"[8]

என்பர்.

இவற்றால் தொல்காப்பியர் காலச் சமுதாயத்தில் பாணர் முதலான கலைஞர், மக்கள் புறவாழ்விலும் அகவாழ்விலும் பெரிதும் பங்கு கொள்வது விளங்கும்.

## II. பாணர்

"பண் என்னும் சொல்லின் அடியாகப் பிறந்து முதல் நீண்டது தான் பாண் என்பதாகும். பாண் என்பது பாண்குடி, பாண்சேரி, பாண்கடன் எனப் பல சொற்களின் வேர்ச் சொல்லாகும். பாண் என்பது 'அர்' என்னும் பலர்பால் ஈறு பெற்றுப் பாணர் என்றாயிற்று. பண் இசைப்போர் பாணர் எனத் தொழிலாகு பெயராகவோ பண்பாகு பெயராகவோ அமைந்து உள்ளது"[9] என்பர் வெ. வரதராசன்.

"இசையும் கூத்தும் முழுதுறத் தழுவி வாழ்ந்த ஒரு பழங்குடியினர் பாணர் ஆவர். இவர்கள் பாடுவார் என்ற அளவில் பொருள் சொல்லக் கூடிய சுருங்கிய கலை வல்லார் அல்லர். பாடுவாரும் ஆடுவாரும் கருவியிசைப்போரும் கருவி செய்வாரும் அவர்தம் பெண்டிரும் கூடிய ஒரு பெருந்தொகுதியினர் ஆவர்"[10] எனபர் இரா. இளங்குமரன்.

### பாணர் பிரிவு

"பாணரும் இசைப் பாணரும், யாழ்ப் பாணரும், மண்டைப் பாணருமெனப் பலராம்"[11] என்பர் நச்சினார்க்கினியர்.

வாய்ப்பாட்டு இசைப்போர் இசைப்பாணர் எனப்படுவர். நரம்புக் கருவி இசைப்போர் யாழ்ப்பாணர் எனப்படுவர். தோற்கருவி இசைப்போர் மண்டைப்பாணர் எனப்படுவர்.

யாழ்ப்பாணர் பயன்படுத்தும் யாழைக் கொண்டு சீறியாழ்ப்பாணர், பேரியாழ்ப் பாணர் எனப் பெயர் பெறுவர்.

இதனைச் சிறுபாணாற்றுப் படை,

"சீறியாழ் இடவயின் தழீஇ"

(சிறுபாண். 35)

என்றும் பெரும்பாணாற்றுப்படை,

"பேரியாழ் முறையுளிக் கழிப்பி"

(பெரும்பாண். 462)

என்றும் குறிப்பிடும். ஒன்பது நரம்புகளைக் கொண்டது சீறியாழ் எனப்படும். இருபத்தொரு நரம்புகளைக் கொண்டது பேரியாழ் எனப்பெறும்.

"மண்டை என்னும் பெயர் கொண்ட உண்கலத்தை வைத்திருப்பவர் மண்டைப் பாணர் ஆவர்"[12] என்பர் மா. இராச மாணிக்கனார்.

## பாணர் குடியிருப்பு

பாணர் குடியிருப்பு 'பாண்சேரி'[13] எனப்பெறும். நெடுங்கொடி நுடங்கும் நறவுமலிப் பாக்கத்தில் வாழ்வர்[14]. மதுரையில் வையைப் பேரியாற்றின் துறைகள் தோறும் பூந்தோட்டங்கள் சூழ நெடுங்காலம் வாழ்ந்துள்ளனர்[15].

## பாண் சுற்றம்

பாணர் சுற்றம் சூழ வாழ்வர். பாண் சுற்றம் என்பது பாணர், பாண் மகளிர், இசைபயிலும் இளமாணாக்கர், ஏவலிளையர் ஆகிய அனைவரும் அடங்கியதாகும். பாணர் தலைவனை,

"இரும்பாண் ஒக்கல் தலைவன்"

(நற். 300: 9)

என்பர். தன் சுற்றத்தோடு தானைத் தலைவன் ஒருவனைக் காணச் செல்லும் பாணனை,

"இரும்பே ரொக்கலொ டொருங்கினி தருந்தித்
தங்கினை சென்மோ பாண"

(புறநா. 320: 14-15)

என்பர். பாணர் சுற்றமாக வாழும் நிலையை இவை விளக்கும்.

***பாணர் வறுமை***

பாணர்தம் புறத்தோற்றம் வறுமையைப் பறை சாற்றும். பாண் சுற்றம் உடும்பு உரித்தாற் போன்ற எலும்பெழுந்த விலாப்புடையை உடையது. அவர்கள் தம் மிக்க பசியைத் தீர்ப்பாரைக் காணாது நொந்த உள்ளம் உடையவராக உள்ளனர். இதனை,

"உடும்புரித் தன்ன வென்பெழு மருங்கிற்
கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது
சில்செவித் தாகிய கேள்வி நொந்துநொந்
தீங்கெவன் செய்தியோ பாண"

(புறநா. 68: 1-4)

என்பர். இவ்வறுமை நிலையை,

"கையது கடனிறை யாழே மெய்யது
புரவல ரின்மையிற் பசியே யரையது
வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்"

(புறநா. 69: 1-3)

என ஆலத்தூர் கிழாரும் எடுத்துரைப்பர். இதில் பாணன் கையில் இலக்கண முறைமை நிரம்பிய யாழும், உடம்பில் கொடுப்போர் இல்லாமையால் பசியும், அரையில் வேற்றிழை ஊடு போன வேர்வையில் நனைந்த ஆடையும் காணப்பெறும் என்பர்.

பரிசில் பெறாத பாணனை,

"காரெ னொக்கற் கடும்பசி யிரவல"

(புறநா. 141: 6)

என்பர் பரணர்.

பாணன் அடுக்களைச் சுவர், சிதல் அரித்துக் காளான் பூத்துக் காணப்பெறும். அண்மையில் ஈன்ற நாய் அங்கிருந்து பசியால் குரைக்கும். பசியால் இளைத்த உடலையுடைய கிணைமகள் குப்பையில் நின்ற வேளைக் கீரையை நகத்தால் கிள்ளிக் கொண்டு வருவாள். அதனை உப்புக் கூட இல்லாமல் வேக வைப்பாள். இத்தகைய உணவைப் பிறர் கண்டால் எள்ளுவர் என நாணித் தலைவாயிலை அடைத்துக் கொண்டு தம் சுற்றத்தோடு பாணன் உண்பான்[16]. இவற்றால் பாணர் வறுமை மிக நுணுக்கமாக உணரப் பெறும்.

பாணன் தம் சுற்றத்தினரை,

"பழம்பசி கூர்ந்தவெம் இரும்பே ரொக்கல்"

(பெரும்பாண். 25)

என்பான். பழம்பசி என்பது பாணரிடையே தொன்றுதொட்டு வரும் வறுமையை உணர்த்தும். பாணன் சுற்றம் பசியால் வருந்தும் தன்மையை,

"வருந்தலு முண்டென் பைதலங் கடும்பே"

(புறநா. 139: 15)

என்பர். பாணன் பசியால் உலர்ந்த மருங்குலில் சீறியாழினைத் தழுவிக் கொண்டு வருதலை,

"வணர்கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ"

(புறநா. 155: 1)

என்பர். பாணர் வறுமையில் உழன்றமையை இச்சான்றுகள் நன்குணர்த்தும்.

**நாடோடி வாழ்க்கை**

பாணர் பழுத்த மரத்தை நாடிச் செல்லும்பறவை போலத் தம்மை ஆதரிக்கும் புரவலரை நாடிச் செல்லும் நாடோடி வாழ்க்கையினர் ஆவர். எப்பொழுதும் ஓடித் திரிதலையே வாழ்க்கையாகக் கொள்வர். இதனை,

"பழுமரந் தேரும் பறவை போலக்
கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்"

(பெரும்பாண். 20-21)

என்பர்.

பாணர் ஓரிடத்தும் நிலையாகத் தங்கியிராது நாடுதோறும் சென்று ஆடிப்பாடிப் பரிசில் பெற்று வாழ்வர். இதனைப் பாணனொருவன்,

"நாட்டிட னாட்டிடன் வருதும்"

(புறநா. 152: 23)

என்பது தெளிவுறுத்தும்.

பாணர் செல்லும் பொழுது சுற்றமாகச் செல்வர். ஏவலிளையர் யாழினைச் சுமப்பர். முழவு, ஒருகண் மாக்கிணை, பெருவங்கியம், பிற இசைக் கருவிகள் ஆகிய அனைத்தையும் ஒருங்கு சேர்த்துக் கட்டிக் காவடியின் ஒரு பக்கத்தில் தொங்க விடுவர். மறு பக்கத்தில் பாடல் துறைக்கு வேண்டிய கருவி களெல்லாம் கூடின மூடையைத் தொங்க விடுவர். அக்காவடியைப் பாணர் சுற்றத்தினர் சுமந்து வருவர். இசைத் துறையில் வல்ல இளையர் தாம் செல்லும் வழியில் தீங்கு வாராமை குறித்துக் கடவுளைப் பரவி வழிபடுவர்[17].

பாணர் காடுகளின் வழியே செல்லுமிடத்துக் கள்வராலும் விலங்குகளாலும் பிற தெய்வங்களாலும் தீங்கு வாராது காத்தற்குக் கடவுளைப் பாடுவது இயல்பு[18].

பாணர் யாழ்த் தெய்வத்தை வணங்கி ஆடுதலையும் பாடுதலையும் தொடங்குவர். இதனை,

"இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பிக்
கடனுடை மரபிற் கைதொழூஉப் பழிச்சி"

(பெரும்பாண். 462-463)

எனவும்,

"காவ தறிந்த இன்குரல் விறலியர்

தொன்றொழுகு மரபிற் றம்மியல்பு வழாஅது
அருந்திறற் கடவுட் பழிச்சிய பின்றை"

(மலைபடு. 536-538)

எனவும் கூறுவர்.

**பாணர் வைகறைச் செலவு**

பாணர் வைகறையில் சீறியாழினை இசைத்துக் கொண்டு புரவலரை நாடிச் செல்வர். கோழிச்சேவல் விடியற் பொழுதின் வரவறிந்து கூவும் ; பொய்கையில் கூம்பியிருந்த பூக்களின் முகை இதழ் விரிந்து மலரும். பாணர் தம் கைதேர்ந்த சிறிய யாழை இசைத்துப் பாட இரவுப்பொழுது நீங்கும். அக்காலைப் பொழுதில் பாணர் சேரமான் வஞ்சனைக் காணச் செல்வர். இதனை,

"பொறிமயிர் வாரணம் பொழுதறிந் தியம்பப்
பொய்கைப் பூமுகை மலரப் பாணர்
கைவல் சீறியாழ் கடனறிந் தியக்க
இரவுப்புறம் பெற்ற வேம வைகறை"

(புறநா. 398: 3-6)

என்பர் திருத்தாமனார்.

**பாணர் நாளவை**

பாணர் நாட்காலையில் வேந்தன் அவைக்கு முதற்கண் சென்று இன்புறுத்துவர். பாணர் சூழ இருக்கும் அவை 'பாணர் நாளவை'[19] எனப்பெறும். இவ்வாறு பாணர் சூழ் இருத்தல் அரசனுக்குச் சிறப்பாகப் புலவர்களால் குறிப்பிடப் பெறும். அரசனை,

"பாண்முற் றுகநின் னாண்மகி ழிருக்கை"

(புறநா. 29: 5)

என வாழ்த்துவது இவ்வுண்மையை விளக்கும்.

### பாணர் இசைமரபு

பாணர் காலையில் மருதப் பண்ணும் மாலையில் செவ்வழிப் பண்ணும் இசைத்தல் மரபாகும். நள்ளியால் அளிக்கப்பட்ட பாணர் இசை மரபை மறந்து செவ்வழியைக் காலையிலும் மருதத்தை மாலையிலும் முறை பிறழ்ந்து இசைப்பர்[20] என்பர் வன்பரணர்.

பாணர் பகலில் அரசவையில் அரசனைப் பாடிப் பரிசில் வேண்டலும் பரிசில் பெறுதலும் நடைமுறையாகும்.

"வளையணிந்த விறலி பின்னே வர முறுக்கடங்கிய நரம்பினையுடைய சிறிய யாழை ஒரு மருங்கில் அணைத்துக் கொண்டு நினது நல்ல புகழை நினைந்து வந்தேன்"[21] எனப் பாணன் வேள் ஆய் அண்டிரனைப் பார்த்து பரிசில் வேண்டுவான்.

"சுரத்தின்கண்ணே நடந்து வருந்திய எனது சுற்றம் பசித்ததாக வாயிலில் வந்து தோன்றி வாழ்த்தி நின்று நின்னும் நின் மலையும் பாடினேன்"[22] என மற்றொரு பாணன் பரிசில் கடாவுவான்.

### பாணர் பெறும் பரிசில்

பாணர் பல்வேறு பரிசில்களைப் பெறுவர். சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ வீரத்தைப் பாடிய பாடினி பல கழஞ்சால் செய்யப்பட்ட அணிகலத்தைப் பெறுவாள். பாணன் தழலில் ஆக்கப்பட்ட பொற்றாமரையை வெள்ளி நாரில் தொடுக்கப் பெறுவான்[23].

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி யிடம் பாணன் பொற்றாமரை பெறுவதை,

"பாணர் தாமரை மலையவும்"

(புறநா. 12:1)

என்பர் நெட்டிமையார். பாணர் தலை பொலிவுறும்படிப் பரிசில் பெற்ற பொற்றாமரை மலரைச் சூடியிருத்தலை,

"பாணர் சென்னி பொலியத் தைஇ

வாடாத் தாமரை"

(புறநா. 126: 2-3)

என்பர் மாறோக்கத்து நப்பசலையார்.

வையாவிக் கோப்பெரும் பேகனிடம் பரிசில் பெறும் பாணர் தலையில் பொன்னால் செய்யப்பட்ட தாமரைப் பூவைச் சூடுவர். விறலியர் பொன்னரி மாலை அணிவர். பரிசில் பெற்றுத் திரும்பும்போது குதிரை பூட்டப்பெற்ற நெடிய தேரில் ஆங்காங்கே இளைப்பாறி வருவர்[24].

பாண்சுற்றத்தார் வல்வில் ஓரியிடம் பொன்னரி மாலையும் பிற கலன்களும் களிறும் பரிசிலாகப் பெறுவர்[25]. பாணன் தண்ணுமை இசைத்துக் களிற்றைப் பரிசிலாகப் பெறுதலை,

"களிறுபெறு வல்சிப் பாணன் கையதை
வள்ளுயிர்த் தண்ணுமை''

(நற். 310: 9-10)

என்பர் பரணர்.

பாணர் மாலைக் காலத்திலும் சென்று புரவலரைப் பாடிப் பரிசில் பெறுவர். இதனை,

"................... ................. ................ இருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக"

(புறநா. 144: 1-3)

என்னும் அடிகள் நன்குணர்த்தும்.

**பாணர் பாசறைச் செலவு**

பாணர் அரசர் அவைக்குச் சென்று பாடுவது போலப் பாசறைக்கும் சென்று பாடுவர். சோழன் நலங்கிள்ளியின் படை வீரர் தங்கியிருக்கும் பாசறைக்கண் பாண் சுற்றத்துக்குத் தசையோடு கூடிய பெருஞ்சோற்றுத் திரள் வழங்கப் பெறும். இதனை,

"ஊன்சோற் றமலை பாண்கடும் பருத்தும்
செம்மற் றம்மநின் வெம்முனை யிருக்கை"

(புறநா. 33: 14-15)

என்பர் கோவூர்கிழார்.

பாண்டியன் போரில் வெற்றிபெறும் பொழுதெல்லாம் பாணர் அப்போர்க்களத்துக்குச் சென்று அவனைப் பாடிக் களிற்றைப் பரிசிலாகப் பெறுவர்[26].

எவ்வி வீழ்ந்த போர்க்களத்தில் பாணர் கையால் தொழும் முறைமையோடு முன்பு பரவிய கோட்டினை வருத்தத்தால் ஒடித்துப் போடுதல்[27] பாசறைக்குச் சென்ற தோடமையாது போர்க்களத்துக்கும் பாணர் சென்றமையை நன்குணர்த்தும்.

***பாணர் மீன் பிடித்தல்***

பாணர் மீன் பிடித்தும் வாழ்க்கை நடத்தினர். இப்பாணர் சேரியை 'மீன் சீவும் பாண்சேரி'[28] என்பர். "பாணர்களில் கீழ் நிலையில் இருந்தவர்கள் மீன் பிடிக்கும் தொழிலையும் செய்து வந்தனர்"[29] என்பர் வெ. வரதராசன்.

பாணர் நடு இரவில் சென்று காவிரியின் மடுவில் வாளை மீனைப் பிடித்துக் கொண்டு விடியலில் வருவர்[30]. விடியற்காலை மீன் வேட்டத்தில் அகப்பட்ட வரால் மீன் துண்டத்தை விற்றுக் கள்ளுண்டு ஆடுவர். மீண்டும் வேட்டம் போதலை மறந்து உறங்கி விடுவர். அவர்தம் மனைவியராகிய பாண்மகளிர் ஆம்பலின் அகன்ற இலையில் சோற்றைப் பெய்து இருள் புலரும் விடியலில் கொடுப்பர்[31].

பாணர் பச்சிறைச்சியுடன் கூடிய தோற்பையைத் தோளில் கோத்திருப்பர். அதனைக் கொண்டு தப்பாமல் மீன் பிடிப்பர். பாணர் பகலில் ஊரைச் சுற்றியுள்ள கழியின் பக்கத்தே இருந்து தூண்டில் போடுவர். தூண்டிலில் இரையை வஞ்சகமாக மாட்டி வைத்துக் கருக் கொண்டுள்ள கயல் மீனைப் பிடிப்பர். இவ்வாறு மீன் பிடித்தலை "மீனெறி தூண்டிலின்"[32] என்பர்.

**பாண்மகளிர் மீன் விற்றல்**

பாணர் பிடித்து வரும் மீன்களைப் பாண்மகளிர் கொண்டு சென்று விற்று வருதல் நடைமுறையாகும். பாண்மகளிர் கெடிற்று மீனைக் கொணர்ந்து கொடுத்து, கொண்டு வந்த கூடை நிறைய மனைக் கிழத்தியிடம் பயற்றைப் பெற்றுச் செல்வர்[33]. வரால் மீனைக் கொணர்ந்து கொட்டிய கூடையில் அதற்கு விலையாக மனைக்கிழத்தியிடம் ஓராண்டு கழிந்த பழைய வெண்ணெல்லை நிறையப் பெறுவர்[34]. இதனை,

"அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்
சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்"

(ஐங். 49: 1-2)

என்பர் ஓரம்போகியார்.

பாண்மகளிர் நீண்ட கொடிகள் அசையும் கள் மிக்க தெருவுக்கு வாளை மீனைக் கொண்டு செல்வர். அங்கு மீனுக்கு விலையாகப் பழைய செந்நெல்லைப் பெறாது முத்துகளுடன் சிறந்த அணிகளைப் பெறுவர்[35].

**அகவாழ்வில் பாணர்**

அகப்பாடல்களில் பாணர், தலைவனைப் பரத்தையரிடம் கூட்டுவிப்பவராகவும் தலைவன், தலைவிக்குத் தூது செல்பவராகவும் உள்ளனர்.

பாணரோடு தலைவன், தலைவி, தோழி, பரத்தை ஆகிய அகமாந்தர்கள் கூற்று நிகழ்த்துவர். இக்கூற்றுகள் பாணரது பண்புகளையும் செயல்களையும் நடைமுறை வாழ்க்கையையும் விளக்கமாக எடுத்துரைக்கும்.

பாணர், தலைவனுடன் நெருங்கிய நட்புடையவராகத் திகழ்வர். தலைவனுக்காகத் தலைவியிடமும் பரத்தையரிடமும் வாயிலாகச் செல்வர். தலைவன் தன் இல்லற நிகழ்வுகளைப் பகிர்ந்து கொள்ளும் அளவுக்குப் பாணர் நட்புடையவராவர். தலைவன்,

"நருகம் வாராய் பாண"

(நற். 250: 1)

"வாராய் பாண நருகம்"

(நற். 370: 1)

எனப் பாணனை அழைத்துத் தம் வாழ்க்கை நிகழ்வுகளைக் கூறுவான்.

தலைவியைப் பிரிந்து வந்த தலைவன், குறித்த காலத்தில் திரும்ப இயலாத நிலையில் தலைவிக்குத் துணையாக இருக்கப் பாணனை அனுப்புவான். இதனை,

"பனிமலர் நெடுங்கண் பசலை பாயத்
துனிமலி துயரமொ டரும்பட ருழப்போள்
கையறு நெஞ்சிற் குயவுத்துணை யாகச்
சிறுவரைத் தங்குவை"

(ஐங். 477: 1-4)

என்பர். இவற்றால் தலைவனது நம்பகத்திற்குரிய தோழனாய்ப் பாணன் திகழ்ந்தமை தெளிவாகும்.

தலைமகட்குத் தூதாகத் தலைவன் தங்கியிருக்கும் பாசறைக்குச் செல்லும் பாணன் அவனை மிகவும் கடிந்து கொள்வான். பாணன்,

"நினக்கியாம் பாணரு மல்லே மெமக்கு
நீயுங் குருசிலை யல்லை மாதோ
நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி
யீரித ழுண்க ணுகுத்த
பூசல் கேட்டு மருளா தோயே"

(ஐங். 480: 1-5)

என்று கூறுவான். இதனால் பாணன் தலைவன் மிகை செய்துழி மேற்சென்று இடிக்கும் உரிமையுடையான் என்பது வலியுறும்.

பாணன் தலைவிக்குச் சார்பாளனாகவும் கொடுமையாளனாகவும் திகழ்வான். தலைவன் பொருள் காரணமாகவோ

பிறவினை காரணமாகவோ, பிரிந்து சென்ற நிலையில் தலைவிக்காகத் தலைவனிடம் தூது செல்வான். இக்கால கட்டங்களில் பாணர் உறவுநிலை இணக்கமாக உள்ளது.

பாணன் வேற்று நாட்டில் இருக்கும் தலைவனைக் காணப்போவதாகத் தலைவியிடம் கூறத் தலைவி தன் நிலையை எடுத்துக் கூறுமாறு வேண்டுவாள்[36].

தலைவியின் துன்பத்தைக் கண்ட பாணன் போர்மேற் சென்றுள்ள தலைவனை இப்பொழுதே சென்று அழைத்து வருவதாகக் கூறும்பொழுது அவனது பண்பினைத் தலைவி பாராட்டுவாள்[37].

தலைவி தன் துன்பம் கண்டு வருந்தும் பாணனைத் தலைவனை விடத் தம்பால் பேரன்பு கொண்டவன் எனப் பாராட்டுவாள். இதனை,

"தொடிநிலை கலங்க வாடிய தோளும்
வடிநல னிழந்தவென் கண்ணு நோக்கிப்
பெரிதுபுலம் பினனே சீறியாழ்ப் பாணன்
................ .................. ..........................
தம்மோன் போலான் பேரன் பினனே"

(ஐங். 475: 1-5)

என்பர் பேயனார்.

தலைவி பிரிவாற்றாமையால் பாணனிடம் தலைவனுக்குச் செய்தி சொல்லி அனுப்புவாள். பாணன் தலைவிக்காகத் தலைவனிடம் தூது செல்வான்[38].

தலைமகன் வரவைத் தலைவிக்குப் பாணன் கூறப் பெரிதும் மகிழும் தலைவி,

"நீகண் டனையோ கண்டார்க்கேட் டனையோ
.................... ............... ...................... ..........................
பொன்மலி பாடலி பெறீஇயர்
யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே"

(குறுந். 75: 1-5)

எனப் பாராட்டுவாள்.

தலைவனுக்கு வாயிலாக வரும் பாணனிடம் தலைவி உடன்படும்பொழுது அவனை உயர்த்திப் பேசுவாள். மறுக்கும் பொழுது மிகத் தாழ்வாக ஏசுவாள். வாயில் நேரும் தலைவி,

"அன்னா யிவனோ ரிளமா ணாக்கன்
தன்னூர் மன்றத் தென்னன் கொல்லோ
இரந்தூ ணிரம்பா மேனியோடு
விருந்தி னூரும் பெருஞ்செம் மலனே"

(குறுந். 33: 1-4)

எனப் புகழ்வாள். இதில் பாணன் சொல்வன்மை சிறப்பிக்கப் பெறும்.

தலைமகள் பாணனிடம் வாயில் மறுக்கும் பொழுது,

"நாணிலை மன்ற பாண"

(ஐங். 136: 1)

"பண்பிலை மன்ற பாண"

(ஐங். 138: 1)

என நாணம், பண்பு இல்லாதவனாகப் பாணனைப் பழிப்பாள்; பொய்யன்[39] என்பாள்.

தலைமகள் பாணனை வதுவைத் தொழில் பூண்ட புதுவோராகிய பரத்தையரைப் புணர்த்த வேண்டித் தலைவனை நாடி வருபவன் என அவனது இயல்பாகக் கூறுவாள். இதனை,

"வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய
பரிவொடு வரூஉம் பாணன்"

(அகநா. 56: 9-10)

என்பர்.

தோழி, தலைவியின் குறிப்புக்கு இயையப் பாணனிடம் கூற்று நிகழ்த்துவாள். வாயில் நேரும் தோழி,

" ...................... .......................... துறைவற்கு நீயும்

கண்டாங்கு உரையாய் கொண்மோ பாண"

(நற். 291: 5-6)

என மொழிவாள். குறித்த பருவத்தில் திரும்பும் தலைவனுக்குத் தூதாக வரும்பொழுது,

"கைவல் சீறியாழ்ப் பாண"

(ஐங். 472: 1)

என்பாள்.

தோழி வாயில் மறுக்கும் பொழுது பாணன் இயல்பு களைப் பழிப்பாள். தலைவனிடம் தோழி,

"ஒருநின் பாணன் பொய்ய னாக

உள்ள பாண ரெல்லாம்

கள்வர் போல்வர்நீ யகன்றிசி னோர்க்கே"

(குறுந். 127: 4-6)

என்பதில் பாணனைப் பொய்யன் எனத் தூற்றுவாள். பாணனது இவ்வியல்பினை ஊருக்கு விழாவினை அறிவிக்கும் குயவனிடம் கூறி, ஊரார் அறியுமாறு அறிவிக்குமாறு கூறுவாள். பாணன் செயலையும் சொல்லையும்,

"கைகவர் நரம்பிற் பனுவற் பாணன்

செய்த அல்லல் ..................... ...........

..................... .......................... ..........

பொய்பொதி கொடுஞ்சொல்"

(நற். 200: 8-11)

என்று குறிப்பிடுவாள்.

பாணன் தலைவனிடம் பெறும் பயனுக்காக அவனைப் பற்றிப் புகழ்ந்து கூறும் இயல்புடையவன்[40] என்று கூறுவாள். பாணன் தலைவனைப் பரத்தையரிடம் கூட்டுவிக்கும் இயல்பினை,

"கொண்டுசெல் பாணநின் தண்துறை ஊரனை"

(நற். 380: 9)

என்பாள். பரத்தை பாணனிடம்,

"நகைநன்கு உடையன் பாணநும் பெருமகன்"

(நற். 150: 1)

எனத் தலைவனை எள்ளுவாள். இதற்குப் "பரத்தை ஒருத்தியைக் கலந்து பின்பு அவளைக் கைவிட்டு வேறொரு பரத்தைபாற் சென்ற தலைவனிடத்து முதற்பரத்தை வெகுள, அவ்வெகுளி தணிக்கும்படிப் பாணனை அவளிடத்து அனுப்ப, பாணனிடம் அம்முதற்பரத்தை நும் பெருமகன் யாவராலும் நகைத்தற்குரியவன் எனச் சினந்து கூறுவாள்"[41] என்பர். இதனால் பாணன் பரத்தையருள் தலைவனுக்காகத் தூது செல்லும் இயல்புடையவன் என்பது தெளிவாகும்.

பாணன் செயற்பாடுகளுள் கார்காலத்தில் நிகழ்ந்தமை மட்டும் தெளிவாக விளங்கும். தலைவனும் பாணனும் பனி விரவிய வாடைக் கால நள்ளிரவில் தலைவியைப் பற்றி உரையாடுவர். தலைவி கூறியனுப்பிய செய்தியைத் தலைவன் மீண்டும் மீண்டும் கூறுமாறு கேட்டு இன்புறுவான். இதனை,

"சொல்லுமதி பாண ........... ..........
................ ........... ............. .............
அரும்பனி கலந்த வருளில் வாடை
தனிமை யெள்ளும் பொழுதிற்
பனிமலர்க் கண்ணி கூறிய தெமக்கே"

(ஐங். 479: 1-5)

என்பர் பேயனார். தோழி பாணனிடம்,

"செய்த பருவம் வந்துநின் றதுவே"

(ஐங். 472: 2)

எனக் கார்ப்பருவத்தைச் சுட்டுவாள்.

தலைமகள், கார்காலத்து மாலையில் பாணனிடம் உரையாடுவாள். பாணன் தலைவியை ஆற்றியிருக்குமாறு வற்புறுத்துவான். இதனை,

"கருவி வானங் கார்சிறந் தார்ப்பப்
பருவஞ் செய்தன பைங்கொடி முல்லை
பல்லான் கோவலர் படலைக் கூட்டு
மன்பின் மாலையு முடைத்தோ
வன்புறைப் பாண''

(ஐங். 476: 1-5)

எனக் கூறுவாள். இதில் கார்ப்பருவமும் கோவலர் முல்லை மலர் தொடுக்கும் மாலைப் பொழுதும் வெளிப்பட விளங்கும்.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம் ஊடல் நீங்கித் தலைவி கூடுவாள். இதனைக் கண்ணுற்ற தோழியும் பாணனும் தமக்குள் உரையாடும் காலத்தை,

"மாலை விரிந்த பசுவெண்ணிலவு"

(குறுந். 359: 2)

என்பர்.

### பாணர்-மருத நிலம்

பாணர் நாடுதோறும் எல்லா நிலங்களுக்கும் சென்று கலை நிகழ்த்தும் இயல்பினராயினும் மருத நிலத்துக்குரியவர்கள் என்பது பொருந்தும். பாணர் காவிரியாற்றங்கரையில் குடியாக வாழ்வதும், மருத நிலக் கழிகளில் தூண்டில் கொண்டு மீன் பிடிப்பதும் மருத நில உரிப்பொருளாகிய ஊடலுக்குக் காரணமான பரத்தையரைக் கூட்டுவித்தலும் இக்கருத்துக்குச் சான்றாகும்.

### III. கூத்தர் வாழ்க்கை

கூத்து நிகழ்த்துவோர் கூத்தர் எனப்படுவர். ''அக்கூத்தர் தாமும் பாரசவரும், வேளாளரும், பிறரும், அவ்வாடற்றொழிற்குரியோரும், பாரதி விருத்தியும், விலக்கியற் கூத்தும், கானகக் கூத்தும், கழாய்க் கூத்தும் ஆடுபவராகச் சாதி

வரையறையிலர் என்ப. மேலும் கூத்தராயினார், எண்வகைச் சுவையும் மனத்தின்கட்பட்ட குறிப்புகளும் புறத்தும் போந்து புலப்பட ஆடுவார்"[42] என்பர் நச்சினார்க்கினியர்.

கூத்தரைக் கண்ணுளர்[43], மள்ளர்[44], வயிரிய மாக்கள்[45], கோடியர்[46] எனப் பல பெயர்களால் சுட்டுவர். கூத்தர் பல்வேறு வகையான இசைக் கருவிகளை இசைப்பர். மத்தளம், சிறுபறை, கஞ்சதாளம், கொம்பு, நெடுவங்கியம், தூம்பு, குழல், கரடிகை, சல்லி, ஒருகண் மாக்கிணை ஆகிய இசைக் கருவிகளைக் கூத்தருக்குரியனவாகப் பெருங்கௌசிகனார் குறிப்பிடுவர்[47]. இவையல்லாது மேலும் பல இசைக்கருவிகளும் உண்டு என்பதை உணர்த்தப் 'பிறவும்'[48] எனக் கூறுவர்.

கூத்தர் வைத்திருக்கும் பேரியாழினை,

"வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ்"

(மலைபடு. 37)

என்பர். கூத்தர் இசைக் கருவிகளைத் தோளில் சுமந்து செல்வதற்குத் தக இருபக்கமும் சம எடை உடையனவாகச் சீர் செய்து காவில் கட்டித் தொங்க விடுவர். இதனை,

"கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப
நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்"

(மலைபடு. 12-13)

என்பர்.

கூத்தர் பெரிய சுற்றமாக வாழ்வர். கூத்தர் தலைவனை,

"கண்ணுளர் ஒக்கல் தலைவ"

(மலைபடு. 50)

எனப் பெருங்கௌசிகனார் கூறுவர். இவருக்குச் சுற்றமாக பாணரும் விறலியரும் விளங்குதலை,

"துறைபல முற்றிய பைதீர் பாணர்"

(மலைபடு. 40)

எனவும்

"இலங்குவளை விறலியர்"

(மலைபடு. 46)

எனவும் கூறுவர்.

***ஊரிஃதென்னா வாழ்க்கை***

கூத்தர் ஓரிடத்துத் தங்கி நிலைத்து வாழும் இயல்புடையரல்லர்; இசைக் கருவிகளைத் தொகுத்து கட்டின பையினை உடையவராய் ஊர் ஊராகச் செல்வர்[49]. வேற்று நாட்டில் நிகழும் விழாவினை நினைத்துத் தங்கள் முழவுகளை எடுத்து உயர்த்துக் கொண்டு செல்வர். இதனை,

" ........................ ...................... ............. வேறுநாட்டு
விழவுப்படர் மள்ளரின் முழவெடுத் துயரி"

(அகநா. 189: 4-5)

என்பர் கயமனார்.

கூத்தர் 'இஃது எமது ஊர்' என்று சொல்லுதற்கியலாத பாய் வேய்ந்த வண்டியில் செல்லும் வாழ்க்கையினர். இது,

"ஆரை வேய்ந்த அறைவாய்ச் சகடத்து
ஊரிஃ தென்னா வூறில் வாழ்க்கை"

(அகநா. 301: 7-8)

என்னும் அடிகளில் உணர்த்தப்பெறும்.

கூத்தர் தொலைவைப் பற்றி எண்ணாதவராய்த் தம்மை ஆதரிக்கும் புரவலரை நாடிச் சென்று பாடி ஆடும் இயல்பினர். இதனை,

"காடுமிக நெடிய என்னார் கோடியர்"

(அகநா. 309: 9)

என்பர் கருவூர்க் கந்தப்பிள்ளைச் சாத்தனார்.

## கூத்தர் செலவு

கூத்தர் புரவலரை நாடி நெடுந்தொலைவு செல்லும் பொழுது அவ்வழியில் உள்ள தெய்வங்களால் தமக்குத் துன்பம் நேரா வண்ணம் பாடிப் பரவுவர்.

கூத்தர் மலை வழியில் செல்லும் பொழுது மலையில் உறையும் தெய்வங்களைப் பாடிப் பரவுக் கடன் செலுத்துவர். இதனை,

" ................ .................... இன்குரல் விறலியர்
நறுங்கார் அடுக்கத்துக் குறிஞ்சி பாடிக்
கைதொழூஉப் பரவிப் பழிச்சியர் கழிமின்"

(மலைபடு. 358-360)

என்பர். வழியில் வீரர்களுக்கு நடப்பட்ட நடுகற்களையும் வணங்கிச் செல்வர். இதனை,

"கல்லேசு கவலை எண்ணுமிகப் பலவே
இன்புறு முரற்கைநும் பாட்டுவிருப் பாகத்
தொன்றொழுகு மரபினும் மருப்பிகுத்துத் துணைமின்"

(மலைபடு. 389-391)

என்பர். இதனால் மறத் தெய்வம் விரும்புமாறு யாழை இசைத்துப் பாடிப் பரவியமை தெளிவாகும்.

கூத்தர் நெடுந்தொலைவு செல்லும்பொழுது வழியில் உள்ள ஊரில் தங்கிச் செல்வர். இரவில் தங்கி விடியற்காலையில் தொடர்ந்து செல்லுதலை,

"அல்சேர்ந் தல்கி அசைதல் ஓம்பி
வான்கண் விரிந்த விடிய லேற்றெழுந்து
கானகப் பட்ட செந்நெறிக் கொண்மின்"

(மலைபடு. 256-258)

என்பர்.

கூத்தர் நொய்ய மரமாகிய விறகில் கடைக்கொள்ளியை எரித்துப் பனி விட்டு நீங்கும்படி இனிதாகச் சேர்ந்து உறங்குவர். இராக்காலம் நீங்குதலுடைய விடியற்காலையில் பறவைகளின் குரல் கேட்டு

எழுந்து செல்வர். இதனை,

"நொய்ம்மர விறகின் ஞெகிழி மாட்டிப்
பனிசேண் நீங்க இனிதுடன் துஞ்சிப்
புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்"

(மலைபடு. 446-448)

என்பர்.

கூத்தர் இரவில் காட்டு வழிகளில் செல்வதைத் தவிர்த்து கல் முழைஞ்சுகளில் தங்குவர். அப்பொழுது அங்குள்ள பன்றியைப் பிடித்துத் தீயில் புகை நாறாதவாறு வாட்டி மயிர் போகச் சீவி உண்பர். அங்குள்ள சுனை நீரைப் பருகி, எஞ்சிய தசையினை அடுத்த வேளை உணவுக்காகப் பாதுகாத்து வைத்துக்கொள்வர்[50].

கூத்தர் செல்லும் வழியில் தங்கும் பொழுது அங்குள்ள மக்கள் அவர்களை அன்போடு விருந்தோம்புவர். கூத்தர் அம்மக்கள் தரும் உணவினை உண்டு இளைப்பாறுவர். குறிஞ்சி நிலத்தில் தங்கும் பொழுது மான், பன்றி, உடும்பு ஆகியவற்றின் தசைகளோடு புளியைக் கலந்து ஆக்கிய புலவுச் சோற்றைப் பெறுவர்[51]. முல்லை நிலத்தில் பாலும் பாற்சோறும் உண்பர்[52]. மருத நிலத்தில் தசையோடு கலந்த சோற்றைப் பெறுவர். இதனை,

"முள்ளரித் தியற்றிய வெள்ளரி வெண்சோறு"

(மலைபடு. 465)

என்பர்.

கூத்தர் செல்லும் வழியில் தங்கும் இடங்களில் மக்கள் மகிழுமாறு பாடுவர். மருத நிலத்தில் உழவரோடு தங்கும்பொழுது யாழில் மருதப்பண் பாடுவர். அது உழவர் பாடும் ஏர்மங்கலப் பாட்டுடன் இயைய இருத்தலை,

"எருதெறி களமர் ஓதையொடு நல்யாழ்
மருதம் பண்ணி அசையினர்"

(மலைபடு. 469-470)

என்பர்.

கூத்தர் ஓர் ஊரினை அடைந்ததும் அவ்வூரின் மன்றத்தை அடைந்து தம் இசைக் கருவிகளைச் செம்மையுறப் பண்ணுவர். இது ஊரினருக்குத் தம் வரவைத் தெரிவிக்கும். பின் நெடிய மாடங்கள் நிற்கும் மறுகுகளில் உள்ள சிறைகளில் புகுந்து நின்று பாடுவர். இதனை,

"மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக்
கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்"

(பதிற். 43: 26-27)

என்பர். இம்மரபு,

" ................. ................. ............................ திவவின்
வயிரிய மாக்கள் பண்ணமைத் தெழீஇ
மன்ற நண்ணி மறுகுசிறை பாடும்"

(பதிற். 29: 7-9)

என்பதாலும் விளக்கப்படும்.

**கூத்தர்-அரசவை நிகழ்வு**

கூத்தர் அரசரை நாடிச் சென்று புகழ்பாடி ஆடுவர். அரசனது புகழைத் தொகுத்துக் கூறும்பொழுது தூம்பு என்னும் இசைக்கருவியை ஒலிப்பர்[53].

கூத்தர் நன்னனின் முன்றிலை அடைந்து மத்தளம் முழங்கப் பெருவங்கியம் என்னும் வேய்ங்குழலை இசைத்து மருதப்பண் எழுப்புவர். அவ்வின்னிசைக்கு மிகாமல் அதனோடு ஒன்றுபட்டு நடக்குமாறு விறலியர் முதலில் இறையை வாழ்த்திப் பின் நன்னன் புகழ் பாடுவர். இவ்விறலியர் இனிய மிடற்றுப் பாடலைப் பாடி ஆட வல்லோர் ஆவர். இதனை,

"மழையெதிர் படுகண் முழவுகண் இகுப்பக்
கழைவளர் தூம்பின் கண்ணிடம் இமிர
மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்
நரம்புமீ திறவா துடன்புணர்ந் தொன்றிக்
கடவ தறிந்த இன்குரல் விறலியர்
தொன்றொழுகு மரபிற் றம்மியல்பு வழாஅது

அருந்திறற் கடவுட் பழிச்சிய பின்றை''

(மலைபடு. 532-538)

என்பர் பெருங்கௌசிகனார்.

அரசவையில் பாடும்பொழுது முதலில் புதுவதாக அமைந்த இசைப் பாடல்கள் பலவற்றை இனிதாகப் பாடுவர். பின் அவ்வரசன் குடிப்பெருமைகளையும், கொடைச் சிறப்புகளையும், வெற்றியாலுண்டான புகழையும், பெருமைகளையும் பாடுவர். இவ்வாறு பாடுதலை,

" குன்றா நல்லிசைச் சென்றோர் உம்பல்
இன்றிவட் செல்லா துலகமொடு நிற்ப
இடைத்தெரிந் துணரும் பெரியோர் மாய்ந்தெனக்
கொடைக்கட னிறுத்த செம்ம லோயென
வென்றிப் பல்புகழ் விறலோ டேத்தி"

(மலைபடு. 540-544)

என்பர் பெருங்கௌசிகனார்.

**கூத்தர் பெறும் பரிசில்**

கூத்தர் நன்னனிடம் பல்வேறு வகையான பரிசில்களைப் பெறுவர். கூத்தர் தலைவன் பொற்றாமரை மலர் சூடுவான். விறலியர் உயர்ந்த அணிகலன்களைப் பெறுவர். களிறு,தேர், ஏறுடைய பகுநிரைகள், அணிகலன்கள் பூட்டிய குதிரை ஆகிய பலவற்றையும் பரிசிலாகப் பெறுவர். இச்சிறப்பை,

"தலைவன் தாமரை மலைய விறலியர்
சீர்கெழு சிறப்பின் விளங்கிழை அணிய
நீரியக் கன்ன நிரைசெலல் நெடுந்தேர்
வாரிக் கொள்ளா வரைமருள் வேழம்
கறங்குமணி துவைக்கும் ஏறுடைப் பெருநிரை
பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நிலந்தினக் கிடந்த நிதியமொ டனைத்தும்"

(மலைபடு. 569-575)

என்பர் பெருங்கௌசிகனார்.

### ஆரியக் கூத்தர்

"கூத்தர்களுள் ஆரியக் கூத்தர் ஒரு வகையினர். இவர்கள் ஆரிய நாட்டைச் சேர்ந்தவர்களாகையால் இப்பெயர் பெற்றுள்ளனர். இவர்கள் ஆடும் கூத்து ஆரியக் கூத்து என்ப்படும். இவர்கள் கழையிற் கட்டிய கயிற்றின்மேல் நின்று பறை கொட்டி ஆடியுள்ளனர்"[54] என்பர் உ.வே. சாமிநாதையர்.

கூத்தியர் விழாக் களத்தில் அரித்தெழுகின்ற ஓசையைக் கூட்டுதலுடைய இனிய இசைக் கருவிகள் ஒலிக்கக் கழாய்க் கயிற்றில் ஏறி ஆடுவர்[55].

குழல்கள் பக்கத்தே இசைக்கப் பலவகை வாச்சியங்களும் முழங்க ஆடல் பயிலும் கழைக் கூத்தி வளைந்த முறுக்கேறிய வலிய கயிற்றின் மேல் நடத்தலை,

"கழைபா டிரங்கப் பல்லியம் கறங்க
ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று"

(நற். 95: 1-2)

என்பர் கோட்டம்பலவனார்.

### அகவாழ்வில் கூத்தர்

மக்கள் புறவாழ்வில் கூத்து நிகழ்த்தி மகிழ்விக்கும் கூத்தர், அகவாழ்வில் பங்காற்றவில்லை. தொல்காப்பியர் கூத்தருக்குரிய கூற்றுகளைக் கூறிக் கற்பு வாழ்வில் வாயில்களுள் ஒருவராகக் கூறினும் அவ்வாறு செயலாற்றியதாக இலக்கியங்கள் உணர்த்தவில்லை.

## IV. பொருநர்

"பொருநர் என்போர் திறம்படப் பாடி நடிப்பவர். இவர்கள் தடாரி, கிணை ஆகிய தோற்கருவிகளை இசைத்துப் பாடுவர். பொருநருள் ஏர்க்களம் பாடுநர், போர்க்களம் பாடுநர், பரணி பாடுநர் என மூவகைப்படுவர்"[56]. ஒருவரைப் போல் வேடமிட்டுப் பாடுநரைப் பொருநர் என்பர்[57].

**பொருநர் வறுமை**

பொருநர் வறுமை வாழ்க்கையினர். இதனை,

"ஆடுபசி யுழந்தநின் இரும்பே ரொக்கலொடு
நீடுபசி"

(பொருந. 61-62)

என்பது உணர்த்தும். இதில் நீடுபசி என்பது பொருநரிடையே தொன்றுதொட்டு வரும் பசியைக் குறிக்கும்.

பொருநர் கொட்டைப் பாசியின் வேர் போன்று அழுக்கோடு குறைந்து போன தையலையுடைய ஆடை உடுத்தியிருப்பர். இதனை,

"பாசி வேரின் மாசொடு குறைந்த
துன்னற் சிதாஅர்"

(பொருந. 153-154)

என்பர். பொருநன் பழமையான நீர்ப்பாசிபோல் சிதர்ந்த ஆடையினன்[58]. இதனை,

"ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புரை சிதாஅர்"

(புறநா. 392: 13-14)

என ஔவையாரும் குறிப்பிடுவர்.

**நிலையா வாழ்க்கை**

பொருநர் பேரூர்களில் விழவுக்களந்தோறும் சென்று பாடுவர். ஓர் ஊரில் விழா முடிந்ததும் அங்கேயே தங்கியிராது விழா நடக்கும் அடுத்த ஊரை எண்ணிச் செல்லும் இயல்பினர். இதனை,

"சாறுகழி வழிநாட் சோறுநசை யுறாது
வேறுபுல முன்னிய விரகறி பொருந"

(பொருந. 2-3)

எனும் அடிகள் உணர்த்தும்.

### பொருநர் செலவு

பொருநர் காட்டு வழியில் வரும்பொழுது காடுறை கடவுளை வணங்குவர். இவ்வழக்கத்தை,

"இலையின் மராத்த எவ்வந் தாங்கி
வலைவலந் தன்ன மென்னிழன் மருங்கிற்
காடுறை கடவுட்கடன் கழிப்பிய பின்றை"

(பொருந. 50-53)

என்பர் முடத்தாமக்கண்ணியார்.

### வைகறைப் பொருநர்

பொருநர் அரசரை விடியற்காலையில் சென்று கண்டு அவன் புகழ் பாடுவர். "கிணைப் பொருநன் வேந்தன் முன்றிலில் விடியற்காலத்தே சென்று நின்று தன்னுடைய கிணைப் பறையைக் கொட்டி அவ்வேந்தர்களின் வஞ்சி முதலாகவுள்ள மறத்துறை களைப் பாடுவது இயல்பு. அங்ஙனம் பாடுவோர் தொடக்கத்தில் வேந்தர்க்குத் துயிலெடைப் பாட்டைப் பாடி, அவர் துயிலுணருங்கால் அவர் செவிப்பட அவர்தம் மறமாண் புகழ்களை எடுத்தோதி மகிழ்ச்சி அடையச் செய்வர்"[59] என்னும் வி.சசிவல்லியின் கருத்தும் இதனை வலியுறுத்தும்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் நெடிய முற்றத்தில், பொருநர் பெரிய தடாரிப் பறையை ஒலித்துத் துயிலெடை பாடிப் பரிசில் வேண்டி நிற்பர். இவ்வாறு வேண்டி நிற்கும் காலம் விடியற்காலையாகும். இவ்விடியற்பொழுதை "வெள்ளியாகிய மீனும் வானத்தில் எழுவதாயிற்று; பறவைகளும் மரத்தின் உயர்ந்த கிளையில் கட்டிய கூட்டிலிருந்து தம்முடைய ஓசையை எழுப்பலுற்றன. பொய்கைகளில் குவிந்திருந்த தாமரைகள் கண் விழிப்பது போல் விரியலுற்றன. மெல்லெனத் திங்களாகிய சுடரும் தன் ஒளியாகிய நிலவு குறையத் தொடங்கிற்று. முழங்குதற்குரிய முரசங்களும் வலம்புரிச் சங்குகளும் முழங்குதலைச் செய்ய இரவுப் புறமாகிய கடையாமம் கழிந்த காலைப் பொழுது தோன்றியது"[60] என வருணிப்பர். இவ்விடியலில்,

"வைகறை யரவங் கேளியர் பலகோட்
செய்தார் மார்ப வெழுமதி துயிலெனத்
தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி"

(புறநா. 397: 8-10)

அரசர் அரண்மனை முற்றத்தில் நிற்பர்.

பொருநர் சோழன் கரிகாற் பெருவளத்தானை வெள்ளி எழுந்த இருளையுடைய விடியற் காலத்தில் நாடிச் செல்வர். கண்ணகன்ற உடுக்கையில் தோற்றுவித்த இரட்டைத் தாளத்திற் கேற்ப மன்னனை வாழ்த்திப் பாடுவர். இதனை,

"பைத்த பாம்பின் துத்தி யேய்ப்பக்
கைக்கச டிருந்தவென் கண்ணகன் தடாரி
இருசீர்ப் பாணிக் கேற்ப விரிகதிர்
வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்
ஒன்றியான் பெட்டா அளவையின்"

(பொருந. 69-73)

என்பர் முடத்தாமக்கண்ணியார்.

பொருநர் அதியமான் பொகுட்டெழினியின் முற்றத்தில் இளநிலவு திகழும் பனி சொரியும் விடியற் காலத்தே ஒரு கண் மாக்கிணையை அறைந்து 'நீ நெடிது வாழ்வாயாக' எனப் பாடுவர்[61].

பொருநர் சோழிய ஏனாதி திருக்குட்டுவனின் முன்றிலில் இருட்பொழுதும் நிலவுப்பொழுதும் கழிந்த பகற்பொழுதினைச் செய்தற்குத் தோன்றிய விடியற்காலத்தே ஒரு கண்ணையுடைய பெரிய தடாரிப் பறையை மெல்ல ஒலிக்குமாறு இசைத்து வஞ்சித்துறைப் பாட்டொன்றைப் பாடுவர்[62].

பொருநர் சேவற்கோழி கூவித் துயிலெடுப்பப் படுக்கையினின்று எழுவர். தண்ணிய பனி துளிக்கும் விடியலில் தடாரிப் பறையைக் கொட்டி அவியன் முற்றத்தில் நின்று பலவாகிய உழவெருதுகளை வாழ்த்திப் பாடுவர்[63].

**பொருநர் பரிசில் வேண்டல்**

பொருநர் நண்பகலில் காட்டிடத்தே நடந்து வருந்தி மாலைப் பொழுதில் அரசன் மனை முன்றிலில் தடாரியுடன் பரிசில் வேண்டி நிற்பர்[64].

பொருநர் இரவுப் பொழுதிலும் சென்று அரசனைப் பாடிப் பரிசில் பெறுவர். பொருநரும் அவரது சுற்றத்தாரும் ஊருக்கு முன்னிடமான பொதியிலில் வந்து தங்கியிருப்பர். பொருநர் இரவில் அதியமான் நெடுமான் அஞ்சியின் முன்றிலில் தடாரிப் பறையை அறைந்து பாடி நெல் பெறுவர். இதனை,

"சென்ற ஞான்றைச் சென்றுபட ரிரவின்
வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற
புன்றலைப் பொருந னளியன் றானெனெ"

(புறநா. 390: 10-12)

என்பர் ஔவையார்.

பொருநர் சுற்றம், சோழன் கரிகாற் பெருவளத்தான் அரண்மனையில் பல நாட்கள் உண்டும் கண்டும் கேட்டும் தங்கும். அவ்வாறு தங்கும் பொழுது விறலியர் முழவிசையோடு சீறி யாழும் இசைக்கத் தாளத்திற்கேற்ப, பாடி ஆடுவர்[65].

பொருநர் அரசரிடம் பல்வேறு பரிசில்களைப் பெறுவர். பொருநன் பொற்றாமரை மலரையும் பாடினி பொன்னரி மாலையையும் தேரையும் கலன்களையும் கரிகாற் பெருவளத் தானிடமிருந்து பரிசிலாகப் பெறுவர்[66].

**பொருநர் சிறப்பு**

பொருநரைக் கரிகாற் பெருவளத்தான்,

"பால்புரை புரவி நால்குடன் பூட்டிக்
காலி னேழடிப் பின்சென்று கோலின்
தாறுகளைந் தேறென் றேற்றி"

(பொருந. 165-167)

வழியனுப்புதல் குறிப்பிடத்தக்கதாகும். அரசனே வந்து

வழியனுப்புதல் பொருநர் சிறப்பை நன்கு விளக்கும்.

"காலின் ஏழடி சென்று என்றது, உயர்குடிப் பிறந்தோர், நண்பர், பெரியோர் முதலியோரை வரவேற்கும் போதும் வழிவிடும் போதும் நிரலே ஏழடி எதிர் சென்று வரவேற்றலும் ஏழடி பின் சென்று வழி விடுதலும் ஆகிய மரபினைக் குறித்து நின்றது. இங்ஙனம் செய்தல் தம்மோடொத் தாராகவாதல் உயர்ந்தோராகவாதல் கருதிய வழியன்றி நிகழ்தல் மரபன்று"[67] என்னும் பொ.வே. சோமசுந்தரனார் கருத்து பொருநர் சிறப்பை எடுத்துரைக்கும்.

### பொருநர்-பிற தொழில்கள்

பொருநர் பெரிய மூங்கிலால் ஆகிய தூண்டிலில் மீன்பிடிப்பர். அம்மீன்களைக் கிணைமகளிர் கொண்டு சென்று விற்று வருவர். அதில் கிடைக்கும் பொருளைக் கொண்டு புளிங்கூழ் சமைப்பர். அவ்வுணவைக் காலமல்லாத காலத்தில் உண்பர். இவ்வாழ்க்கையை,

"நெடுங்கழைத் தூண்டில் விடுமீ னொடுத்துக்
கிணைமக ளட்ட பாவற் புளிங்கூழ்
பொழுதுமறுத் துண்ணு முண்டியேன்"

(புறநா. 399: 15-17)

என்பர். இதனால் பொருநர் உண்டற்குரிய கால வரவு நோக்கியிருந்து உண்ணாது, உணவு வரவு நோக்கியிருந்து உண்ணும் வாழ்க்கையினர் என்பது விளங்கும்.

பொருநர் பனை மரத்து நாரினையும் பனங் குருத்தையும் கொண்டு பல பொருட்களைச் செய்து விற்று வாழ்வர். இதனை,

"நாரும் போழுஞ் செய்தூண் பெறாஅது
பசிதினத் திரங்கிய விரும்பே ரொக்கல்"

(புறநா. 370: 2-3)

என்பர் ஊன்பொதி பசுங்குடை யார்.

முழவு போன்ற அடியினையுடைய பனையின் அரம் போலும் கருக்குப் பொருந்திய பெரிய மடலினின்று எடுத்த நாரினையும், பனங்குருத்தையும் கிணையோடு சேர்த்துக் கட்டி உழுதுண்டு வாழ்வோர் இல்லங்கட்குச் சென்று முறையே அவர் நல்கும் உணவை இரந்துண்டு வாழ்வர். இதனை,

"முழாஅரைப் போந்தை யரவாய் மாமடல்
நாரும் போழுங் கிணையொடு சுருக்கி
ஏரின் வாழ்நர் குடிமுறை புகாஅ
ஊழிரந் துண்ணும் உயவல் வாழ்க்கை"

(புறநா. 375: 4-7)

என்பர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்.

**V. விறலியர்**

விறல்பட ஆடுபவள் விறலியாவாள். பாணர், கூத்தர், பொருநர் ஆகியோர் பெண்டிரை விறலி என்று கூறுவர். விறலியர் பாணர் முதலான கலைஞர் குழுவில் சென்று ஆடுவர். பாணர் குழுவிலும் கூத்தர் குழுவிலும் பொருநர் குழுவிலும் இடம் பெறுவர்.

**விறலியர்-தனி நிகழ்ச்சி**

விறலியர் குழுவோடு செல்லுதல் மட்டுமல்லாமல் தனித்தும் சென்று நிகழ்ச்சிகள் நடத்துவர். காவின் ஒரு பக்கத்தில் பதலையையும் மறு பக்கத்தில் துளையை அகத்தே உடைய சிறிய முழவையும் தொங்க விட்டுப் புரவலரை நாடிச் செல்வர்[68].

விறலியர் மூங்கில்களை உயரமாக நடுவர். அவற்றின் தலையை மூன்று விரிசல்களாகப் பகுப்பர். அவற்றின் இடையே மட்பாண்டிலைச் செறிப்பர். அதில் எண்ணெய் பெய்து பருத்த திரியிட்டு எரியச் செய்வர். கூத்தாடும் களரியில் வலப்பக்கம் ஒன்றும் இடப்பக்கம் ஒன்றுமாக இரண்டு பாண்டில்களை நிறுத்துவர். அப்பாண்டிலின் சுடரில் விறலியர் கூத்தாடுவர்[69].

விறலியர் ஊரில் எண்ணெய்க்கும் ஆடைக்கும் ஆடல் நிகழ்த்துவர். இதனை,

"எண்பிழி நெய்யொடு வெண்கிழி வேண்டாது

............. .................. .................. .................

கலம்பெறு விறலி ஆடும் இவ்வூரே"

(நற். 328: 8-11)

என்பர். இவ்விறலி எண்ணெயும் ஆடையும் வேண்டாது நன்கலம் குறித்து ஆடுதல் இதனை நன்குணர்த்தும்.

## அகவாழ்வில் விறலியர்

விறலியர் அகத்தில் தலைமக்களுக்கு வாயிலாக விளங்குபவர் ஆவர். விறலி தலைவனுக்குப் பரத்தையைக் கூட்டுவித்தலைப் பரணர் குறிப்பிடுவர். இதில் விறலியின் இயல்பும் செயலும் விளக்கப்பெறும். விறலியின் சொல்லை,

"தொலைந்த நாவின் உலைந்த குறுமொழி

................. ........... ............... .....................

களிறுபெறு வல்சிப் பாணன் கையதை

வள்ளுயிர்த் தண்ணுமை போல

உள்யாதும் இல்லதோர் போர்வையஞ் சொல்லே"

(நற்.310:6-11)

என்பர். இதில் மெய் பேசுதலைத் தொலைந்த நாவினையுடைவள்; நிலைகுலைந்த இழிந்த சொல்லினையுடையவள். தண்ணுமை உள்ளே யாதும் அற்ற ஒரு போர்வையைக் கொண்டிருப்பது போல விறலியின் சொல்லும் அமைந்துள்ளது என்பர். விறலியின் செயல்களை,

"..................... ..................... ஊரற்கு நாளை

மகட்கொடை நேர்ந்த மடங்கெழு பெண்டே"

(நற். 310:4 - 5)

என்பர். இதனால் தலைவனுக்குப் பரத்தையைக் கொணர்ந்து கொடுக்கும் செயல் தெளிவாகும்.

## நிறைவுரை

தொல்காப்பியர் பாணர், பொருநர், கூத்தர், விறலி, பாடினி ஆகிய கலைஞரைச் சுட்டுவர்.

பாணர் பாண்சேரியில் வாழ்வர். சுற்றமாகப் புரவலரை நாடிச் சென்று பரிசில் பெறுவர். பாணர் வாழ்க்கை வறுமை நிறைந்தது. தம்மை ஆதரிக்கும் புரவலர் எங்கிருந்தாலும் அங்கு அவரை நாடிச் செல்வர். புரவலரை நாடிக் காட்டு வழியில் செல்லும் பொழுது தங்களுக்குத் தீங்கு நேரா வண்ணம் கடவுளைப் பாடிச் செல்வர்.

பாணர் விடியற்காலையில் சீறியாழினை இசைத்து அரசரைக் காணச் செல்வர். பாணர் அரசரைச் சூழ்ந்து இருக்கும் அவை 'பாணர் நாளவை' எனச் சிறப்பிக்கப்பெறும். பாணர், நாளவையில் அரசனை ஆடிப்பாடி மகிழ்விப்பர்; கள்ளுண்டு களிப்பர் ; விருந்துண்டு மகிழ்வர்; பொற்றாமரை, பொன்னரிமாலை போன்ற பல்வேறு பொருட்களைப் பரிசிலாகப் பெறுவர். அரசர் பாசறைக்கும் சென்று பாடுவர். நாட்காலையில் மட்டுமன்றி மாலைக் காலத்தும் சென்று காண்பர்.

பாணரில் ஒரு சாரார் மீன் பிடிப்பர். நடு இரவிலும் விடியற் காலையிலும் மீன் பிடிக்கச் செல்வர். அதற்கு வலை, தூண்டில் ஆகியவற்றைப் பயன்படுத்துவர். பாணர் பிடித்து வரும் மீன்களைப் பாண் மகளிர் தெருவில் கொண்டு சென்று விற்றுப் பொருள் பெற்று வருவர்.

பாணரில் மற்றொரு சாரார் தலைவனைப் பரத்தையிடம் கூட்டுவிக்கும் தொழில் செய்வர். தலைவன் தலைவியைப் பிரிந்திருக்கும் காலங்களில் தலைவனுக்கும் தலைவிக்கும் தூதாகவும், தலைவன் பரத்தமையொழுக்கம் பூண்டிருக்கும்பொழுது வாயிலாகவும் செயல்படுவர்.

பாணர் ஆற்றங்கரையோரச் சேரியில் வாழ்தலும் தூண்டில் கொண்டு மீன் பிடித்தலும் மருத நிலப் பரத்தையரைக் கூட்டுவித்தலும் இவர்கள் மருத நிலத்தைச் சார்ந்தவர்கள் என்பதை உறுதிப்படுத்தும்.

கூத்தர் ஓரிடத்தும் நிலைத்த வாழ்க்கையுடையோராக இல்லை. சுற்றமாக வாழ்வர். இசைக் கருவிகளை இரு புறமும் சமமாகச் சுமந்து ஊர்தோறும் நாடுதோறும் செல்வர். பாய் வேய்ந்த வண்டியை வீடாகக் கொள்வர். நெடுந்தொலைவு செல்லும்பொழுது பகலில் நடந்து செல்வர். இரவில் மலை முழைஞ்சுகளிலோ, வழியில் உள்ள ஊர்களிலோ தங்கி மறுநாள்

தொடர்ந்து செல்வர். காட்டு வழியில் கடவுளை வழிபடுவர். தங்குமிடங்களில் மக்களோடு கலந்து அவர்கள் மகிழ இசைக் கருவிகளை இசைப்பர்.

கூத்தர் ஓர் ஊரினை அடைந்ததும் அவ்வூர் மன்றத்தில் தங்குவர். அங்கிருந்து இசைக் கருவிகளை இசைத்து ஊராருக்குத் தம் வரவை உணர்த்துவர். பின் அவ்வூர்த் தெருக்களில் சென்று ஆடிப் பாடுவர்.

கூத்தர் அரசர் அவைக்குச் சென்று பாடுவர். அரசனிடம் பொற்றாமரை, அணிகலன்கள், களிறு, தேர் போன்ற பல பரிசில்களைப் பெறுவர்.

கூத்தருள் ஆரிய நாட்டிலிருந்து வந்தோர் ஆரியக் கூத்தர் எனப் பெறுவர். கூத்தியர் கழாய்க் கயிற்றில் ஆடுவர்.

கூத்தர் தொல்காப்பியம் குறிப்பிடுவது போலத் தலைமக்களின் அக வாழ்வில் பங்கு கொள்ளாமை குறிப்பிடத்தக்கதாகும்.

பொருநர் வாழ்வு வறுமை நிறைந்தது. ஒவ்வோர் ஊருக்கும் சென்று கலை நிகழ்ச்சி நடத்துவர். பேரூர்களில் விழவுக்களந்தோறும் சென்று பாடுவர். காட்டு வழியில் செல்லும் பொழுது கடவுளை வணங்குவர்.

கிணைப் பொருநர் அரசர் மனை முன்றிலில் விடியற் காலையில் தடாரிப்பறையை இசைத்துப் பாடுவர். மாலை, இரவுப் பொழுதுகளிலும் புரவலரை நாடிச் செல்வர். அரசரிடம் பொற்றாமரை, பொன்னரிமாலை போன்ற பல பரிசில்களைப் பெறுவர்.

பொருநர் கலைத் தொழிலோடு மீன்பிடித்தல், பனைப்பொருள் செய்தல், மக்களிடம் விற்றல் போன்றவற்றையும் நடைமுறையாகக் கொள்வர்.

பாணர், கூத்தர், பொருநர் ஆகிய அனைவரது குழுக்களிலும் விறலியர் இடம் பெறுவர். இவர்கள் நடைமுறை வாழ்க்கை பாணர் முதலானவர்களைச் சார்ந்தே அமையும்.

விறலியர் பாணர் முதலானவர்களைச் சாராது தனித்தும் கலை நிகழ்ச்சிகள் நடத்துவர். அரசரைச் சென்று காண்பர்; எண்ணெய்க்கும் ஆடைக்கும் ஆடுவர். தலைவனைப் பரத்தையிடப் கூட்டுவிக்கும் தொழிலிலும் ஈடுபடுவர்.

16498

## அடிக்குறிப்புகள்

1. தொல். பொருள். புறத். நூ. 30: 3-6.
2. மேலது, நூ. 30: 2.
3. தொல். பொருள். செய். நூ. 182.
4. தொல். பொருள். கற். நூ. 52.
5. மேலது, நூ. 9: 25-26.
6. மேலது, நூ. 27.
7. இரா. இளங்குமரன், (1987), **பாணர்**, சிதம்பரம், மணிவாசகர் பதிப்பகம், பக். 120-121.
8. தொல். பொருள். கற். நூ. 28.
9. வெ. வரதராசன், (1973), **தமிழ்ப் பாணர் வாழ்வும் வரலாறும்**, சென்னை, பண்ணன் பதிப்பகம், ப.7.
10. இரா. இளங்குமரன், (1987), **பாணர்**, மேலது, பக்.2-3.
11. ...... (1955), ***தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல், புறத்திணையியல் நச்சினார்க்கினியர் உரை***, இரண்டாம் பதிப்பு, சென்னை-1, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.282.
12. மா. இராசமாணிக்கனார், (1970), **பத்துப்பாட்டு ஆராய்ச்சி**, சென்னைப் பல்கலைக் கழகம், ப.42.
13. மதுரைக். 269.
14. அகநா. 196:1.
15. மதுரைக். 340-342.
16. சிறுபாண். 130-139.
17. பதிற். 41: 1-6.
18. நற். 189: 2-4.

19. பதிற். 38:9.

20. புறநா. 149: 1-4.

21. புறநா. 135: 3-10.

22. புறநா. 143: 8-12.

23. புறநா. 11: 11-18.

24. புறநா. 141: 1-3.

25. புறநா. 53: 6-9.

26. அகநா. 106: 10-13.

27. அகநா. 115: 8-10.

28. மதுரைக். 269.

29. வெ. வரதராசன், (1973), **தமிழ்ப் பாணர் வாழ்வும் வரலாறும்**, மேலது, ப.62.

30. அகநா. 126: 7-8.

31. அகநா. 196: 1-7.

32. ஐங். 278:3.

33. ஐங். 47: 1-3.

34. ஐங். 48: 1-3.

35. அகநா. 126: 9-12.

36. ஐங். 473: 1-5.

37. ஐங். 474: 1-5.

38. ஐங். 478: 1-5, 479: 1-5.

39. ஐங். 43: 4, 47: 5, 49: 4.

40. நற். 167: 6.

41. எச். வேங்கடராமன் (ப.ஆ), (1989), **நற்றிணை மூலமும் உரையும்**, சென்னை-90, டாக்டர் உ.வே.சா. நிலையம், ப.274.

42. ......(1955), **தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணை யியல் புறத்திணையியல் நச்சினார்க்கினியர் உரை**, மேலது, ப.282.

43. மலைபடு. 50.

44. அகநா. 189: 5.

45. பதிற். 29: 8.

46. அகநா. 111: 9.

47. மலைபடு. 1-11.

48. மலைபடு. 1.

49. பதிற். 23: 4-5.

50. மலைபடு. 247-255.

51. மலைபடு. 175-183.

52. மலைபடு. 417.

53. அகநா. 111: 9.

54. உ.வே. சாமிநாதையர் (உ.ஆ), (1955), **குறுந்தொகை மூலமும் உரையும்**, மூன்றாம் பதிப்பு, சென்னை, கபீர் அச்சுக்கூடம்,ப.22.

55. குறிஞ்சிப். 192-194.

56. வி. சசிவல்லி, (1990), **பண்டைத் தமிழர் தொழில்கள்**, சென்னை, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், ப.278.

57. தமிழண்ணல் (பு.பெ.), (1992), **புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு**, பதினோராம் பதிப்பு, மதுரை-1, மீனாட்சி புத்தக நிலையம், ப.149.

58. புறநா. 390: 14.

59. வி. சசிவல்லி (1990), **பண்டைத்தமிழர் தொழில்கள்**, மேலது, ப.279.

60. புறநா. 397: 1-6.

61. புறநா. 392: 1-5 & 11-12.,

62. புறநா. 394: 6-9.

63. புறநா. 383: 1-5.

64. புறநா. 395: 22-24.

65. பொருந. 109-111.

66. பொருந. 159-167.

67. பொ. வே. சோமசுந்தரனார் (வி.உ), (1961), **பொருநராற்றுப் படை**, சென்னை-1, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.52.

68. புறநா. 103: 1-4.

69. பதிற். 47: 4-7.

I. அந்தணர் வாழ்க்கை

தொல்காப்பியத்தில் அந்தணர்

சங்க இலக்கியத்தில் அந்தணர்

அந்தணர் இல்லம்

அந்தணர் தோற்றம்

அந்தணர் இயல்பு

அந்தணர் தொழில்

ஓதல், ஓதுவித்தல்

வேட்டல், வேட்பித்தல்

ஏற்றல்

விழா நிகழ்த்தல்

ஈமச் சடங்கு செய்தல்

அந்திக்கடன் செய்தல்

அந்தணர் விருந்தோம்பல்

அந்தணத் துறவி

II. பார்ப்பார்

தொல்காப்பியத்தில் பார்ப்பார்

சங்க இலக்கியத்தில் பார்ப்பார்

தோற்றம்

இயல்பு

சமுதாய நிலை

ஓதுதல்

# இயல்-5

## வினைஞர் வாழ்க்கை

சமுதாயத்தில் மக்கள் செய்யும் தொழிலின் தன்மைக்கேற்ப அவர்களது வாழ்க்கையும் இயல்பும் அமையும். சங்க இலக்கியங்கள் அந்தணர், பார்ப்பார், துறவியர், வணிகர், கைவினைஞர், அறிவர், நாழிகைக்கணக்கர், மருத்துவர், கட்டுவிச்சி, நீகான், காரோடன், கூவலர், ஊர் காப்பாளர், பெருங்குளக் காவலர், புலையர் ஆகிய தொழிற்பிரிவினரை இனங்காட்டுகின்றன. இவற்றில் சங்கப் புலவர்கள் பாடியுள்ள சிறுசிறு வாழ்க்கை நிகழ்வுகள் இவ்வினைஞர்களின் நடைமுறை வாழ்க்கையைத் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

### 1. அந்தணர் வாழ்க்கை

அந்தணர் நால்வகை வருணத்தாருள் ஒருவர். இவர்கள் அரசருக்கு இணையான மதிப்புடையவர்கள். தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் அந்தணர் தோற்றம், இயல்பு, சமுதாய நிலை, தொழில் போன்ற பல கூறுகளை எடுத்துரைக்கும். இவை அந்தணர் நடைமுறை வாழ்க்கையைத் தெளிவுறுத்தும்.

### தொல்காப்பியத்தில் அந்தணர்

தொல்காப்பியர் அந்தணருக்குரிய பொது இயல்புகள் பலவற்றை மரபியலில் குறிப்பிடுவர். நூல், கரகம், முக்கோல், மணை என்பன அந்தணர்க்குரியனவாகும் என்பதை,

> ''நூலே கரகம் முக்கோல் மணையே
> ஆயுங் காலை அந்தணர்க் குரிய''[1]

என்னும் நூற்பாவில் விளக்குவர். பேராசிரியர், ''ஆயுங்காலை யென்றதனாற் குடையுஞ் செருப்பும் முதலாயினவும் ஒப்பன அறிந்து கொள்க. இன்னும் ஆயுங்காலை யென்றதனான் ஒரு கோலுடையார் இருவருளர். இவர் துறவறத்து நின்றாராகலின் உலகியலின் ஆராயப்படாரென்பது. முக்கோலுடையார் இருவருட் பிச்சை கொள்வாறும் பிறாண்டிருந்து தனதுண்

பானும் உலகியலின் நீங்காமையின் அவரையே வரைந்தோதி னானென்பது''[2] என விளக்குவர்.

அந்தணர் அரசராகவும் இருக்கத் தகுதியுடையவர் என்பதை,

''அந்த ணாளர்க் கரசுவரை வின்றே''[3]

என்னும் நூற்பாவில் தொல்காப்பியர் கூறுவர். இதனை இளம்பூரணர், ''அமாத்திய நிலையும் சேனாதிபதி நிலையும் பெற்ற அந்தணாளர்க்கு அரசர் தன்மையும் வரைவில வென்றவாறு. அஃதாவது மந்திர புரோகிதனாகிய வழிக் கொடியும் குடையும் கவரியும் தாரு முதலாயின அரசராற் பெற்று அவரோடு ஒரு தன்மையராகியிருத்தல்''[4] என விளக்குவர்.

''அரசர் இல்வழி அந்தணரே அவ்வரசியல் பூண் டொழுகலும் வரையப்படாது''[5] என்னும் பேராசிரியர் விளக்கமும் அந்தணர் தன்மையை நன்கு எடுத்துரைக்கும்.

அகவொழுக்கத்தில் தலைவன் கூற்றுகளைக் கூறும் தொல்காப்பியர், ''அந்தணர் திறத்தும்''[6] கூற்று நிகழும் எனக் குறிப்பிடுவர். இதனை இளம்பூரணர் ''பார்ப்பார் கண்ணும்''[7] என்றும் நச்சினார்க்கினியர், ''வேட்பித்த ஆசிரியனுங் கற்பித்த ஆசிரியனுமாகிய பார்ப்பார் கண்ணும்''[8] என்றும் விளக்குவர். இவ்விரு உரையாசிரியர்களும் அந்தணர் என்பதற்குப் பார்ப்பார் எனப் பொருள் கொள்வது நோக்கத்தக்கதாகும். அக வொழுக்கத்தில் அந்தணர் பங்காற்றுவதாகக் கூற விரும்பாத உரையாசிரியர்கள் பார்ப்பார் எனப் பொருள் கொண்டுள்ளமை தெளிவாகும்.

### சங்க இலக்கியத்தில் அந்தணர்

சங்க இலக்கியங்கள் அந்தணர் தொடர்பான பல்வேறு கூறுகளை எடுத்துரைக்கும். அந்தணர் இல்லம், தோற்றம், இயல்பு, தொழில், துறவு மேற்கொள்ளல் போன்றவை அக்கூறுகளாகும்.

### அந்தணர் இல்லம்

அந்தணரைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் 'மறைகாப்பாளர்' என்பர். இவர்களது இல்லம் வளவிய கன்றுகள் கட்டப்பட்ட சிறிய கால்களை உடைய பந்தரைக் கொண்டது. ஆப்பியான் மெழுகிய அகத்தில் வழிபடுந் தெய்வங்களைக் கொண்டது. இவ்வில்லத்தைக் கோழிகளுடன் நாயும் நெருங்காது. மாறாகக் கிளிகளை வளர்ப்பர். அக் கிளிகளுக்கு வேதத்தின் ஓசையைக் கற்பிப்பர். இதனை,

"செழுங்கன் றியாத்த சிறுதாட் பந்தர்ப்
பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்
மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது
வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்
மறைகாப் பாளர் உறைபதி"

(பெரும்பாண். 297-301)

என்னும் அடிகளில் எடுத்துரைப்பர்.

மதுரையில் இருந்த அந்தணர் இல்லங்களை,

"குன்றுகுயின் றன்ன அந்தணர் பள்ளி"

(மதுரைக். 474)

என்பர் மாங்குடிமருதனார். இது மலையை உள்வெளியாக வாங்கி இருப்பிடமாக்கினாற் போன்ற அமைப்புடையதாகும்.

### அந்தணர் தோற்றம்

அந்தணர் உறியில் தங்கின கமண்டலத்தையும் முக்கோலையும் தோளில் தாங்கியிருப்பர். வெப்பம் மிகுந்த காட்டு வழியில் செல்லும்பொழுது குடை பிடித்துச் செல்வர். இதனை,

"எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்

குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணிர்"

(கலித். 9: 1-4)

என்னும் அடிகளில் விளக்குவர்.

அந்தணர் முப்புரியாகிய பூணூல் அணிந்திருத்தலை,

"புரிநூல் அந்தணர்"

(பரி. 11: 79)

எனக் குறிப்பிடுவர். இப்புரிநூல் உபநயனத்தின் போது அணியப்பெறும். இதனைச் சிறப்பாகச் செய்வர். இவர்கள் உபநயனம் நடத்துதலை மீண்டும் பிறத்தலாகக் கருதுவர். இவர்கள் உபநயனத்துக்கு முன்பு ஒரு பிறப்பும் பின்பு ஒரு பிறப்புமாகிய இரண்டு பிறப்பினை உடையவர்கள் என்பதை,

" இருபிறப் பிருபெயர் ............ .....

............ .................. அந்தணர்"

(பரி.14: 27-28)

எனக் கூறுவர்.

இரு பிறப்பாளராகிய அந்தணர், வீடுபேறு ஒன்றையே விரும்பிப் புலன்கள் மேற்செல்லும் ஆசைகளை அடக்கியவர்கள் என்பதை,

"ஒன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர்"

(புறநா. 367:12)

என்பர் ஔவையார்.

## அந்தணர் இயல்பு

அந்தணர் வேதங்களை அவற்றின் பொருள் விளங்குமாறு ஓதுவர். அவ்வேதங்கள் கூறும் ஒழுக்கத்தின் படி ஒழுகுவர். அறத்தின் வழி நடப்பர். பல்லுயிர்களிடத்தும் பரந்துபட்டுச் செல்லும் அருள் நிரம்பிய நெஞ்சினராக இருப்பர். மெய்யுணர்வினை அறிந்தவர்களாகத் திகழ்வர்[9].

அந்தணர் நாவன்மையுடையவர்கள். இதனால் இவர்களை,

''நாவல் அந்தணர்"

(பரி. 1:13; 2:57)

எனச் சிறப்பிப்பர்.

அந்தணர் வெற்றி மிகுந்த பெரும்புகழ் உடையவர்களாயிருத்தலை,

"விறன்மிகு விழுச்சீர் அந்தணர்"

(பரி. 1:37)

என்பர். இவர்கள் தத்தமக்குரிய அறநெறிக்கட் பிறழாது நின்று வேதங்களைப் பயில்வர். தவ ஒழுக்கத்தில் முதிர்ந்து புகழ் பெறுவர். வேதம் குறிப்பிடும் ஒழுக்கத்தில் ஒரு சிறிதும் பிறழாது ஒழுகுவர். இத்தன்மையை,

"அறத்தொடு வேதம் புணர்தவ முற்றி
விறற்புகழ் நிற்ப விளங்கிய கேள்வித்
திறத்திற் றிரிவில்லா அந்தணர்"

(பரி. 1: 18-20)

என எடுத்துரைப்பர்.

### அந்தணர் தொழில்

அந்தணர் ஆறுவகையான தொழிலை நடைமுறை வாழ்க்கையில் மேற்கொள்வர். இதனை,

"அறுதொழி லந்தணர்"

(புறநா. 397: 20)

என்பதில் குறிப்பிடுவர். ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன அவ்வறுவகைத் தொழில்களாகும். இதனை,

"ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்தல்
ஈத லேற்றலென் றாறுபுரிந் தொழுகும்
அறம்புரி யந்தணர்"

(பதிற். 24: 6-8)

என்னும் அடிகளில் தெளிவாக்குவர்.

## ஓதல், ஓதுவித்தல்

வேதம் ஓதல், ஓதுவித்தல் என்பன அந்தணர்க்குரிய தொழில்களுள் முதன்மையானவையாகும். அதனால் இவர்களை,

"மறைநவி லந்தணர்"

(புறநா. 1: 6)

"அருமறை நாவின் அந்தணர்"

(சிறுபாண்.204)

"கேள்வி யந்தணர்"

(பெரும்பாண். 315)

எனப் பலவாறாகச் சிறப்பிப்பர். இவ்வந்தணர் வைகறைப் பொழுதில் வேதம் ஓதுதல் நடைமுறையாகும். இதனை மாங்குடி மருதனார் மதுரைக்காஞ்சியில் தெளிவாகக் குறிப்பிடுவர். மதுரையில் வைகறைப் பொழுதில் அந்தணர் வேதம் ஓதுவது, பொய்கை மலரில் பூந்தாதுண்ணும் தும்பி முரல்வது போல உள்ளது என்பர். இதனை,

"போதுபிணி விட்ட கமழ்நறும் பொய்கைத்
தாதுண் தும்பி போது முரன்றாங்
கோத லந்தணர் வேதம் பாட"

(மதுரைக். 654-656)

என்னும் அடிகளில் தெளிவுறுத்துவர்.

## வேட்டல், வேட்பித்தல்

வேள்வி செய்தலும், செய்வித்தலும் அந்தணர் தொழில்களுள் சிறப்பானவையாகும். இவர்கள் செய்யும்

வேள்விகளைப் பொ.வே. சோமசுந்தரனார், "அந்தணர் செய்யும் வேள்வியான கன்ம வேள்வி, தவ வேள்வி, செப வேள்வி, தியான வேள்வி, ஞான வேள்வி என ஐவகைப் படும். இவை ஒன்றற்கொன்று முறையே உயர்ந்த வேள்விகளாம்"[10] என்பர்.

அந்தணர் மந்திரத்தினால் மெய்ந்நூல் உரைத்த முறைமையில் தப்பாது வேள்வி நிகழ்த்துவர். இதனை,

"மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி"

(முருகு. 95-96)

என நக்கீரர் கூறுவர்.

அந்தணர் வேள்வி நிகழ்த்தும் பொழுது வேள்வித் தூணம் அமைப்பர். வேள்வித் தூணம் என்பது வேள்விக்கண் நடப்படும் தறியாகும். இதனை 'யூபத்தம்பம்' என்பர் வடநூலார்.[11]

"விளையாட்டு மகளிர் நீராடித் துறையில் விட்டுச் சென்ற மகரக் குழையினைத் தனது உணவெனக் கருதிக் கவர்ந்த சிச்சிலிப் பறவை பனைமரத்தின் மடலிடத்துச் செல்லாமல் அந்தணர் யாகசாலையில் நட்ட வேள்வித் தூணில் தங்கியது"[12] என வேள்வித்தூணத்தைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் குறிப்பிடுவர்.

அந்தணர் வேள்வி செய்யும் பொழுது வேள்வித் தீ அணைந்து விடாமல் பாதுகாப்பர். இதனை,

"அழல்புறந் தரூஉ மந்தணர்"

(புறநா.122:3)

என்னும் அடி நன்குணர்த்தும்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் நாடு, வயலில் மலர்ந்த செந்தாமரையோடு அந்தணர் அறங்கருதிச் செய்யும் வேள்வித் தீயை உடைய சிறப்புடையது[13].

அந்தணர் வேள்வித் தீயை முறையாக மூட்டிச் சுடரை உண்டாக்குதலை,

"புகழ்இயைந் திசைமறை உறுகனல் முறைமூட்டித்
திகழொளி ஒண்சுடர் வளப்பாடு கொளலும்"

(பரி. 2 : 63-64)

என்னும் அடிகள் உணர்த்தும்.

வேள்வித் தீயால் எழும்புகை, தலைவியின் ஆற்றாமை கண்டு ஆற்றாமை அடைந்த தோழியின் நெஞ்சு பெருமூச்சு விடுவதற்கு உவமை கூறப் பெறும். இதனை,

"கேள்வி யந்தணர் கடவும்
வேள்வி யாவியின் உயிர்க்குமென் னெஞ்சே"

(கலித். 36: 25-26)

எனக் கூறுவர் பாலை பாடிய பெருங்கடுங்கோ.

**ஏற்றல்**

வேள்வி நிகழ்த்தும் அந்தணர்க்கு, அரசர் அருங் கலன்களை நீர்வார்த்துக் கொடுப்பர். இதனை,

" ................ ............. ........... நன்பல
கேள்வி முற்றிய வேள்வி யந்தணர்க்
கருங்கல நீரொடு சிதறி"

(புறநா. 361: 3-5)

எனக் கூறுவர்.

செல்வக்கடுங்கோ வாழியாதனின் அரண்மனை முற்றம் அறநூல்களை ஓதிப் பயின்று விளங்கிய நாவினையும் உயர்ந்த புகழமைந்த வேள்விகள் பல செய்து முடித்த கேள்வியினையுமுடைய அந்தணர்களுக்கு அரிய கலன்களை நீர் வார்த்துக் கொடுத்தலால் அந்நீரொழுகி மிக்க சேறாக உள்ளது[14] என்பர் கபிலர்.

### விழா நிகழ்த்தல்

அந்தணர் விழாக்கள் நிகழ்த்தி வைத்தலை நடைமுறையாகக் கொள்வர். முன்பனி மிக்க மார்கழித் திங்கள் நிறைமதி விளங்கும் திருவாதிரை நாளில், ஆகமங்கள் உணர்ந்த அந்தணர் விழாச் செய்யத் தொடங்குவர். இதனை,

"கனைக்கு மதிர்குரல் கார்வானம் நீங்கப்
பனிப்படு பைதல் விதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்க"

(பரி.11: 74-78)

எனப் பரிபாடல் விளக்கும்.

### ஈமச் சடங்கு செய்தல்

அந்தணர் இறந்தவர்களுக்கு ஈமச் சடங்கும் நிகழ்த்துவர். இவர்கள் விழா நிகழ்த்தும் அந்தணர்களிடமிருந்து வேறுபட்டவர்கள். இவ்வந்தணர் பசிய தருப்பைப் புல்லைப் பரப்பி அதில் இறந்தவரைக் கிடத்தி வாளோக்கி அடக்குவர். இதனை,

"அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலும்"

(புறநா. 93: 7-11)

என்பர். இதில் அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர் என்பது அந்தணரைக் குறிக்கும். இதனால் அந்தணர் ஈமச் சடங்கு செய்தலை நடைமுறை வாழ்க்கையாகக் கொண்டிருந்தமை புலனாகும்.

### அந்திக்கடன் செய்தல்

அந்தணர் அந்தியில் நிகழ்த்தும் கடன் அந்திக்கடன் ஆகும். இதற்காகத் தினமும் அந்திப் பொழுதை எதிர்பார்த் திருப்பர். இதனை,

"அந்தி யந்தண ரெதிர்கொள"

(கலித்.119: 12)

என்பர். கபிலர் இதனை,

"அந்தி அந்தணர் அயர"

(குறிஞ்சிப்.225)

என்பர். அந்தணர் அந்திக்கடன் செலுத்தும் பொழுது ஆவுதி யாகிய தீயினை எழுப்புவர். இதனை முத்தீ என்பர். "முத்தீ யாவன ஆகவனீயம், காருகபத்தியம், தென்றிசையங்கி"[15] என்பனவாகும். இவ்வாறு அந்தணர் அந்திக் காலத்தில் செய்தற்கரிய கடனாகிய ஆவுதி நிகழ்த்தும் தீயின் விளக்கு அருகில் மான் பிணைகள் துயிலும் தன்மையை,

"................. ................. .................. அடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி யந்தண ரருங்கட னிறுக்கும்
முத்தீ விளக்கிற் றுஞ்சும்"

(புறநா. 2:20-23)

என்னும் அடிகளில் விளக்குவர்.

### அந்தணர் விருந்தோம்பல்

அந்தண மகளிர் விருந்தோம்பலில் சிறப்புடைய வர்கள். இவர்கள் பறவைப் பெயர் பெற்ற நெற்சோறு சமைப்பர். சேதாவின் மோரிலிருந்து எடுத்த வெண்ணெயில் கொம்மட்டி மாதுளையின் வகிரினை வேக வைப்பர். அதனுடன் மிளகுப் பொடியும் கறிவேப்பிலையும் கலப்பர். இவ்வூறு கறியோடு மாவடுவையும் வைத்து விருந்தோம்புவர்.[16]

### அந்தணத் துறவி

அந்தணர்களில் துறவு மேற்கொள்வோரும் உண்டு. இவ்வந்தணத் துறவியர் அந்திக் காலத்தில் முக்கோலைக் கையிற் கொண்டு முதுமொழியை நினைந்திருப்பர். இக்காட்சியை மாலைக் காலத்தில் கடற்கரை மணல் மேட்டில் நாரைகள் அமர்ந்திருப்பதற்கு உவமையாகக் கூறுவர் நல்லந்துவனார். இது,

"செக்கர்கொள் பொழுதினான் ஒலிநீவி இனநாரை
முக்கோல்கொள் அந்தணர் முதுமொழி நினைவார்போல்
எக்கர்மேல் இறைகொள்ளும்"

(கலித். 126: 3-5)

என்பதில் தெளிவாகும்.

### II. பார்ப்பார்

பார்ப்பார் என்ற சொல்லுக்கு வேர்ச் சொல் "பார்ப்பு" என்பதாகும். இவ்வேர்ச் சொல்லுக்கு இளமை, குஞ்சு, குட்டி என்பது பொருள். இதனை,

"பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை"[17]

என்பர் தொல்காப்பியர்.

ஆனால் பார்ப்பார் என்ற சொல்லுக்கு "வேதத்தையும் வேதாந்தத்தையும் பார்ப்பவர்கள் என்பது பொருள். பார்ப்பான் என்ற சொல் பிராமணன் என்ற சொல்லின் திரிபாகும்"[18] என்பர் ந. சுப்பிரமணியன். சி.இலக்குவனார், "பார்ப்பார் என்றால் ஆராய்வார் என்று பொருள் படும். நூல்களை ஆராயும் தொழிலில் ஈடுபட்டிருந்த அறிஞர்கள் பார்ப்பார் என்று அழைக்கப்பட்டிருத்தல் வேண்டும்"[19] என்பர்.

### தொல்காப்பியத்தில் பார்ப்பார்

அகவொழுக்கத்தில் பார்ப்பார் பங்கினைத் தொல்காப்பியர் எடுத்துரைப்பர். பார்ப்பான் களவின்கண் கூற்றுக்குரிய அறுவருள் ஒருவனாவான்.[20] இளம்பூரணர் பார்ப்பானை,

"உயர்குலத்தோனாகிய தோழன்"[21] என்று கூறுவர். பேராசிரியர், "பார்ப்பானென்பான் நன்றுந் தீதும் ஆராய்ந்து உறுதி கூறுவானெனப்படும்"[22] என விளக்குவர்.

கற்பின்கண் கூற்றுக் குரிய பன்னிருவருள் பார்ப்பானும் ஒருவனாவான். இவனைத் தொல்காப்பியர்,

"பேணுதகு சிறப்பிற் பார்ப்பான்"[23]

எனச் சிறப்பிப்பர். கற்பொழுக்கத்தில் பார்ப்பாருக்குரிய கிளவிகளாக,

"காமநிலை யுரைத்தலும் தேர்நிலை யுரைத்தலுங்
கிழவோன் குறிப்பினை எடுத்துக் கூறலும்
ஆவொடு பட்ட நிமித்தங் கூறலும்
செலவுறு கிளவியும் செலவழுங்கு கிளவியும்
அன்னவை பிறவும் பார்ப்பார்க் குரிய"[24]

என்பர்.

கற்பின்கண் தலைமக்கள் ஊடல் தீர்க்கும் வாயில்களுள் பார்ப்பானும் ஒருவனாவான்.[25] இப்பார்ப்பார் கூற்றினை அனைவரும் கேட்பர். இதனை,

"பார்ப்பார் அறிவர் என்றிவர் கிளவி
யார்க்குஞ் வரையார் யாப்பொடு புணர்ந்தே"[26]

என்பர் தொல்காப்பியர்.

அகவொழுக்கத்தில் பெரிதும் பங்கு கொள்ளும் பார்ப்பார் புறவொழுக்கத்தில் அதிகம் சுட்டப் பெறவில்லை. வாகைத் திணைப் பாகுபாட்டினை விளக்கும் தொல்காப்பியர்,

"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்"[27]

என்னும் நூற்பா அடியில் பார்ப்பனரைக் குறிப்பிடுவர்.

இளம்பூரணர் இதனை, "ஆறு திறனாகிய அந்தணர் பக்கமும்; அவை ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன"[28] என்பர். இளம்பூரணரின் இவ்விளக்கம் ஓதல் முதலான அறுவகையும் பார்ப்பாருக்கு

இல்லாது அந்தணர்க்குரியன என்பதை எடுத்துரைப்பதாக உள்ளது.

சாமி. சிதம்பரனார், "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்பது அறுவகைப்பட்ட அந்தணர் பக்கமும் என்றிருப்பதே பொருத்தமாகும். 'அந்தணர்' என்ற சொல் பிற்காலத்தினரால் உரையாசிரியர்களுக்கு முன்பே 'பார்ப்பன' என மாற்றப்பட்டிருக்க வேண்டும்"[29] என்று கூறுவது இங்கு நோக்கத்தக்கதாகும்.

### *சங்க இலக்கியத்தில் பார்ப்பார்*

சங்க இலக்கியங்கள் பார்ப்பனர் தோற்றம், இயல்பு, சமுதாய நிலை, தொழில் முதலான பல்வேறு கூறுகளை எடுத்துரைக்கும்.

### தோற்றம்

பார்ப்பனர் முன்குடுமி வைத்திருப்பர். இவ்வழக்கத்தை,

" ............. ................ .............. நம்மூர்ப்
பார்ப்பனக் குறுமகப் போலத் தாமுங்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாட ஊர்ந்த மாவே"

(ஐங்.202)

என்பதில் எடுத்துரைப்பர் கபிலர். இதில் பார்ப்பன இளஞ்சிறார் தலையில் முன்குடுமி வைத்திருக்கும் தோற்றம் விளங்கும்.

பார்ப்பனர் புரச மரத்தின் பட்டை நீக்கிய தண்டோடு ஏந்திய கரகத்தையுடையவர்கள். விரதம் மேற்கொண்டு ஒழுகும் இயல்பினர். இதனை,

"பார்ப்பன மகனே பார்ப்பன மகனே
செம்பூ முருக்கி னன்னார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப்

படிவ வுண்டிப் பார்ப்பன மகனே"

(குறுந். 156: 1-4)

என்னும் அடிகளில் கூறுவர்.

வயலைக் கொடி போல வாடிய இடையும் வருத்தத்தால் ஊர்ந்து செல்வது போன்ற நடையும் உடையவர்கள். இதனை,

"வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவ லூர்திப் பயலைப் பார்ப்பான்"

(புறநா. 305: 1-2)

என்பர் மதுரை வேளாசான்.

**இயல்பு**

பார்ப்பார் பசுவின் (ஆன்) இயல்புடையவர்கள். இதனை,

"ஆனியற் பார்ப்பன மாக்கள்"

(புறநா. 9:1)

என்பதில் குறிப்பிடுவர் நெட்டிமையார்.

**சமுதாய நிலை**

பார்ப்பார் சமுதாயத்தில் உயர்ந்த நிலையினராகவே உள்ளனர். அரசரும் பார்ப்பாருக்குப் பணிந்து ஒழுகுவர். கபிலர், செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாடும்பொழுது,

"பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே"

(பதிற். 63: 1)

என்பர்.

தாமற்பல்கண்ணனார் என்னும் புலவர் ஒரு பார்ப்பார். அவரும் சோழன் மாவளத்தானும் வட்டாடினர். வட்டுகளில் ஒன்று தாமற்பல்கண்ணனாரை அறியாமல்

அவர்க்கீழ் மறைந்துவிட்டது. அதனைப் பின்பு உணர்ந்த மாவளத்தான் வெகுண்டு அவரை அவ்வட்டினால் எறிந்தான். உண்மை கூறியும் அதனை ஆராயாது வெகுண்டெறிந்த அவன் செயலை இகழ்ந்து,

"........... நின் முன்னோ ரெல்லாம்
பார்ப்பார் நோவன செய்யலர்"

(புறநா. 43: 12-13)

என்பர். இவை பார்ப்பார் சமுதாயத்தில் அரசரும் மதிக்கத்தக்க அளவில் வாழ்ந்தமையை நன்கு புலப்படுத்தும்.

**ஓதுதல்**

பார்ப்பார் ஓதுதலை நடைமுறையாகக் கொண்டிருத்தலை,

"பார்ப்பா ரோதுக"

(ஐங். 4: 2)

எனக் குறிப்பிடுவர் ஓரம்போகியார்.

**தூது செல்லல்**

பார்ப்பார் அரசாங்கத் தூதுவராகச் செல்லல் நடைமுறையாகும். தூது செல்லும் பார்ப்பான் வெள்ளிய ஓலைச் சுருளுடன் வருதலை,

"தூதொய் பார்ப்பான் மடிவெள் ளோலை"

(அகநா. 337: 7)

என்பர் பாலை பாடிய பெருங்கடுங்கோ.

"பார்ப்பான் இரவில் வந்து நில்லாமல் உள்ளே சென்று சொல்லிய சொற்கள் சில. அதன் பயனாக ஏணியையும் சிப்பையும் யானைகளையும் அவற்றின் பக்கத்தே கட்டப்பட்ட மணிகளையும் நீக்கி விட்டனர்" என்பது பார்ப்பார் தூதில் சிறந்து விளங்கியமையை நன்குணர்த்தும். இதனை,

"வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவ லூர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே
ஏணியுஞ் சீப்பு மாற்றி
மாண்வினை யானையு மணிகளைந் தனவே"

(புறநா. 305)

என்பர் மதுரை வேளாசான்.

## வளை அறுத்தல்

பார்ப்பார் சங்கறுத்தலைத் தொழிலாகக் கொள்வர். இதனை,

"வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த
வேளை"

(அகநா. 24: 1-2)

என்னும் அடிகள் உணர்த்தும். ந. மு. வேங்கடசாமி, "வேள்வி செய்யாமையான் தாழ்நிலையடைந்த பார்ப்பனர்க்குச் சங்கறுக்கை முதலிய தொழில்கள் உளவென்பது பெறப் பட்டது"[30] என்பர்.

தொ. பரமசிவன், "வேளாப் பார்ப்பான் என்ற இலக்கிய வழக்கு பார்ப்பனர் என்போர் பொதுவாக வேட்கும் (வேள்வி செய்யும்) தொழில் செய்வோர் என்பதையே எதிர்மறையாகக் காட்டுகிறது"[31] என்பர். கபிலர்,

"............ .............. .............. வல்லோன்
வாளரம் பொருத கோள்நேர் எல்வளை"

(நற். 77: 8-9)

என்பர். இதில் வல்லோன் என்பதற்கு ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, "வேளாப் பார்ப்பானாகிய வல்லோன்"[32] என்பர்.

## ஏற்றல்

பார்ப்பார் அரசர்களிடம் சென்று பொருள் பெறுதல்

நடைமுறையாகும். பொருள் வேண்டி நின்ற பார்ப்பனருக்கு அவரது நனைந்த கை நிறையப் பொற்பூவும் பொற்காசும் நீர் வார்த்துக் கொடுத்தலை,

"ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து"

(புறநா. 367: 4-5)

என்பர் ஔவையார்.

## அகவாழ்வில் பார்ப்பார்

நச்சினார்க்கினியர் பார்ப்பார் கிளவியின் விளக்கத்தில்,"இவையெல்லாம் தலைச்சங்கத்தாரும், இடைச்சங்கத்தாரும் செய்த பாடலுட் பயின்ற போலும், இக்காலத்தில் இலக்கியமின்று"[33] என்பர். உ.வே. சாமிநாதையர் குறுந்தொகை 156-வது பாடலின் விளக்கவுரையில் "இது பார்ப்பனப் பாங்கன் காமநிலையுரைத்துத் தேர்நிலையுரைத்தபோது தலைவன் கூறியது"[34] என விளக்குவர். இப்பாடலில் தலைவன்,

"எழுதாக் கற்பி னின்சொ லுள்ளும்
பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்
மருந்து முண்டோ மயலோ விதுவே"

(குறுந். 156: 5-7)

எனக் கூறுவது அகவாழ்வில் பார்ப்பார் பங்கினைத் தெளிவுறுத்தும்.

## பார்ப்பன மகளிர்

பார்ப்பன மகளிர் மாலை நேரத்தில் முல்லைப்பூ அணிந்து தம்மை அலங்கரித்துக் கொள்ளுதல் நடைமுறையாகும். இதனை,

"கான முல்லைக் கயவாய் அலரி
பார்ப்பன மகளிர் சார்ப்புறத் தணியத்
கல்சுடர் சேரும் கதிர்மாய் மாலை"

(நற். 321: 3-5)

என்னும் அடிகள் நன்குணர்த்தும். ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, "கணவன் புணர்ந்துடன் இருப்பினும் வேற்றுப்புலம் போகினும் பார்ப்பன மகளிர் தம்மை ஒப்பனை செய்து கோடலில் தப்பாராகலின் அவரை விதந்து கூறினான்"[35] எனப் பார்ப்பன மகளிர் இயல்பை எடுத்துரைப்பர்.

## பார்ப்பனத் துறவி

துறவு மேற்கொண்டொழுகிய பார்ப்பனரைச் சங்க இலக்கியம் குறிப்பிடும். இவர்கள் துகிலைக் காவிக்கல்லில் தோய்த்து உடுத்தும் தவ வேடமுடையவர்கள்; முக்கோலையும் உடையவர்கள். இம்முக்கோலில் பார்ப்பனத் துறவி காவி யாடையை இட்டு வைத்திருத்தல்,

> "கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்
> முக்கோ லசைநிலை"
>
> (முல்லைப்: 37-38)

என்பதில் விளங்கும்.

## அந்தணர்-பார்ப்பனர் வேறுபாடு

தமிழறிஞர்கள் அந்தணர் வேறு; பார்ப்பார் வேறு என்ற கருத்தினைக் கூறுவர். ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, "பார்ப்பார் என்போர் ஓதல், ஓதுவித்தல் முதலிய அறு தொழிலைச் செய்யும் வேதியராவர். அந்தணரென்போர் பார்ப்பார், அரசர், வணிகர், வேளாளரென வரும் பலருள் அருளறம் மேற்கொண்டு முற்றத் துறந்த துறவிகளாவர்"[36] என்பர்.

சாமி. சிதம்பரனார், "தமிழர்களிலே அந்தணர்கள் என்பவர்கள் ஒரு வகையினர்; பார்ப்பார் என்பவர்கள் ஒரு வகையினர்; இருவரும் வெவ்வேறு வகுப்பினர். பிற்காலத்தில் பார்ப்பனரையும் அந்தணரையும் ஒன்றாகவே கருதி விட்டனர்"[37] என்பர்.

சி. இலக்குவனார், "தமிழ்நாட்டில் பார்ப்பார் என்பது குலம் பற்றி வந்தது அன்று; தொழில் பற்றி வந்தது"[38] என்பர்.

தொல்காப்பியம்,சங்க இலக்கியங்களினடிப்படையில் அந்தணருக்கும் பார்ப்பாருக்குமிடையே உள்ள வேறுபாட்டினைக் காண வேண்டும். தொல்காப்பியர் காலத்தில் அந்தணரும் பார்ப்பாரும் ஒரு தன்மையராக இருந்திருப்பின் இருவரையும் அவர் தனித்தனிச் சொல்லாட்சியில் குறிப்பிட்டிருக்க இடமில்லை. தொல்காப்பியர் அந்தணர், பார்ப்பார் என்று தனித்தனியாகக் குறிப்பிடுவது இருவரும் வேறுபட்ட தன்மையினர் என்பதைப் புலப்படுத்தும்.

தொல்காப்பியத்தில் அந்தணரும் பார்ப்பாரும் ஒருவரே என ஐயத்தை விளைவிக்கும் இடங்கள் இரண்டாகும்.

1. வாகைத்திணைப் பாகுபாட்டினுள் 'அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்' என்று அமைவது.

2. அகவொழுக்கத்தில் கற்பில் நிகழும் தலைவன் கூற்றுகளில் 'அந்தணர் திறத்தும்' கூற்று நிகழ்வதாகக் கூறுவது. இவை இரண்டினுக்கும் உரையாசிரியர்கள் தரும் விளக்கங்கள் நோக்கத்தக்கதாகும்.

இளம்பூரணர் அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கத்துக்கு, "ஆறு வகையான அந்தணர் பக்கமும் (அவையாவன) ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன"[39] என விளக்குவர்.

நச்சினார்க்கினியர் "ஆறு கூற்றினுட்பட்ட பார்ப்பியற் கூறும்"[40] எனப் பதவுரை எழுதினாலும் விளக்கத்தில் "ஓதுவித்தலும் வேட்பித்தலும் ஏற்றலும் அந்தணர்க்கே உரிய"[41] என்பர்.

இவற்றால் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகிய இருவரும் அறுவகைத் தொழில் அந்தணர்க்குரியது எனக் கருதுவது விளங்கும்.

அகவொழுக்கத்தில் பார்ப்பார் மிகுதியும் இடம் பெறுவதைத் தொல்காப்பியர் இலக்கணமாகக் கூறியிருக்கத் தலைவன் கூற்று அந்தணரிடம் நிகழ்த்துவதாகக் கூறுவது குறித்துப் உரையாசிரியர்கள் கருத்து வேறுபடுவர். அந்தணர்

திறத்தும் என்பதற்கு இளம்பூரணர், "பார்ப்பார் கண்ணும்"[42] என விளக்குவதும், நச்சினார்க்கினியர் "வேட்பித்த ஆசிரியனுங் கற்பித்த ஆசிரியனுமாகிய பார்ப்பார் கண்ணும்"[43] என விளக்குவதும் அந்தணர் அகவொழுக்கத்தில் ஈடுபடுவதாகக் கூறுவதை ஏற்க மறுப்பது விளங்கும்.

சங்க இலக்கியங்களைக் காணும் பொழுது அந்தணர்க்கே அறுவகைத் தொழில்கள் உரியன என்பது தெளிவாகும். ஐங்குறுநூற்றில் 'பார்ப்பாரோதுக' (ஐங்.4:2) என வரும் ஓர் இடம் மட்டும் அந்தணரும் பார்ப்பாரும் ஒருவரே என எண்ணச் செய்வதாக உள்ளது. இங்கு பார்ப்பார் ஓதுவது, மறையாகிய வேதமல்லாத தமிழ் மறை எனப் பொருள் கொள்ள வேண்டும்.

இக்கருத்துக்களினடிப்படையில் அந்தணரும் பார்ப்பாரும் ஒருவரல்லர்; வேறுவேறு பிரிவினர் என்பது தெளிவாகும். ஆனால் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை கொடுக்கும் விளக்கம் பொருந்தாது. இருவரும் தமிழர் எனக் கூறும் சாமி. சிதம்பரனார் கருத்தும் பொருந்தாது. அந்தணர் ஆரியர்; பார்ப்பார் தமிழர் என்பதே அடிப்படை வேறுபாடாகும்.

அந்தணர் வேதம் பயின்றோர். ஓதல் முதலான அறுதொழில் செய்வோர். இவற்றுள்ளும் வேள்வி நிகழ்த்துதல் முதன்மையான தொழிலாகும்.

பார்ப்பார் தமிழ் மறை பயின்றோர். அரசரும் மதிக்கத்தக்க மதிப்புடையோர். அரசருக்காகத் தூது செல்லும் திறத்தோர். தமிழர் அகவாழ்வில் பெரிதும் பங்காற்றுவோர்.

தமிழர் அகவாழ்வில் பார்ப்பார் பெரிதும் பங்கு கொள்வதே அவர்கள் தமிழர் என்பதைப் பறைசாற்றும் முதன்மைச் சான்றாகும். "தமிழ் மறை நூல்களைப் பார்ப்பதும், வழிபாடு, திருமணம் முதலியவற்றை நடத்துவதுமே தொழிலாகக் கொண்டு பார்ப்பனர் என்னும் பெயருடன் ஒரு குலத்தார் முன்னமேயிருந்து பின்பு ஆரியப் பிராமணர் வந்தபின் தம் தொழிலையிழந்திருக்க வேண்டும்"[44] என்னும் ஞா. தேவ

நேசன் கருத்து பார்ப்பார் தமிழர் என்பதை வலியுறுத்தும்.

## III. துறவியர் வாழ்க்கை

இல்லறத்தைத் துறந்து துறவு மேற்கொள்வோர் துறவிகளாவர். இவர்களை இலக்கியங்கள் தாபதர், நோன்பியர், முனிவர் எனப் பாகுபடுத்தும். இத்துறவியர் நடைமுறை வாழ்க்கை ஆய்வுக்குரியதாகும்.

### (i) தாபதர் வாழ்க்கை

தொல்காப்பியர் வாகைத் திணைப் பாகுபாட்டில்,

"நாலிரு வழக்கில் தாபதப் பக்கம்"[45]

எனத் தாபதரைச் சுட்டுவர். இளம்பூரணர், "எட்டு வகைப்பட்ட வழக்கினையுடைய தாபதர் பக்கமும். அவையாவன, நீராடல், நிலத்திடைக் கிடத்தல், தோலுடுத்தல், சடை புனைதல், எரியோம்பல், ஊரடையாமை, காட்டிலுள்ள உணவு கோடல், தெய்வ பூசையும் அதிதி பூசையும் செய்தல்"[46] என விளக்குவர்.

நச்சினார்க்கினியர், "ஆகமத்தின் வழிநின்று வீடு பெற முயல்வார்க்கு உரியவாகிய எண்வகை மார்க்கத்துத் தவம் புரியுங் கூறும்"[47] என்பர். மேலும், "வழக்கென்றதனான் அந்நாலிரண்டுந் தவம்புரிவார்க்கு உரியனவுந் தவஞ்செய்து யோகஞ் செய்வார்க்கு உரியனவுமென இரு வகையவென்று கொள்க. அவற்றுள் தவஞ்செய்வார்க்கு உரியன ஊணசை யின்மை, நீர் நசையின்மை, வெப்பம் பொறுத்தல், தட்பம் பொறுத்தல், இடம் வரையறுத்தல், ஆசனம் வரையறுத்தல், இடையிட்டு மொழிதல், வாய்வாளாமை என எட்டும், இவற்றிற்கு உணவினும் நீரினுஞ் சென்ற மனத்தைத் தடுத்தலும், ஐந்தீநாப்பணும் நீர் நிலையினும் நிற்றலுங், கடலுங் காடும் மலையும் முதலியவற்றில் நிற்றலுந், தாமரையும் ஆம்பலும் யாமையும் ஆசனத்திருத்தலும், உண்டற்காலை உரை யாடாமையுந், துறந்த காற்றொட்டு வாய்வாளாமையும் பொருளென்றுணர்க"[48] எனவும் விளக்குவர்.

தொல்காப்பியர் காஞ்சித் திணையில்,

"காதலனிழந்த தாபத நிலை"[49]

என்றும் குறிப்பிடுவர். இதனை இளம்பூரணர், "காதலனை இழந்தவள் நிற்கும் தாபத நிலை"[50] என விளக்குவர். நச்சினார்க்கினியர், "காதலனையிழந்த மனைவி தவம் புரிந் தொழுகிய நிலைமை"[51] என்பர். இங்குக் கணவனை இழந்த நிலையில் பெண்கள் நோற்கும் கைம்மை வாழ்க்கை தாபதமாகச் சுட்டப்பட்டுள்ளமை தெளிவு.

சங்க இலக்கியங்கள் கணவனை இழந்த பெண்கள் நோற்கும் நோன்பைத் தாபதமாகக் கூறாமல், இல்லறத்தில் இருந்து துறவு மேற்கொள்ளும் ஆண்கள் வாழ்க்கையைத் தாபதமாகச் சுட்டும். இத்தாபதர் அருவியில் நீராடிக் காட்டு யானை கொண்டு வந்த விறகால் செந்தீ வேட்டு முதுகில் தாழ்ந்த சடையைப் புலர்த்துவர்[52].

தினமும் அருவி நீராடுதலால் சடை பழைய நிறம் மாறித் தில்லந்தளிர் போன்ற நிறம் பெறும். தாபதர் அத்தகைய சடையோடு திகழ்வர். தம் உணவுக்காகச் செறிந்த இலையையுடைய தாளியைப் பறிப்பர்[53].

தாபதர் நீண்ட சடையும் நீராடாத மேனியும் உடையோர் ஆவர். குன்றுகளில் வாழ்ந்து தவமியற்றுவர். இதனை,

" ........... .......... ......... கொன்றை
நீடிய சடையோ டாடா மேனிக்
குன்றுறை தாபதர்"

(நற். 141: 3-5)

என்பர். இவ்வியல்பினை ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, "நீள வளர்ந்துள்ளமை பற்றி நீடிய சடையும் எனவும் உண்ணாமை, நீராடாமை முதலிய செயல்கள் தவத்தோர்க்கு உரியவாதலின் ஆடாமேனி எனவும் கூறினார்"[54] என விளக்குவர்.



### (ii) நோன்பியர் வாழ்க்கை

தாபதருள் நோன்பியர் ஒரு வகையினர். நீரில் பலகால் மூழ்குதலும் ஓரிடத்தும் நிலைபெற நில்லாமையும் உடைய ஒழுக்கத்தினர். ஓரிடத்தே இருந்து கொடுப்பார் தரும் உணவைக் கையே கலனாக ஏற்று உண்பர். இதனை,

"வான்பெயல் நனைந்த புறத்த நோன்பியர்
கையூண் இருக்கையின் தோன்றும்"

(நற். 22: 6-7)

என்பர் நல்வேட்டனார்.

### (iii) *முனிவர் வாழ்க்கை*

முனிவர் மரவுரியை உடையாக உடுத்துவர். வடிவாலும் நிறத்தாலும் வலம்புரிச் சங்கினை ஒத்த வெள்ளிய நரை முடியினர். எக்காலத்தும் நீராடுதலின் அழுக்கற விளங்கும் வடிவினர். மான் தோலைப் போர்த்துவர். பகற்பொழுதுகள் பலவும் சேரக் கழிந்த உணவினர். இதனை நக்கீரர்,

"சீரை தைஇய உடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்
மாசற இமைக்கும் உருவினர் மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பெழுந் தியங்கும் யாக்கையர் நன்பகற்
பலவுடன் கழிந்த உண்டியர் இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும்
கற்றோர் அறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சியர் இடும்பை
யாவதும் அறியா இயல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர்"

(முருகு: 126-137)

என்பர்.

## IV. வணிகர் வாழ்க்கை

வணிகரைப் பகர்வர் என்பர். பொருள் இன்ன என்பதையும் விலை இன்ன என்பதையும் பகர்ந்து விற்றலால் பகர்வர் எனப்பெறுவர். சரக்குகளைப் பையிலிட்டு எடுத்துச் செல்வர்[55].

வணிகர் வெளியூர் செல்லும்பொழுது 'நீவி' எனப்படும் பையில் நிதியை வைத்து இடுப்பில் சுற்றிக் கட்டிக் கொள்வர்[56]. பொருள்களைத் துலாக்கோல் என்னும் கருவி கொண்டு நிறுப்பர்[57].

வணிகர் பொருளுக்கு மாற்றாக நெல் பெறுவர். இந்நெல் 'பகர்விரவு நெல்'[58] எனப்பெறும்.

### (i) பொன் வணிகர்

பொன் விற்கும் வணிகரைப் 'பகர்நர்' என்பர். பொற்பொடியைப் பவளச் சிமிழில் வைத்திருப்பர். இதனை,

"............. ............. ............ பகர்நர்
பவளச் செப்பில் பொன்சொரிந் தன்ன"

(அகநா. 25: 10-11)

என்பர் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்.

### (ii) கூலவணிகர்

கூலவணிகன் சீத்தலைச் சாத்தனார் சங்கப் புலவர் ஆவர். வாகு, சோளம், துவரை முதலிய கூலங்களை விற்கும் வணிகர் 'கூலம்பகர்நர்' எனப் பெறுவர்[59].

### (iii) பூ வணிகர்

பூ விற்போரை 'வட்டியர் விலைஞர்'[60] என்பர். வட்டியில் மலரை வைத்து விற்பர். வட்டி என்பது மலர் பெய்யும் செப்பு ஆகும்.

பூ விற்கும் பெண்டிரைப் 'பூவிலைப் பெண்டு'[61] என்பர். ஒவ்வொரு மனைக்கும் சென்று மனைமகளிர்க்குப் பூ

விற்றலைத் தொழிலாகக் கொள்வர். இவர்களை 'நீலம் பகர்பவர்'[62] என்றும் குறிப்பிடுவர். இப்பெண்கள் தெருக்கள் தோறும் சென்று கூவிப் பூ விற்றலை,

"........... .......... துய்த்தலைப் பாதிரி
வாலிதழ் அலரி வண்டுபட ஏந்திப்
புதுமலர் தெருவுதொறும் நுவலும்
நொதுமலாட்டி"

(நற். 118: 8-11)

என்பர் பாலை பாடிய பெருங்கடுங்கோ.

### (iv) அப்ப வணிகர்

அப்ப வணிகர் 'கூவியர்' எனப்படுவர். பாகொடு பிறவும் கலந்த அப்பத்தைப் பாலில் இட்டு விற்பர்[63]. மதுரையில் உள்ள அல்லங்காடியில் இடையாமத்திலும் இத்தொழிலைச் செய்வர். தேனிறால் போன்ற அடைகளையும் காய்ச்சிய பாகொடு பருப்பும் தேங்காயும் கலந்து உள்ளீடாக வைத்துப் பிடித்த மோதகங்களையும், பாகு கலந்த மாவினையும் விற்பர். இவற்றை விற்க இடையாமத்திலும் தூங்கி விழுந்து கொண்டே வருவோரை எதிர்பார்த்திருப்பர்[64].

### (v) ஆட்டு வணிகர்

ஆட்டு வணிகரைப் 'பாசவர்'[65] என்பர். இவ்வணிகரிடம் வாணிகம் குறித்துப் பலரும் நெடுந்தொலைவிலிருந்து கூட வருவர். அவ்வாறு வருவோரை இவ்வணிகர் சிறப்பாக விருந்தோம்புவர். அவர்களுக்கு நல்ல இறைச்சியை வேக வைத்துத் தாளிதம் செய்து உண்பிப்பர். இறைச்சி விற்போரின் குடிசையில் விலங்குகள் திரண்டு நிற்பதை,

"விலைஞர்குரம்பை மாவீண்டவும்"

(பட்டினப். 198)

என்பர். இவர்கள் எருதுகளையும் ஏனைய ஆடு, மான் முதலிய விலங்குகளையும் கொன்று அவற்றின் இறைச்சியை விற்பர்.

இறைச்சியை வெட்டுவதற்கு அடிமணையாகப் பெரிய மரக்கட்டையை வைத்துக் கொள்வர்[66].

(vi) **உமணர்**

உப்பு விற்கும் வணிகர் உமணர் ஆவர். உமணர் என்னும் சொல் வினைப் பெயராக உப்பு விற்கும் தொழில் செய்வோர் அனைவரையும் குறிக்கும்.

உமணரைக் 'கதழ்கோல் உமணர்'[67] 'கொடுங்கோல் உமணர்'[68] என்பர். பாலை நிலத்திலுள்ள பாதிரிப் பூவைத் தீ போன்ற அலரியுடன் இடையிடையே கலந்து தாழம்பூவின் தோட்டில் வைத்துக் கட்டிய கண்ணி அணிவர். தொடுதோல் அணிந்து ஒலிக்கும் அடியினையும் கோலினையும் உடைய வராகக் காட்சியளிப்பர்[69].

உமணரைக் 'கல்லா உமணர்'[70] என்று வன்பரணர் குறிப்பிடுவர். இதனால் சிறுவயது முதல் உப்பு விற்றலில் ஈடுபடுதலும், கல்வி கற்காத தன்மையும் விளங்கும். உமண மகளிர் 'உமட்டியர்'[71] எனப் பெறுவர்.

உமணர் நெய்தல் நிலத்தில் தனிக் குடியாக வாழ்வர். இதனை,

"முரம்புதலை மணந்த நிரம்பா இயவின்
ஓங்கித் தோன்றும் உமண்பொலி சிறுகுடி"

(நற். 374: 1-2)

என்பர் வன்பரணர்.

உமணர் தொழில் கருதி ஓரிடத்தும் நில்லாது தொடர்ந்து சென்று கொண்டேயிருக்கும் தன்மையுடையவர்கள். அதனால் இவர்கள் வாழ்க்கையை 'நிலையா வாழ்க்கை'[72] என்பர்.

உமணர் நெய்தல் நிலப் பரதவரிடம் உப்பைக் கொள்முதல் செய்வர்[73]. மருத நிலத்தில் விளைந்த வெண்ணெல் லைக் கொண்டு வந்து கொடுத்து உப்பை வாங்கிச் செல்வர்.

அவ்வாறு உமணர் கொடுக்கும் நெல் 'உப்பு நொடை நெல்'[74] எனப்பெறும்.

உமணர் பரதவரிடம் உப்பு வாங்கி அருகில் உள்ள நகர் முதல் காடும் நிலமும் கடந்த மலை நிலம் வரைக் கொண்டு சென்று விற்பர். உப்புப் பொதிகளை வண்டிகளில் ஏற்றிச் செல்வர். வண்டிகளை எருதுகள் இழுத்துச் செல்ல உமணர் பாலை வழியில் செல்லும் செலவு குறிப்பிடத் தக்கதாகும்.

உமணர் பெரும் பாரத்தால் உப்பு வண்டியின் அச்சு முறியலாம் என எதிர்பார்த்துப் பாதுகாப்பாகச் சேம அச்சினைப் பொருத்தியிருப்பர்[75].

உமணர் பாலை வழியில் செல்லும்போது குழுவாகச் செல்வர். இவர்கள் 'உமண் சாத்து'[76] எனப் பெறுவர். உமணர் பல எண்ணிக்கையில் வரிசையாகத் தொடர்ந்து செல்லும் செலவை 'ஒழுகை'[77] எனக் குறிப்பர். இவ்வாறு செல்வது ஊர் திரண்டு வருவது போலக் காணப்பெறும். இதனை,

"ஊரெழுந் தன்ன உருகெழு செலவு"

(அகநா. 17:11)

என்பர் கயமனார்.

உமணர் உப்புப் பொதிகளைச் சுமந்து செல்லக் கழுதைகளையும் பயன்படுத்துவர். இக்கழுதைக் கூட்டத்தைக் 'கணநிரை'[78] என்பர்.

உமணர் பாலை நிலத்தில் தங்கிச் சென்றதும் அவ்விடம் 'ஊர் பாழ்த்தன்ன'[79] தன்மையாக விளங்கும்.

உமணர் உப்பின் விலை கூறிக் கூவி விற்பர். இது 'கொள்ளை சாற்றுதல்'[80] எனப்பெறும். உமண மகளிர் ஊர்ச் சேரியில்,

"நெல்லின் நேரே வெண்கல் உப்பென"

(அகநா. 140:7)

விலை கூறி விற்பர். இதனை,

"நெல்லும் உப்பும் நேரே ஊரீர்
கொள்ளீ ரோவெனச் சேரிதொறும் நுவலும்'

(அகநா. 390: 8-9)

என்னும் அடிகளும் தெளிவுறுத்தும். இவற்றால் உமணர் பெரிய வண்டியில் உப்பைக் கொண்டு சென்று கூவி விற்றலும் ஓர் ஊரின் சேரிதோறும் சென்று விலை கூறி விற்றலும் விளங்கும்.

உமணர் உப்பு விற்கும்பொழுது, பண்டமாற்றாக நெல் பெறுவர். உமணர் உப்பு விற்றுப் பெறும் நெல்லைச் சிறு படகுகளில் ஏற்றிக் கொண்டு கழிகளில் செல்வர். இதனை,

"வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி
நெல்லோடு வந்த வல்வாய்ப் பஃறி"

(பட்டினப் : 29-30)

என்பர் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

உப்பு விற்கும் தொழிலில் உமணக் குடும்பம் முழுவதும் செயல்படும். உமணர், உமட்டியர், உமண்மகன், உமண்மகள் ஆகிய அனைவரும் ஈடுபடுவர்.

உமணர் பலநாட்கள் தொடர்ந்து பயணம் செய்து உப்பு விற்றலால், தமக்குத் தேவையான உணவுப் பொருட்களை உடன் கொண்டு செல்வர். ஒரு நாளில் பகல் முழுவதும் ஊர் ஊராகச் சென்று வாணிகம் செய்வர். இரவு ஆனதும் அங்கேயே தங்கி உணவு சமைத்து, உண்டு, உறங்கி மறுநாள் தொடர்ந்து செல்வர்.

பாலை நிலத்தில் புலி கொன்று தின்று எஞ்சிய யானையின் ஊனை, ஆறலைப்போர் கோலில் கோர்த்துக் கொண்டு சென்றது போக எஞ்சிய ஊனை, உமணர் தீக்கடைக்கோலால் உண்டாக்கிய தீயில் வதக்கிச் சமைத்து உணவாகக் கொள்வர்[81].

பாலை வழியில் களிறுகள் சுவைத்துப் போட்ட யாமரப் பட்டைகளைத் தீ மூட்டுதற்குரிய விறகாகப் பயன் படுத்துவர்[82].

உமணர் எருதுகள்,வாழும் திறன் இல்லாது முடம் பட்டால் நீரும் புல்லும் கொடாமல், யாருமில்லாத ஓரிடத்தில் விட்டுவிட்டுச் சென்றுவிடுவர்[83].

உப்பு வண்டிகளை உமண மகளிரும் ஓட்டிச் செல்வர். இதனை,

"காடி வைத்த கலனுடை மூக்கின்
மகவுடை மகடூஉப் பகடுபுறந் துரப்ப"

(பெரும்பாண்: 57-58)

என்பர். உமணர் நுகத்தில் பூட்டிய காளைகளை அவிழ்த்து மேய விட்டுத் தாமும் சோறட்டு உண்டு களைப்பாறிச் செல்வர்[84].

உப்புடன் செல்லும் உமணர், வண்டியின் பார் முறிந்து விட்டால் அதனை அங்கேயே விட்டுவிடுவர். அவ்வாறு விட்டுச் சென்ற வண்டியில் வெண்குருகு முட்டையீனும் தன்மையை அம்மூவனார்,

"கணங்கொள் உமணர் உயங்குவயின் ஒழித்த
பண்ணழி பழம்பார் வெண்குருகு ஈனும்"

(நற். 138: 3-4)

என்பர்.

உமணர் குடும்பத்தில் திருமணமாகாத உமணப் பெண்ணும் ஊர்ச் சேரியில் சென்று உப்பை விலை கூறி விற்பாள். அவ்வாறு சென்ற உமணப் பெண்ணைக் கண்டு காதல் கொண்ட தலைமகன் அவள்மேல் கொண்ட விருப்பால் உமணர் வாழ்க்கையைப் பெரிதும் விரும்பி,

"உவர்விளை உப்பின் கொள்ளை சாற்றி
அதர்படு பூழிய சேட் புலம் படரும்
ததர்கோல் உமணர் போகும் நெடுநெறிக்

கணநிரை வாழ்க்கைதான் நன்று கொல்லோ"

(அகநா. 390: 1-4)

எனப் பாராட்டுவது உமணர் சிறப்பை விளக்கும்.

### V. கைவினைஞர் வாழ்க்கை

கையால் சிறு கருவிகள் கொண்டு மிக நுணுக்கமாகச் செய்யப் பெறும் தொழில் கைவினைத் தொழில் எனப்பெறும். இவ்வாறு தொழிலாற்றுவோர் கைவினைஞர் ஆவர். இவ்வகையில் தச்சர், கொல்லர், கம்மியர், நெசவாளர், குயவர் ஆகியோர் அடங்குவர்.

### (i) தச்சர் வாழ்க்கை

"தச்சு என்பது ஒன்றையும் மற்றொன்றையும் பொருத்தி இணைப்பதாகும். இத்தச்சுத் தொழிலைச் செய்வோர் தச்சர் எனப்பட்டனர். மரத்தச்சு செய்வோர் மரத்தச்சர் எனவும் கல் தச்சு செய்வோர் கல்தச்சர் எனவும் பெயர் பெற்றனர். இவ்விருவகைத் தச்சர்கட்கும் கம்மாளர் என்ற பெயரும்உண்டு"[85] என்பர் வி. சசிவல்லி.

சங்க இலக்கியங்கள் மரவேலை செய்யும் மரத்தச்சர் நடைமுறை வாழ்க்கையைப் பெரிதும் பேசும். இத்தச்சர் சிறுவர் இழுத்து விளையாடுதற்காகச் சிறிய குதிரை பூட்டப் பெற்ற வண்டிகளைச் செய்வர். இதனை,

"தச்சன் செய்த சிறுமா வையம்"

(குறுந். 61: 1)

என்பர் தும்பிசேர்கீரன்.

தச்சரைக் "கருந்தொழில் வினைஞர்"[86] எனச் சிறப்பிப்பர். கூரிய சிற்றுளி கொண்டு தேரில் பலவகையான உருவங்களைச் செதுக்குவர். இத்தேர் கண்ணைக் கவரும் விதத்தில் அமையும். இதனை,

"கண்ணோக்கு ஒழிக்கும் பண்ணமை நெடுந்தேர்"

(அகநா. 234: 8)

என்பர் பேயனார்.

தச்சர் செய்யும் சகடத்தின் திறப்பாடு,

"கொழுஞ்சூட் டருந்திய திருந்துநிலை யாரத்து
முழவின் அன்ன முழுமர உருளி
எழூஉப் புணர்ந்தன்ன பரூஉக்கை நோன்பார்
மாரிக் குன்றம் மழைசுமந் தன்ன
ஆரை வேய்ந்த அறைவாய்ச் சகடம்"

(பெரும்பாண்: 46-50)

எனபதில் விளங்கும்.

தச்சர் செய்யும் கச்சுக் கட்டில் என்னும் பாண்டிலின் சிறப்பை,

"தசநான் கெய்திய பணைமருள் நோன்றாள்
இகன்மீக் கூறும் ஏந்தெழில் வரிநுதல்
பொருதொழி நாக மொழியெயி றருகெறிந்து
சீருஞ் செம்மையும் ஒப்ப வல்லோன்
கூருளிக் குயின்ற ஈரிலை யிடையிடுபு
தூங்கியல் மகளிர் வீங்குமுலை கடுப்பப்
புடைதிரண் டிருந்த குடத்த இடைதிரண்டு
உள்ளி நோன்முதல் பொருத்தி அடியமைத்துப்
பேரள வெய்திய பெரும்பெயர்ப் பாண்டில்"

(நெடுநல்: 115-123)

என்பர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்.

### (ii) கொல்லர் வாழ்க்கை

இரும்புத் தொழில் செய்வோர் கொல்லர் எனப்பெறுவர். தமிழ் அகராதி கருமான் (Black Smith)[87] எனப் பொருள் தரும்.

கொல்லர் இரும்பைக் காய்ச்சி அடித்துத் தேவையான கருவிகள் செய்வர். அவ்வாறு அடிக்கும்பொழுது தீப்பொறிகள் சிதறுவதை நள்ளிரவில் காடு யோறு மின்மினிகள்

சூழ்ந்துள்ள புற்றினை, அவை சிதறியோடுமாறு பெயர்த்தலுக்கு ஒப்புமைப்படுத்துவர்[88].

கொல்லர் பழுக்கக் காய்ந்த இரும்பை அடிக்கும்பொழுது சிதறிப் பறக்கும் தீப்பொறிகளை வேங்கைப் பூக்களாகக் கருதுவர்[89]. உலை ஊதும்பொழுது எழும் தீப்பொறிகளையும் வேங்கைப் பூக்களாகக் கூறுவர்.

கொல்லர் பயன்படுத்தும் துருத்தி 'ஊதுலைக் குருகு'[90] 'ஊதுலை விசைவாங்குதோல்'[91] எனப்பெறும். இத்துருத்தியின் உலை மூக்கினைப் 'பறாஅக்குருகு'[92] எனக் கபிலர் நயம்படக் கூறுவர்.

துருத்தியைக் கீழே இழுக்கும்போது காற்றை உள்வாங்கி, விடும்பொழுது வெளியேற்றும். காற்று நிறைந்திருக்கும் பொழுது துருத்தி புடைத்தும் வெளியேறிய உடன் சுருங்கியும் இருக்கும். துருத்தியின் இச்செயற்பாட்டினைக் கரடி உயிர்த்துப் புற்றினைப் பெயர்ப்பதற்கு ஒப்பிடுவர்[93].

கடிவாளக் கயிற்றைப் பூட்டியதும் குதிரை பெருமூச்சு விடுவதற்கும் கொல்லன் வலித்து இழுக்கும் துருத்தியைக் கூறுவர்[94].

கொல்லர் தீயில் பழுக்கக் காய வைத்த இரும்பை அடித்து அதன் வெம்மை குறைய நீரைத் தெளிப்பர்[95]. இதற்குத் தேவையான நீரை 'மட்கோய்' என்னும் கலத்தில் வைத்திருப்பர்[96].

கொல்லர் பணிக்களரியைக் 'கொற்றுறை குற்றில்'[97] என்பர். துருத்தி உள்ள கூடத்தை 'விசைத்தெறி கூடம்'[98] என்று குறிப்பிடுவர்.

கொல்லர் இரும்பை வைத்துச் சம்மட்டி கொண்டு அடிக்கப் பயன்படுத்தும் கல் 'உலைக்கல்' எனப்பெறும். இது பட்டடைக்கல் எனவும் பெறும். இதனை,

"இரும்புபயன் படுக்குங் கருங்கைக் கொல்லன்
விசைத்தெறி கூடமொடு பொரூஉம்

உலைக்கல்"

(புறநா. 170: 15-17)

எனபர் உறையூர் மருத்துவன் தாமோதரனார்.

கொல்லர் சம்மட்டியை உரத்துக் கொட்டும் பொழுது கூடத்தெழும் ஓசை கேட்டு மாடத்தில் உறங்கும் புறவின் சேவல் அஞ்சி உறக்கத்திலிருந்து விழிக்கும். இதனை,

"கருங்கைக் கொல்லன் இரும்புவிசைத் தெறிந்த
கூடத் திண்ணிசை வெரீஇ மாடத்து
இறையுறை புறவின் செங்காற் சேவல்
இன்துயில் இரியும்"

(பெரும்பாண்: 437-440)

என்பர் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

கொல்லர் வேல் முதலிய கருவிகளை வடித்துக் கொடுத்தலைக் கடமையாகக் கொள்வர். இதனைப் பொன் முடியார்,

"வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே"

(புறநா. 312: 3)

என விளக்குவர்.

கொல்லர் அரக்காற் செய்த கருவில் பிளவுபட்ட வாயையும் தெளிந்த ஓசையையும் உடைய மணிகளை இயற்றுவர்[99]. இவ்வேலைகளில் "முறிகொடிறு"[100] என்னும் கருவியைப் பயன்படுத்துவர். இது இக்காலத்தில் 'கொறடு'என வழங்கப் பெறும். இம்முறிகொடிற்றை நண்டின் கால்களுக்கு உவமிப்பர் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

கொல்லர் கோடாலி போன்ற கருவிகளைக் கூர் தீட்டுதற்கு அரத்தைப் பயன்படுத்துவர்[101].

கொல்லர் எல்லா ஊர்களிலும் இருந்து தொழில் இயற்றவில்லை. எழு ஊர்களுக்குப் பொதுவாக ஓர் ஊரில் உலைக்களம் அமைத்துள்ளனர். இதனை,

"ஏழூர்ப் பொதுவினைக் கோரூர் யாத்த
உலைவாங்கு மிதிதோல்"

(குறுந். 172: 5-6)

எனக் கச்சிப்பேட்டு நன்னாகையார் குறிப்பிடுவர். மற்றொரு புலவர் தன் ஊர்க் கொல்லனை,

"................ .......... ............... தன்னூர்க்
கருங்கைக் கொல்லன்"

(புறநா. 180: 11-12)

எனக் கூறுவர்.

(iii) **கம்மியர் வாழ்க்கை**

பொன், வெள்ளி, செம்பு வேலை செய்வோர் கம்மியர் எனப்படுவர். இவர்களை 'ஆசில் கம்மியன்'[102], 'கைவல் கம்மியன்'[103] எனச் சிறப்பிப்பர்.

கம்மியருள் பொன் வேலை செய்வோர், பல்வேறு வகையான அணிகலன்களைச் செய்வர். பொன்னை உரைத்துப் பார்ப்பதற்குப் பொன் உரைகல்லைப் பயன்படுத்துவர். இது 'கட்டளைக் கல்'[104] எனப் பெறும்.

பொன் வேலை செய்யும் பொழுது பட்டடைக் கல்லைப் பயன்படுத்துவர். இதில் தொடர்ந்து சுத்தியால் தட்டுவதை ஔவையார்,

"............. .................. ........................ குடிஞை
பொன்செய் கொல்லனின் முன்னிய இரட்ட"

(நற். 394: 2-3)

என ஞெமை மரத்திலிருக்கும் பேராந்தை ஒன்றினொன்று முன்னுற்று இரட்டுவதற்கு உவமையாகக் கூறுவர்.

பொன் வேலை செய்யும்பொழுது சுத்தியல் கொண்டு அடிக்கத் தெறித்து விழும் பொற்றூள்களை 'எறி இயல் பொன்'[105] எனக் குறிப்பிடுவர்.

கம்மியர் பொன், வெள்ளி முதலியவற்றை உருக்கி வார்ப்பதற்குப் பொறியைப் பயன்படுத்துவர். இப்பொறியை வார்க்கப்படும் பொருளுக்கேற்ப மண்ணால் செய்து கொள்வது வழக்கமாகும். வார்ப்பு செய்யும் பொழுது இந்த அச்சில் ஏதேனும் ஒரு பகுதி சிதையின் வேறு மண்ணை எடுத்து அச் சிதைவினை அணைத்துக் கொள்வர். இவ்வார்ப்பு அச்சுகளுக்குக் களித் தன்மையும் உலர்ந்த வழி வெடிக்காத பண்பும் கொண்ட மண் தேவைப்படும். இது எல்லா இடங்களிலும் கிடைக்காது. இதனை 'உருக்கு மண்' என்பர். உலோச்சனார்,

"உறுவினைக் கசாவா உலைவில் கம்மியன்
பொறியறு பிணைக்கூட்டும் துறைமண்"

(நற். 363: 4-5)

என்பதில் இதனை உணர்த்துவர்.

கம்மியர் முத்துக்களால் ஆகிய அணிகலன்களையும் செய்வர். கம்மியர் முத்துக்களைக் கடைவதை,

"கைவல் கம்மியன் கவின்பெறக் கடைஇ
மண்ணாப் பசுமுத்து"

(நற். 94: 4-5)

என்பர் இளந்திரையனார்.

கம்மியர் செம்பை உருக்கிப் பானை முதலான பொருட்கள் செய்வர். கம்மியர் செப்புப் பானை செய்தலை,

"........... ............ ........... கம்மியர்
செம்புசொரி பானை"

(நற். 153: 2-3)

என விளக்குவர்.

### (iv) நெசவாளர் வாழ்க்கை

"நெசவு வீட்டுத் தொழில்களில் முக்கியமானது. பண்டைத் தொழில்களுள் ஒன்று. விவசாயத்துக்கு அடுத்து மக்கள் நாகரிகம் அடையத் தொடங்கியதும் கையாண்ட முதற்

கைத்தொழில்"[106] என்பது கலைக்களஞ்சியம் தரும் விளக்கம். இத்தொழில் செய்வோர் நெசவாளர் எனப்படுவர். நெசவாளர் பருத்திப் பஞ்சைக் கொட்டையிலிருந்து பிரித்தெடுக்க வில்லைப் பயன்படுத்துவர். இதனை,

"வில்லெறி பஞ்சியின் வெண்மழை தவழும்"

(அகநா. 133: 6)

என்பர். "எஃகுறு பஞ்சிற்றாகி"[107] என்பதில் எஃகுறு என்பது வில்லால் அடித்தலைக் குறிக்கும்.

பருத்திக் கொட்டையை நீக்கித் தூய்மை செய்யும் பொழுது பஞ்சின் புறத்தோலையும் கொட்டையையும் தூசியையும் நீக்குவதற்கு நன்றாகப் புடைப்பர். இதனை,

"சிறையும் செற்றையும் புடையுநள் எழுந்த
பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்து"

(புறநா. 326: 4-5)

என்பர். இதனால் பருத்தியைத் தூய்மைப்படுத்தல் பெண்களுக்குரிய செயல் என்பது தெளிவாகும். இம்மகளிர் இரவிலும் இவ்வேலையைச் செய்தலை, 'சிறுதீ விளக்கம்' என்ற சொற்கள் உணர்த்தும்.

"பெண்கள் நூற்று இழைத்துத் தந்த நூலைப் பாவாக விரித்துத் தறியில் நெய்து ஆடையாகக் கொடுக்கும் கடமை ஆடவர் தொழிலாய் அமைந்தது"[108] என்பர் வி. சசிவல்லி.

ஆடையை ஆய்ந்து நெய்யும் பொழுது பாவானது விரிந்து காணப்படும். இதனைக் காவன்முல்லைப் பூதனார்,

"துகிலாய் செய்கைப் பாவிரிந் தன்ன"

(அகநா. 293: 4)

என்பர்.

### (v) குயவர் வாழ்க்கை

குயம் என்பதைக் 'குயச்சாதி'[109] எனத் தமிழ் அகராதி குறிப்பிடும். 'குசவர்' என்பது நாட்டுப்புற வழக்காகும்.

மட்பாண்டம் செய்வோர் குயவர் ஆவர். இக்குயவரைக் 'கலஞ்செய்கோ'[110] என ஐயூர் முடவனார் சிறப்பிப்பர்.

குயக்குலத்துச் சிறார் கலம் வனைதற்கு மண்ணைப் பிசைந்து திகிரிக்கண் கொணர்ந்து வைப்பர். குயவர் தன் கருத்திற் கருதிய கலங்களைச் செய்வர்[111].

குயவர் மட்கலஞ் செய்யும் உருளையை 'வனைகலத் திகிரி'[112] என்பர். குயவர் மட்கலங்கள் வனைந்து அவற்றைச் சூளையில் வைத்துச் சுடுவர்[113].

குயவர் அடுகலம் வனைதலோடு தாழியும் வனைவர். தாழி இறந்தவரை வைத்துப் புதைப்பதற்குப் பயன்படுத்துவதாகும்.

கிள்ளிவளவன் விண்ணுலகம் அடைந்ததும் அவனைக் கவிப்பதற்கு,

"கண்ணகன் தாழி வனைதல் வேட்டனை"

(புறநா. 228: 12-13)

எனக் குயவனை வேண்டுவர்.

"கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
................. .............. ............சுமத்தாழி
அகலி தாக வனைமோ
நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே"

(புறநா. 256: 1-7)

என்பதும் அகன்ற சுமத்தாழி செய்து தருமாறு குயவனை வேண்டினதை உணர்த்தும். இதில் 'மூதூர்க் கலஞ்செய்கோ' என்பது ஒவ்வொரு ஊரிலும் குயவர் இருந்தமையை விளக்கும்.

பிணமிட்டுப் புதைக்கப்பட்ட, கவிக்கப்பட்ட சிவந்த தாழியைக் 'கவி செந்தாழி'[114] என்பர் பெருஞ்சித்திரனார்.

குயவர் மட்பாண்டம், தாழி முதலியன வனைதலோடு விழாவினை ஊரவர்க்கு அறிவித்தலையும் செய்வர். நொச்சியால் கட்டப்பட்ட மாலை அணிந்து தெருவில் திருவிழாவை அறிவித்தலை,

"ஆறுகிடந் தன்ன அகனெடுந் தெருவிற்
சாறென நுவலும் முதுவாய் குயவ"

(நற். 200: 3-4)

என்பர். இதனைக் கயமனாரும்,

"மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடிப்
பனிக்கள் ஆர்கைப் பார்முது குயவன்
இடுபலி நுவலும் அகன்றலை மன்றத்து"

(நற். 293: 1-3)

என்று விளக்குவர்.

## (vi) பிற வினைஞர் வாழ்க்கை

சங்ககாலச் சமுதாயத்தில் அறிவர், நாழிகைக் கணக்கர், மருத்துவர், கட்டுவிச்சி, நீகான், காரோடன், கூவலர், ஊர்காப்பாளர், பெருங்குளக் காவலர், புலையர் ஆகியோர் குறிப்பிட்ட வரையறைக்குள் அடங்காது தொழிலாற்றும் வினைஞர்கள் ஆவர்.

### (i) அறிவர் வாழ்க்கை

துறவுள்ளமும் முக்காலத்தை அறியும் ஆற்றலும் உடைய பெரியோர் அறிவர் எனப்படுவர். தொல்காப்பியர்,

"மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன்"[115]

என்பர். இதனை இளம்பூரணர், "குற்றமற்ற செயலையுடைய மழையும் பனியும் வெயிலுமாகிய மூவகைக் காலத்தினையும் நெறியினால் பொறுத்த அறிவன் என்பதாகும். அறிவன்

என்பது கணிவனைக் குறிக்கும். மூவகைக் காலமும் நெறியினால் ஆற்றலாவது பகலும் இரவும் இடைவிடாமல் ஆகாயத்தைப் பார்த்து ஆண்டு நிகழும் வில்லும், மின்னும், ஊர்கோளும், தூமமும், மீன் வீழ்வும், கோள்நிலையும், பிறவும் பார்த்துப் பயன் கூறல் ஆதலான் 'மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன்' என்றார்"[116] என விளக்குவர். இதனால் இளம்பூரணர் அறிவன் என்பதற்குக் கணிவன் எனப் பொருள் கொள்வது தெளிவாகும்.

நச்சினார்க்கினியர், "காமம், வெகுளி, மயக்கம் இல்லாத ஒழுகலாற்றினை இறப்பும் நிகழ்வும் எதிர்வும் என்னும் மூவகைக் காலத்திலும் வழங்கும் நெறியான் அமைந்த முழுதுணர்வுடையோன்"[117] என்பர்.

அறிவரை ஊடல் தீர்க்கும் வாயில்களுள் ஒருவராக வும்[118] கற்பிற் கூற்றுக்குரியோருள் ஒருவராகவும்[119] தொல் காப்பியர் குறிப்பிடுவர். இவர்கள் கூற்றை யாவரும் கேட்டு அதன் வழி ஒழுகுவர்.

அறிவர் நிலைத்த வாழ்க்கையினர் இல்லை. செந்நெற் சோற்று உருண்டையும் நெய்யும் ஆகிய ஒரு வீட்டில் இடும் பிச்சையைப் பெற்று வயிறு நிரம்ப உண்பர். பின் முன்பனிக் காலத்துக்குரிய வெந்நீரை நீர் சேமித்து வைக்கும் செப்பில் பெற்றுக் கொள்வர். இதனை,

"ஆசி றெருவி னாயில் வியன்கடைச்
செந்நெ லமலை வெண்மை வெள்ளிழு
தோரிற் பிச்சை யார மாந்தி
அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்
சேமச் செப்பிற் பெறீஇயரோ"

(குறுந். 277: 1-5)

என்பர் ஓரிற்பிச்சையார்.

அறிவர் முகூர்த்தம் நடத்தக்கூடிய நாளைக் கணித்துக் கூறுவர். இதனை,

பிணமிட்டுப் புதைக்கப்பட்ட, கவிக்கப்பட்ட சிவந்த தாழியைக் 'கவி செந்தாழி'[114] என்பர் பெருஞ்சித்திரனார்.

குயவர் மட்பாண்டம், தாழி முதலியன வனைதலோடு விழாவினை ஊரவர்க்கு அறிவித்தலையும் செய்வர். நொச்சியால் கட்டப்பட்ட மாலை அணிந்து தெருவில் திருவிழாவை அறிவித்தலை,

"ஆறுகிடந் தன்ன அகனெடுந் தெருவிற்
சாறென நுவலும் முதுவாய் குயவ"

(நற். 200: 3-4)

என்பர். இதனைக் கயமனாரும்,

"மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடிப்
பனிக்கள் ஆர்கைப் பார்முது குயவன்
இடுபலி நுவலும் அகன்றலை மன்றத்து"

(நற். 293: 1-3)

என்று விளக்குவர்.

## (VI) *பிற வினைஞர் வாழ்க்கை*

சங்ககாலச் சமுதாயத்தில் அறிவர், நாழிகைக் கணக்கர், மருத்துவர், கட்டுவிச்சி, நீகான், காரோடன், கூவலர், ஊர்காப்பாளர், பெருங்குளக் காவலர், புலையர் ஆகியோர் குறிப்பிட்ட வரையறைக்குள் அடங்காது தொழிலாற்றும் வினைஞர்கள் ஆவர்.

### (i) அறிவர் வாழ்க்கை

துறவுள்ளமும் முக்காலத்தை அறியும் ஆற்றலும் உடைய பெரியோர் அறிவர் எனப்படுவர். தொல்காப்பியர்,

"மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியி னாற்றிய அறிவன்"[115]

என்பர். இதனை இளம்பூரணர், "குற்றமற்ற செயலையுடைய மழையும் பனியும் வெயிலுமாகிய மூவகைக் காலத்தினையும் நெறியினால் பொறுத்த அறிவன் என்பதாகும். அறிவன்

"நெறியறி செறிகுறி புரிதிரி பறியா அறிவனை"

(கலித். 39: 46)

என்பர் கபிலர். நச்சினார்க்கினியர். "நூனெறியாலே அறிந்த இருவருங் கூடுதற்கேதுவாகிய முகுர்த்தம் வேறுபட்டுத் தப்புதலை ஒரு காலத்தும் அறியாத கணி"[120] என அறிவர் இயல்பினை எடுத்துரைப்பர்.

### (ii) நாழிகைக் கணக்கர் வாழ்க்கை

நாழிகையைக் கணக்கிட்டுக் கூறுவோர் நாழிகைக் கணக்கர் எனப்பெறுவர். இவர்களைக் 'குறுநீர்க் கன்னல் எண்ணுநர்'[121] என்றும் கூறுவர். குறிய நீரையுடைய நாழிகை வட்டில் மூலம் நாழிகையை அளந்து கூறுவர். இதனால் 'பொழுதளந் தறியும் பொய்யா மாக்கள்'[122] என்றும் சிறப்பிக்கப்படுவர்.

நாழிகைக் கணக்கர் குறுநீர்க்கன்னல் என்னும் கருவி கொண்டு நாழிகையை அளப்பர்.[123] ஒரு வட்டிலில் நீரிட்டு, சிறு துளை வழியாக நீரைச் சிறிது சிறிதாகக் கசிய விடுவர். கசிந்த நீரை அளந்து அதன் மூலம் பொழுதை அறிந்து கூறுவர். இதனை,

"குறுநீர்க் கன்னல் எண்ணுநர் அல்லது
கதிர்மருங் கறியா"

(அகநா. 43: 6-7)

என்பர் மதுரையாசிரியர் நல்லந்துவனார்.

நாழிகைக் கணக்கர் பிறிதொரு முறையிலும் பொழுதைக் கணக்கிடுவர். இரண்டு கோல்களைத் தென்புறம் ஒன்றும் வடபுறம் ஒன்றுமாக ஒன்றுக்கொன்று சிறிது தூரத்தில் நிற்குமாறு ஊன்றுவர். இவற்றின் குறுக்கே இடைவெளிவிட்டு, வேறு இரு கோல்களை நெடுமட்டமாக அமைப்பர். அவற்றின் நிழல்கள் காலையில் ஒன்றை விட்டு ஒன்று அகன்று நிற்கும். பொழுது செல்லச் செல்ல அல்லது ஞாயிறு உயர உயர இவ்விரு நிழல்களும் குறுகிக் கொண்டே வரும். சரியான

நண்பகலில் இவ்விரு நிழல்களும் ஒன்றன்மேல் ஒன்று பொருந்தி ஒரே நிழலாகத் தோன்றும். ஞாயிறு இறங்க இறங்க இந்நிழல்கள் அகன்று அகன்று செல்லும். இந்நிழல்களின் நிலையாலும் இவற்றின் இடைவெளியைக் கொண்டும் பொழுதைக் கணக்கிடுவர். இதனை,

"................ .............. .................. மாதிரம்
விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்
இருகோற் குறிநிலை வழுக்காது குடக்கேர்
பொருதிறஞ் சாரா அரைநாள் அமயத்து"

(நெடுநல்: 72-75)

என்பர்.

### (iii) மருத்துவர் வாழ்க்கை

மருத்துவன் தாமோதரனார், மருத்துவன் வடம வண்ணக்கனார் என்போர் சங்ககால மருத்துவராவர். இம்மருத்துவரை,

'இன்னுயிர் போத்தரு மருத்துவர்"

(கலித். 137: 25)

என்பர். இவர்களை,

"அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாது
மருந்தாய்ந்து கொடுத்த அறவோன்"

(நற். 136: 2-3)

எனவும் சிறப்பிப்பர். நோயுற்றவர்க்கு விரும்பியது கொடாமல் மாறான சுவையுடைய மருந்தை ஆராய்ந்து கொடுத்த அறவோன் என்பது மருத்துவர் வாழ்வின் மேன்மையைப் புலப்படுத்தும்.

மருத்துவர் கூர்மையான வாள்பட்டு உடலில் குருதி வழியப் புண் ஏற்படும்பொழுது குருதி வழிவதைத் தடுக்கவும் புண்பட்ட இடத்தில் தூசி முதலியன படாமல் இருக்கவும்

புண்களில் பஞ்சு வைத்துத் துணியால் கட்டுவர். இதனை,

"கதுவாய் போகிய துதிவா யெஃகமொடு
பஞ்சியுங் களையாப் புண்ணர்"

(புறநா. 353: 15-16)

என்பது உணர்த்தும்.

மருத்துவர் போரில் ஏற்பட்ட பிளந்த காயத்தை ஊசி கொண்டு தையலிடுவர். இவ்வூசியை நெடுவெள்ளூசி என்பர். இந்நெடிய வெண்மையான ஊசி தசையில் புகுந்து குருதியில் தோய்ந்து வெளிவரும் காட்சி, மீன்கொத்திப் பறவை நீரில் வாழும் மீனைக் கொத்தி எழும் போது அதன் அலகு நீரில் சென்று மீளுவது போலக் காட்சியளிப்பதாகப் பாடுவர். இதனை,

"மீன்றேர் கொட்பிற் பனிக்கய மூழ்கிச்
சிரல்பெயர்ந் தன்ன நெடுவள் ளூசி
நெடுவசி பரந்த வடு"

(பதிற். 42: 2-4)

என்பர் பரணர்.

### (iv) கட்டுவிச்சி வாழ்க்கை

சுளகில் நெல்லெறிந்து குறிபார்த்துக் கூறுவோர் கட்டுவிச்சியர் ஆவர். சுளகில் நெல்லைச் சிதறிக் குறி கூறுவர். இதனை,

"............... ............. நெல்முன் நிறீஇக்
கட்டிற் கேட்கு மாயின்"

(நற். 288: 6-7)

என்பர் குளம்பனார்.

கட்டுவிச்சி தெய்வங்களை அழைத்துப் பாடுதலால் "அகவன்மகள்"[124] எனவும் அழைக்கப்பெறுவாள். "அகவன் மகள் என்றால் அழைக்கும் மகள் என்பது பொருள். அகவன்மகள் குறி சொல்லும் பொழுது தெய்வங்களையும் குறி சொல்லப்

படுவோர் குலத்தோரையும் அழைத்துப் பாடுதல் பற்றி அகவன்மகள் என்பது அவளுக்குப் பெயராயிற்று"[126] என்பர் வி. சசிவல்லி.

தலைவியின் காமநோயை அறியமாட்டாத தாயர் அவள் வேறுபாட்டின் காரணத்தை அறியும் பொருட்டு, கட்டுவிச்சியை அழைத்துக் கட்டுப்பார்ப்பர். கட்டுவிச்சி முறத்தில் நெல்லை இட்டு எண்ணி அதனால் போந்த நிமித்தங்களை வைத்து 'இவள் முருகனால் அணங்கப்பட்டாள்' என்பாள். இவ்வாடுமகள் ஆடும் அழகை,

"............. கடவுட் கிட்ட செழுங்குரல்
அறியா துண்ட மஞ்ஞை யாடுமகள்
வெறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கும்"

(குறுந். 105: 2-4)

என்பர் நக்கீரர்.

அகவன் மகளிர் வெள்ளிய முனையுடைய சிறிய கோல் வைத்திருப்பர். இதனை,

"வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்"

(குறுந். 298: 6)

என்பர் பரணர்.

அகவன் மகளிரை முதுவாய்ப் பொய்வல் பெண்டிர் என்றும் கூறுவர். இப்பெண்டிர் பிரப்பரிசியைப் பரப்பி வைத்து இது முருகனது செயலான் வந்த வருத்தம் என்பர். இதனை,

" ........... ............. ............ முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ
முருகன் ஆரணங் கென்றலின்"

(அகநா. 98: 8-10)

என விளக்குவர் வெறிபாடிய காமக்கண்ணியார்.

**(v) நீகான் வாழ்க்கை**

நாவாய் ஓட்டுவோர் நீகான் எனப்பெறுவர். இரவும் பகலும் ஓரிடத்தும் தங்காது கலங்கரை விளக்கத்தைப் பார்த்துக் கலத்தைச் செலுத்துவர்[126].

நீகான், பாயும் கயிறும் பாய்மரமும் நீங்கச் சிதையும் நிலையிலுள்ள மரக்கலத்தையும் திருத்தி ஓட்டும் திறன் படைத்தவன்[127].

நீகான் வாழ்க்கை இரவு, பகல் எந்நேரமும் கலத்தையும் கடலையும் சார்ந்து அமையும்.

**(vi) காரோடன் வாழ்க்கை**

சாணைக்கல் செய்வோர் 'காரோடன்' எனப்பெறுவர். இச்சாணைக்கல் அரக்கொடு சேர்த்துச் செய்யப்பெறும். இதனைக் கொண்டு சிறுசிறு ஆயுதங்களைக் கூர் தீட்டுவர். காரோடர் ஒவ்வோர் ஊரிலும் தெருக்கள் தோறும் சென்று கூவியழைத்துச் சாணை பிடித்துக் கொடுப்பர். இச்சாணைக் கல்லின் வலிமையை,

"சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போற் பிரியலம்"

(அகநா. 1: 5-6)

என்றும்,

"சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போல் நாவினேன்"

(அகநா. 356: 9-10)

என்றும் உவமையாகக் கூறுவர். இதன் மூலம் காரோடன் சாணைக்கல் கொண்டு தொழிலாற்றுவது தெளிவாகும்.

**(vii) கூவலர் வாழ்க்கை**

கிணறு தோண்டுவோர் கூவலர் ஆவர். வலிய பாறைகளையும் தீப்பொறி பறக்குமாறு வெட்டிக் கிணறு

தோண்டுவர். வேலைக்குச் செல்லும்பொழுது சோற்று முடியினைத் தோளில் தொங்கவிட்டுச் செல்வர்.[128]

எத்தகைய வன்னிலத்தையும் குந்தாலியால் உடைத்து விடுவர். தினமும் கூழை உணவாகக் கொள்வர்[129].

(viii) ஊர்காப்பாளர் வாழ்க்கை

ஊருக்கு இரவில் எவ்விதத் தீங்கும் நேரா வண்ணம் பாதுகாப்போர் ஊர்காப்பாளர் ஆவர். இவர்களை 'யாமங் கொள்பவர்'[130] என்பர். இரவு முழுதும் தூங்காமல் ஊரைக் காவல் காப்பர். ஒவ்வொரு யாமம் முடிந்ததும் நெடிய நாவையுடைய மணியை ஒலித்து ஊராருக்குத் தெரிவிப்பர். இதனை,

"யாமங் கொள்பவர் நெடுநா ஒண்மணி
ஒன்றெறி பாணி"

(நற். 132: 9-10)

என்பர் பெருங்கண்ணனார்.

குறிஞ்சி நிலக் காவலாளர் இரவில் ஊரை விலங்குகள் அணுகாதிருக்கும் பொருட்டுத் தொண்டகப் பறையை முழக்குவர். இதனை,

" ........... ............ தொண்டகச் சிறுபறை
பானாள் யாமத்துங் கறங்கும்
யாமங் காவல ரவியா மாறே"

(குறுந். 375: 4-6)

என்பர்.

(ix) பெருங்குளக்காவலர் வாழ்க்கை

ஒவ்வொரு ஊரிலும் மழைக்காலத்தில் கண்மாயின் கரை உடைந்துவிடாமல் பாதுகாக்கக் காவலரை அமர்த்துவர். இவர்கள் 'பெருங்குளக்காவலர்' எனப்பெறுவர்.

பெருங்குளக் காவலர் ஒரு கணமும் தூங்காமல் குளத்தைக் காப்பர். இதனை,

"..................... ..................... பானாட் கங்குல்
எறிதிரைத் திவலை தூஉஞ் சிறுகோட்டுப்
பெருங்குளங் காவலன்"

(அகநா. 252: 11-13)

என்பர். இவனை "மாரிக் குளத்துக் காப்பாளன்"[131] என்றும் கூறுவர்.

## (X) புலையர் வாழ்க்கை

புலையர் என்பது 'புலை' என்பதன் அடிப்படையாகத் தோன்றியது. இதனுடன் அன், இ, அர் என்னும் பால் விகுதிகள் சேர்ந்து முறையே புலையன், புலைத்தி, புலையர் என்னும் பெயர்கள் தோன்றின.

புலை என்பதற்குத் தமிழ் அகராதி இழிவு, அசுத்தம், தீட்டு, தீயநெறி, பொய், வியபிசாரம், ஊன், கீழ்மகன், தீ நாற்றம் எனப் பல பொருள்களைக் கூறும்[132]. புலையன் என்பதற்குக் கீழ்மகன், புரோகிதன், ஒரு சார் மலைசாதி, சண்டாளன், பாணன் எனப் பொருளுரைக்கும்[133]. புலைத்தி என்பதற்கு இழிகுலத்துப் பெண், வண்ணாத்தி எனப் பொருள் தரும்[134].

சங்க காலத்தில் சமூக மதிப்பு, பொருளாதார நிலை இவற்றில் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களைப் புலையர் என்ற பொதுச் சொல்லால் வழங்கியுள்ளனர்.

புலையரை 'இழிசினன்'[135] என்பர். வாரைச் செலுத்தும் ஊசி கொண்டு கட்டில் பின்னுவர்[136].

புலையர் தன் வலிய கை சிவக்கத் துடி அடிப்பர்[137]. புலையர் கையில் பறை அடிக்கும் கோலுடன் இருத்தலை,

"துடியெறியும் புலைய
எறிகோல் கொள்ளும் இழிசின"

(புறநா. 287: 1-2)

என்பர். இங்குத் துடியரும் புலையராகக் கருதப்பட்டுள்ளமை

தெளிவாகும். இத்துடியர் போர் மறவர்க்கு அவர்தம் தலைவரிடும் பணியைத் துடிகொட்டித் தெரிவிப்பர்[138]. போருக்குப் பூ வழங்கும் செய்தியைத் தண்ணுமை கொட்டி அறிவிப்பர். இதனை,

" ................ .............. ............... பாசறைப்
பூக்கோ ளின்றென் றறையும்"

(புறநா. 289: 8-9)

என்பர் கழாத்தலையார்.

புலையர் இடுகாட்டில் இறுதிச்சடங்கு நிகழ்த்துவர். இடுகாட்டுக்குப் பிணத்தைத் தூக்கிச் சென்ற பாடையை நிறுத்திய பின்பு, அங்கு நிகழ்த்த வேண்டிய சடங்குகளைப் புலையன் செய்வான். தருப்பைப் புல் மீது கள்ளுடன் சில சோறாகிய உணவை வைத்துப் படைப்பான். இதனை,

"வெள்ளி னிறுத்த பின்றைக் கள்ளொடு
புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி
புலைய னேவ"

(புறநா. 360: 17-19)

என்பர். இடுகாட்டில் உப்பின்றி வேக வைத்த சோற்றை இழிசினன் பலியாகக் கொடுத்தலை,

"உப்பிலாஅ வவிப்புழுக்கல்
...................... ................
இழிபிறப்பினோ னீயப்பெற்ற"

(புறநா. 363: 12-14)

என ஐயாதிச் சிறுவெண்டேரையாரும் குறிப்பிடுவர்.

துணி வெளுக்கும் வண்ணாரும் புலையராகக் கருதப்பட்டுள்ளனர். வண்ணானைக் காழியர் என்பர். இக்காழியர் துணி வெளுக்க உதவும் உவர் மண்ணைக் களர் மண் பரந்த இடத்திற்குச் சென்று கொண்டு வருவர்[139].

வண்ணாத்தியைப் புலைத்தி[140] என்பர். இவள் அழுக்கான ஆடைகளில் தோய்ந்துள்ள கஞ்சிப் பசையை

நீர்த்துறைக்கு எடுத்துச் சென்று அலசுவாள்[141]. ஆடையின் மறுக்களை நகத்தைக் கொண்டு போக்குவாள். இவள் கஞ்சிப் பசையை நெடுநேரம் பிசைந்து ஆடைகளுக்கு ஊட்டுவதால் விரல்கள் காய்ந்து கஞ்சிப்பசையுடன் காணப்படும். இவளது சிறுவரும் இவளுக்கு உதவி செய்வர். உவர்மண் பிடித்த ஆடையைத் தலையில் சுமந்து வருவர்[142].

புலைத்தி ஊரிலுள்ளோர் ஆடைகளைத் துறைக்கு எடுத்துச் சென்று வெளுப்பாள். இதனை,

" ................ ............. ............... ஊரவர்
ஆடைகொண் டொலிக்குநின் புலைத்தி"

(கலித். 72: 13-14)

என்பர். இவள் களர் நிலத்துண்டாகிய கூவலைத் தோண்டி நாள்தோறும் துணிகளைத் துவைப்பாள். இதனை,

"களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
புலைத்தி கழீஇய"

(புறநா. 311: 1-2)

என்பர். புலைத்தி ஊரவர்க்கு நாள்தோறும் துணி வெளுத்துக் கொடுத்தல் அன்றாட வாழ்க்கையாக அமைதலை 'நாளும்' என்பது விளக்கும்.

புலைத்தி நீர்த்துறையில் கஞ்சிப் பசையில் தோய்த்தெடுத்து முதல் தப்பலைத் தப்பிவிட்டுக் குளிர்ந்த நீரில் முறுக்குப் பிரியாத ஆடையைப் போடுவாள். அவ்வாடைப் பகன்றை மலர் போலக் காட்சியளிக்கும்[143].

புலைத்தி மனைதோறும் அழுக்குற்ற ஆடைகளை வெளுத்துக் கொடுத்தலால் அவர்கள் புலைத்திக்கு வேண்டுவன கொடுப்பர். அதனால் புலைத்தி வாழ்க்கையில் உணவுக்கும் உடைக்கும் என்றும் வறுமை ஏற்படாது. இதனை,

"உடைதேர் பான்மையிற் பெருங்கை தூவா
வறனில் புலைத்தி"

(நற். 90: 2-3)

என்பர். அவள் பகற்பொழுதில் துணி வெளுத்தலை 'எல்லி தோய்த்த'[144] என்பதில் புலப்படுத்துவர். புலைத்தி தெய்வமேறப்பட்டு ஆடுதலும் உண்டு. இதனை,

"முருகுமெய்ப் பட்ட புலைத்தி"

(புறநா. 259: 5)

என்பர் கோடை பாடிய பெரும்பூதனார்.

புலைத்தி தலைவனுக்காகப் பரத்தையரிடம் தூது செல்வதும் உண்டு[145]. இவள் பனங்குருத்து கொண்டு புட்டில் முடைந்து விலைக்கு விற்பாள். இதனை,

"........... புலைத்தி விலையாகச் செய்ததோர்
போழிற் புனைந்த வரிப்புட்டில்"

(கலித். 117: 7-8)

என்பர். இவற்றால் சங்ககாலச் சமுதாயத்தில் தாழ்நிலையினர் புலையராகக் கருதப்பட்டமை தெளிவாகும்.

நிறைவுரை

அந்தணர் நூல், கரகம், முக்கோல், மணை ஆகியவற்றைப் பயன்படுத்துதற்குரியர். இவர்கள் அரசராகவும் இருக்கத் தகுதியுடையோர் என்பர் தொல்காப்பியர். அந்தணர் ஓதல், ஓதுவித்தல்., வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுவகைத் தொழில்களை நடைமுறையாகக் கொள்வர். விழாக்கள் நிகழ்த்தி வைப்பர். இவர்களுள் ஒரு சாரார் ஈமச்சடங்கும் நிகழ்த்துவர். அந்தணர் மாலையில் அந்திக்கடன் செய்வர். இவர்களுள் துறவு மேற்கொள்வோரும் உண்டு.

பார்ப்பார் தலைமக்கள் அகவாழ்வில் பெரிதும் பங்கு கொள்வர். இவர்கள் அரசரும் பணிந்து போற்றும் பண்பாளர். தூதுவராகச் செல்வதில் திறம்படைத்தோர். வளை அறுத்தலையும் நடைமுறையாகக் கொள்வர். பார்ப்பாருள்ளும் துறவு மேற்கொள்வர்.

தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் உணர்த்தும் அந்தணர், பார்ப்பார் பற்றிய செய்திகளைக் கொண்டு அந்தணர், ஆரியர் என்றும் பார்ப்பார், தமிழர் என்றும் முடிவு செய்தல் பொருந்துவதாகும்.

துறவியருள் தாபதர் அருவியில் நீராடிச் செந்தீ வேட்டு, சடையைப் புலர்த்தித் தாளியை உணவாகக் கொள்வர்.

நோன்பியர் ஓரிடத்தே இருந்து கொடுப்பார் தரும் உணவைக் கையே கலனாக ஏற்று உண்பர்.

முனிவர் மரவுரி தரித்து நோன்பு இயற்றுவர்.

வணிகர் வெளியூர் செல்லும் பொழுது நீவி என்னும் பையில் நிதியை வைத்து இடுப்பில் சுற்றிச் செல்வர். பொருட்களைத் துலாக்கோல் கொண்டு அளப்பர். விலைபொருளுக்கு ஈடாக நெல் பெறுவர்.

பொன் வணிகர் பகர்நர் எனப்பெறுவர். கூல வணிகரைக் கூலம் பகர்நர் என்றும் பூவிற்போரை வட்டியர் விலைஞர் என்றும் கூறுவர். பூவிற்கும் மகளிர் பூவிலைப் பெண்டு எனப்பெறுவர். இவர்கள் ஒவ்வொரு மனைக்கும் சென்று பூ விற்பர்.

அப்ப வணிகர் கூவியர் எனப்பெறுவர். இரவிலும் தேனடை, மோதகம், பாகு கலந்த மாவு ஆகியவற்றை விற்பர்.

ஆட்டு வணிகர் பாசவர் எனப்பெறுவர். இவர்கள் இறைச்சியையும் விற்பர்.

உப்பு வணிகர் உமணர் ஆவர். நெய்தல் நிலப் பரதவரிடம் உப்பைக் கொள்முதல் செய்வர். அதனை ஊர் ஊராகக் கொண்டு சென்று விலை கூவி விற்பர். இத் தொழிலில் குடும்பத்தில் உள்ள அனைவரும் ஈடுபடுவர். உப்புப் பொதிகளை எருது பூட்டிய வண்டியில் கொண்டு செல்வர்.

கைவினைஞருள் மரத்தொழில் செய்வோர் தச்சர் எனப்பெறுவர். வண்டி, தேர், சகடம், கட்டில் போன்ற மரத்தாலான பொருட்களைத் திறம்படச் செய்வர். இவை

இவர்களது தொழில் மேம்பாட்டை நன்கு உணர்த்தும்.

இரும்புக் கருவிகள் மற்றும் பொருட்கள் செய்வோர் கொல்லர் ஆவர். இரும்பைக் காய்ச்சித் தேவையான கருவிகளைச் செய்வர். கொல்லர் பணிக்களரி கொற்றுறைக் குற்றில், விசைத்தெறி கூடம் எனப்பெறும். இரும்பைப் பழுக்க வைக்கத் துருத்தியைப் பயன்படுத்துவர். உலைக்கல், சம்மட்டி, முறிகொடிறு ஆகியவற்றைத் துணைக் கருவிகளாகக் கொள்வர். இரும்பின் வெம்மையைக் குறைக்க மட்கோய் என்னும் கலத்தில் நீர் வைத்திருப்பர். கருவிகளை அரம் கொண்டு கூர் தீட்டுவர். கொல்லர் ஒவ்வோர் ஊருக்கும் இல்லாமல் ஏழு ஊருக்கு ஒரு குடும்பமாக வாழ்வர்.

பொன், வெள்ளி, செம்புப் பொருட்கள் செய்வோர் கம்மியர் எனப்பெறுவர். பொன் வேலை செய்வோர் கட்டளைக்கல், பட்டடைக்கல் ஆகியவற்றைப் பயன்படுத்துவர். கூத்தியலால் பட்டடைக்கல்லில் மெதுவாகத் தட்டி அணிகலன் செய்வர். பொன், வெள்ளி ஆகியவற்றை உருக்கி வார்ப்பதற்குப் பொறியைப் பயன்படுத்துவர். இப்பொறி களிமண்ணால் செய்யப்பெறும். கம்மியர் முத்து அணிகலன்களையும் செம்புப் பானைகளையும் செய்வர்.

துணி நெய்வோர் நெசவாளர் ஆவர். பருத்தி, பட்டாலான துணிகளை நெய்வர்.

மட்பாண்டம் செய்வோர் குயவர் எனப்பெறுவர். இவர்களைக் கலஞ்செய்கோ என்பர். இத்தொழிலில் சிறுவரும் ஈடுபடுவர். இதற்கு வனைகலத் திகிரியைப் பயன்படுத்துவர். மட்கலங்கள் வனைந்து சூளையில் வைத்துச் சுடுவர். இறந்தவர்களை வைத்துப் புதைக்கும் தாழி செய்வர். ஊர்த் திருவிழாவை மக்களுக்கு அறிவிப்பர்.

அறிவர் ஓரிடத்தில் நில்லாது ஒரு வீட்டில் இடும் பிச்சையைப் பெற்று வாழ்வர். முகூர்த்தம் நடத்துதற்குரிய நன்னாளைக் குறித்துக் கொடுப்பர்.

நாழிகைக் கணக்கர் குறுநீர்க்கன்னல் கொண்டு

நாழிகையைக் கணக்கிட்டுக் கூறுவர். இரு கோல்களை நட்டு அந்நிழலின் தன்மை கொண்டும் நாழிகையைக் கணக்கிடுவர்.

மருத்துவர் காயங்களுக்கு மருந்திட்டும் தையலிட்டும் குணப்படுத்துவர்.

கட்டு கொண்டு குறி கூறுபவள் கட்டுவிச்சி எனப் பெறுவாள். இவளை அகவன் மகள் என்றும் கூறுவர். வெள்ளிய முனையுடைய சிறிய கோல் வைத்திருப்பாள். சுளகில் நெல்லைப் பரப்பிக் குறி கூறுவாள்.

நாவாய் ஓட்டுபவன் நீகான் எனப்பெறுவான். இரவு, பகல் எந்நேரமும் கலங்கரை விளக்கைப் பார்த்துக் கொண்டு கலம் செலுத்துவான்.

இரும்புக் கருவிகளுக்குச் சாணை பிடிப்போன் காரோடன் ஆவான். இவன் வைத்திருக்கும் சாணைக்கல் அரக்கொடு சேர்த்துச் செய்யப்பெறும். இவன் ஊர் ஊராகச் சென்று சாணை பிடித்துக் கொடுப்பான்.

வறண்ட பாலையில் கிணறு தோண்டுவோர் கூவலர் எனப்பெறுவர். வலிய பாறைகளையும் தீப்பொறி பறக்குமாறு தோண்டுவர். வேலைக்குச் செல்லும்பொழுது சோற்றுமுடியைத் தோளில் தொங்கவிட்டுச் செல்வர்.

இரவில் ஊருக்கு எவ்விதத் தீங்கும் நேரா வண்ணம் காப்போர் யாமங்கொள்பவர் எனப்பெறுவர். இரவில் ஒவ்வொரு யாமம் முடிந்ததும் அதனை மணி ஒலித்து ஊராருக்குத் தெரிவிப்பர்.

மழைக்காலத்தில் கண்மாயின் கரையைக் காப்போர் பெருங்குளக்காவலர் எனப்பெறுவர்.

துடி, பறை, தண்ணுமை கொட்டுவோர் புலையர் ஆவர். ஊசி கொண்டு கட்டில் பின்னுவர். போர்ச் செய்திகளை வீரர்களுக்குத் துடி கொட்டித் தெரிவிப்பர். இடுகாட்டில் இறுதிச் சடங்கு செய்வர்.

துணி வெளுக்கும் வண்ணார் காழியர் எனப்

பெறுவர். வண்ணாத்தி புலைத்தி எனப் பெறுவாள். இவள் வீடுதோறும் சென்று அழுக்குத் துணிகளை எடுத்துத் துறைக்குக் கொண்டு சென்று துவைத்துக் கொடுப்பாள்.

புலைத்தி தெய்வமேற ஆடுதலும் உண்டு. தலைவனுக்காகப் பரத்தையிடம் தூது செல்வாள். பனங் குருத்து கொண்டு புட்டில் முடைவாள்.

## அடிக்குறிப்புகள்

1. தொல். பொருள். மர. நூ.71.

2. .......(1959), *தொல்காப்பியம் பொருளதிகாரம் பேராசிரியர் உரை*, மறுபதிப்பு, சென்னை-1, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.464.

3. தொல். பொருள். மர. நூ. 75.

4. .....(1956), *தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரை*, மறுபதிப்பு, சென்னை-1, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.570.

5. .....(1959), *தொல்காப்பியம் பொருளதிகாரம் பேராசிரியர் உரை*, மேலது, ப.470.

6. தொல். பொருள். கற். நூ. 5: 15.

7. ....(1956), *தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரை*, மேலது, ப.257.

8. எஸ். கனகசபாபதி பிள்ளை (ப.ஆ), (1934), *தொல்காப்பியப் பொருளதிகார முதற்பாகம் (நச்சினார்க்கினியம்)*, சென்னை, சாது அச்சுக்கூடம் பக். 576-577.

9. மதுரைக். 468-473.

10. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ),(1962), *பத்துப்பாட்டு மூலமும் உரையும் (முதற்பகுதி), திருமுருகாற்றுப்படை*, மறுபதிப்பு, சென்னை-1, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.47.

11. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), (1962), *பத்துப்பாட்டு மூலமும் உரையும்(முதற்பகுதி), பெரும்பாணாற்றுப்படை*, மேலது, ப.89.

12. பெரும்பாண். 314-316.

13. புறநா. 397: 19-21.

14. பதிற். 64: 3-6.

15. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை(உ.ஆ), (1967), *புறநானூறு முதற்பகுதி*, மறுபதிப்பு, சென்னை-1, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.6.

16. பெரும்பாண். 302-310.

17. தொல். பொருள். மர. நூ.4.

18. N.Subraminan,(1966), Sangam polity, Newyork,Asia Publishing House,p.264.

19. சி. இலக்குவனார், (1961), *தொல்காப்பிய ஆராய்ச்சி*, புதுக்கோட்டை, வள்ளுவர் பதிப்பகம், ப.188.

20. தொல். பொருள். செய். நூ. 181.

21. ....(1956),*தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரை*, மேலது, ப.530.

22. .....(1959),*தொல்காப்பியம் பொருளதிகாரம் பேராசிரியர் உரை*, மேலது, ப.400.

23. தொல். பொருள். செய். நூ. 182.

24. தொல். பொருள். கற். நூ.36.

25. மேலது, நூ. 52.

26. தொல். பொருள். செய். நூ.189.

27. தொல். பொருள். புறத். நூ.16.

28. .....(1956),*தொல்காப்பியம் பொருளதிகார இளம்பூரணர் உரை*, மேலது, ப.110.

29. சாமி. சிதம்பரனார், (1956), *தொல்காப்பியத் தமிழர்*, சென்னை-5, ஸ்டார் பிரசுரம் (வி.உ)., ப.87.

30. வெ.பெரி.பழ. மு. காசிவிசுவநாதன் செட்டியார்,(வெ.ஆ), (1947), *அகநானூறு களிற்றியானை நிரை*, சென்னை-1, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.60.

31. தொ. பரமசிவன்,(1995),*தெய்வங்களும் சமூக மரபுகளும்*, சென்னை-98, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., ப.84.

32. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (உ. ஆ), (1966), **நற்றிணை மூலமும் விளக்கவுரையும்**, சென்னை-17, அருணா பப்ளிகேஷன்ஸ், ப.302.

33. எஸ். கனகசபாபதிபிள்ளை (ப.ஆ), (1934), ***தொல்காப்பியப் பொருளதிகார முதற்பாகம் (நச்சினார்க்கினியம்)***, மேலது, ப.682.

34. உ.வே. சாமிநாதையர் (ப.ஆ),(1995), **குறுந்தொகை**, மூன்றாம் பதிப்பு, சென்னை, கபீர் அச்சுக்கூடம் ப.341.

35. ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ),(1966), **நற்றிணை மூலமும் விளக்கவுரையும்**,மேலது,ப.1239.

36. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ),(1962),மறுபதிப்பு, **புறநானூறு இரண்டாம்பகுதி**,சென்னை-1,சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,ப.341.

37. சாமி. சிதம்பரனார், (1956), **தொல்காப்பியத் தமிழர்**, மேலது, ப.91.

38. சி.இலக்குவனர், (1961), ***தொல்காப்பிய ஆராய்ச்சி***, மேலது, ப.188.

39. .....(1956),***தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரை***, மேலது, ப.110.

40. எஸ். கனகசபாபதி பிள்ளை (ப.ஆ.),(1934), ***தொல்காப்பியப் பொருளதிகார முதற்பாகம் (நச்சினார்க்கினியம்)***, மேலது, ப.268.

41. மேலது, ப.273.

42. .....(1956),***தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரை***, மேலது, ப.257.

43. எஸ். கனகசபாபதி பிள்ளை (ப.ஆ.),(1934), ***தொல்காப்பியப் பொருளதிகார முதற்பாகம் (நச்சினார்க்கினியம்)***, மேலது, பக். 576-577.

44. ஞா.தேவநேசன், (1940), **ஒப்பியன் மொழிநூல், முதன் மடலம், திராவிடம் (முதற்பாகம்)**,(பிற விவரங்கள் இல்லை) ப.35.

45. தொல்.பொருள். புறத். நூ.16:6.

46. .....(1956), **தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரையுடன்,** மேலது,ப.144.

47. .....(1955),**தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணை யியல் புறத்திணையியல் நச்சினார்க்கினியர் உரை,** மறுபதிப்பு,சென்னை-1, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,ப.217.

48. மேலது,ப.217.

49. தொல். பொருள். புறத். நூ. 19: 29.

50. .....1956),**தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரையுடன்,** மேலது,ப.133.

51. .....(1955),**தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணை யியல் புறத்திணையியல் நச்சினார்க்கினியர் உரை,** மேலது, ப.248.

52. புறநா. 251 : 4-7, பெரும்பாண். 498-499.

53. புறநா. 252 : 1-3.

54. ஔவை. சு.துரைசாமிபிள்ளை (உ.ஆ.),(1966),**நற்றிணை மூலமும் விளக்கவுரையும்,** சென்னை-17, அருணா பப்ளிகேஷன்ஸ், ப.549.

55. ஐங்.271 : 1-2

56. அகநா. 313 : 10-11

57. அகநா. 349 : 3-4, புறநா. 6 : 9, கலித். 42:14.

58. மலைபடு. 413.

59. பதிற். 13 : 23.

60. அகநா. 391 : 3-4.

61. புறநா. 293 : 6.

62. கலித். 66 : 1.

63. பெரும்பாண். 377-378.

64. மதுரைக் 624- 627.

65. பதிற்.21 : 9.

66. பதிற். 67 : 15-17.

67 அகநா. 140 : 5

68. அகநா. 17 : 13

69. அகநா. 191 : 1-4

70. அகநா. 257 : 17

71. சிறுபாண். 60.

72. நற். 138 : 2.

73. நற். 331 : 1-3.

74. நற். 254 : 6.

75. புறநா. 102 : 4-5.

76. அகநா. 119 : 8

77. புறநா. 116 :8; அகநா.30:6, 159:2, 173:9, 329: 6; சிறுபாண். 55.

78. அகநா. 337 : 6

79. குறுந். 124 : 2

80. நற்.4:7-8,183:1-2; புறநா. 386: 16; பெரும்பாண்.64-65; பட்டினப்.29

81. அகநா. 169 : 3-7

82. அகநா. 257 : 16-17

83. புறநா. 307 : 7-9.

84. அகநா. 159 : 1-4.

85. வி. சசிவல்லி,(1990), பண்டைத் தமிழர் தொழில்கள், சென்னை, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,ப.82.

86. சிறுபாண். 257.

87. தமிழ் அகராதி, ப.1156.

88. அகநா.72:1-6

89. நற். 13: 5-7.

90. அகநா. 55 : 7

91. அகநா. 96 : 6-7

92. கலித். 54 : 11.

93. அகநா. 81 : 1-5.

94. அகநா. 224 : 2-5.

95. புறநா. 21 : 7-8.

96. நற். 133 : 9-10.

97. புறநா. 95 : 5

98. புறநா. 170 : 16.

99. குறுந். 155 : 4.

100. பெரும்பாண். 207.

101. புறநா. 36 : 6-7

102. புறநா. 353 : 1.

103. நற். 86 : 5.

104. குறுந். 192 :4; அகநா. 178 :11; ஐங். 215 :1, 263 :2; பெரும்பாண்.220.

105. அகநா.142 :24

106. *கலைக்களஞ்சியம்*, தொ.4, (1955), சென்னை, தமிழ்வளர்ச்சிக்கழகம்.ப.215

107. நற். 274 : 4.

108. வி.சசிவல்லி,(1990),*பண்டைத்தமிழர் தொழில்கள்*, மேலது,ப.78.

109. *தமிழ் அகராதி*, ப.1008.

110. புறநா. 228 : 1 & 4, 256 :1 & 7.

111. புறநா. 32 :8-9.

112. மலைபடு. 474.

113. அகநா. 308 :6

114. புறநா. 238:1.

115. தொல். பொருள். புறத். நூ. 16: 4-5.

116. ......(1956), **தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரையுடன்**, மேலது, ப.114.

117. ......(1955), **தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் புறத்திணையியல் நச்சினார்க்கினியர் உரை**, மேலது, ப.216.

118. தொல். பொருள். கற். நூ.52: 3.

119. தொல். பொருள். செய். நூ. 182: 2.

120. வெ. பெரி. பழ. மு. காசிவிசுவநாதன் செட்டியார் (வெ.ஆ)., (1962), **கலித்தொகை**, ஆறாம்பதிப்பு, சென்னை-1. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப.113.

121. அகநா. 43: 6.

122. முல்லைப். 55.

123. முல்லைப். 58.

124. குறுந். 23 : 1 & 2.

125. வி. சசிவல்லி, (1990), **பண்டைத்தமிழர் தொழில்கள்**, மேலது, ப.303.

126. அகநா. 255: 1-5.

127. பரி. 10: 53-55.

128. அகநா. 79: 1-3.

129. அகநா. 21:21-22.

130. புறநா. 37: 9.

131. ஐங். 206: 2.

132. **தமிழ் அகராதி**, ப.2790.

133. மேலது, ப.2791.

134. மேலது, ப.2791.

135. புறநா. 82: 3.

136. புறநா. 82: 3-4.

137. புறநா. 170: 5, நற். 77: 1-2.

138. புறநா. 269: 6.

139. அகநா. 89: 7-9.

140. அகநா. 34: 11, 387: 6.

141. அகநா. 34: 11-12.

142. அகநா. 387: 5-7.

143. குறுந். 330: 1-3.

144. நற். 90: 3.

145. கலித். 72: 13-14.

# முடிவுரை

1. தொல்காப்பியர் குறிப்பிடும் 'உலகியல் வழக்கு' என்னும் நெறி, நடைமுறை வாழ்க்கையைக் குறிப்பதாகும். சங்க இலக்கியங்கள் அக்கால மக்கள் நடைமுறை வாழ்க்கையை மையமாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளன.

2. ஒரு மனிதன் காலையில் துயில் எழுவது முதல் இரவில் துயிலச் செல்வது வரையிலான வாழ்க்கை நிகழ்வுகள் நடைமுறை வாழ்க்கையில் அடங்கும். இந்நடைமுறை வாழ்க்கை ஒவ்வொரு நாட்டிலும் மக்கள் வாழும் பகுதிகளின் தன்மைகளுக்கேற்ப மாறுபடுகிறது. ஒரு நாட்டின் நிலப்பாகுபாடு, குலப் பாகுபாடு, பொருளாதார நிலை, தொழிற்பிரிவுகள் என்பன மக்கள் நடைமுறை வாழ்க்கையை வேறுபடுத்தும் காரணிகளாகும். இத்தகைய வேறுபட்ட நடைமுறை வாழ்க்கை சங்க இலக்கியங்களில் தெளிவாகப் பாடப்பட்டுள்ளது.

3. தமிழகத்தின் முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் ஆகிய நிலங்களில் வாழும் ஒவ்வொரு நில மக்களும் தத்தம் நில இயல்பிற்கேற்ப இயற்கையோடு இயைந்த வாழ்க்கை முறைகளை அமைத்துக் கொண்டுள்ளனர்.

4. முல்லை நில மக்கள் ஆநிரை ஓம்பலையும், குறிஞ்சி நில மக்கள் தினை விளைவித்தலையும், மருத நில மக்கள் உழவையும், நெய்தல் நில மக்கள் மீன் பிடித்தலையும், பாலை நில மக்கள் ஆறலைத்தலையும் நடைமுறையாகக் கொண்டுள்ளனர்.

5. நானில மக்கள் உணவு தேடுதல், உணவு விளைவித்தல் ஆகியவற்றில் வாழ்க்கையின் பெரும்பகுதி ஈடுபட்டுள்ளனர். இவர்கள் தத்தம் தேவைக்கு மட்டுமே பொருட்களைத் தேடுகின்றனர். அளவுக்கு அதிகமாகக் கிடைப்பனவற்றைப் பகிர்ந்து கொள்ளும் மனப்பக்குவம் கொண்டவர்களாக உள்ளனர்.

6. நானில மக்கள் பொருளை அளவுக்கு அதிகமாகச் சேர்க்க வேண்டும் என்ற ஆசை இல்லாமல் வாழ்க்கைத் தேவைக்கு மட்டும் உழைப்பவர்களாக உள்ளனர்.

7. நானில மக்கள் இரவு, பகல் பாராது உழைக்கின்றனர். இருபாலாரும் இணைந்து செயலாற்றுதல் இயல்பாக உள்ளது.

8. நானில மக்களுள் பாலை நில மக்கள் வறுமையில் துன்புறுபவராக உள்ளனர்.

9. நானில மக்கள் தத்தம் தேவைகளைப் பண்டமாற்றின் மூலம் நிறைவேற்றிக் கொண்டுள்ளனர். ஒரு நிலத்தில் கிடைக்கும் பொருளை அடுத்த நிலத்தில் கொடுத்து அங்குள்ள பொருளைப் பெறுவது இயல்பாக உள்ளது.

10. அரசர்கள் விடியற்காலையில் சூதர் முதலானோர் துயில் எழுப்ப எழுகின்றனர். தினமும் தத்தம் அரசவையில் கூடி முறை வழங்குதல், திறை பெறுதல் போன்றவற்றைச் செய்கின்றனர். தினமும் நாண்மகிழிருக்கையில் பாணர் முதலான கலைஞர்களுடன் மகிழ்கின்றனர். தன்னை நாடி வரும் பரிசிலர்களையும் இரவலர்களையும் அன்போடு வரவேற்று விருந்தோம்பிப் பரிசில் நல்கும் பண்பாடுடையவர்களாய்த் திகழ்கின்றனர். அரசியர் வாழ்க்கையை விரிவாக அறிய இயலவில்லை.

11. பாணர், பொருநர், கூத்தர், விறலி, பாடினி ஆகிய கலைஞர் யாவரும் ஓரிடத்தில் நிலைத்து வாழாது தம்மை ஆதரிக்கும் புரவலரை நாடிச் செல்லும் நாடோடி வாழ்க்கை உடையவராக உள்ளனர். இக்கலைஞர்கள் பொதுமக்கள் மத்தியில் நிகழ்ச்சி நடத்துதலை விட அரசர்கள் முன்னிலையில் நிகழ்ச்சி நடத்துதலையே நோக்கமாகக் கொண்டுள்ளனர். அரசர்கள் ஆதரிக்காத நிலையில் இக்கலைஞர்கள் வாழ்க்கை வறுமை உடையதாக உள்ளது. இவர்கள் தனித்தனிக் குழுவாகச் செயல்பட்டுள்ளனர்.

12. கலைஞர்களில் சிலர் பரத்தையிடம் தலைமகனைக் கூட்டுவிப்பவர்களாக உள்ளனர். ஓய்வு நேரங்களில் மீன் பிடித்து, பனைப் பொருட்கள் செய்து வாழ்ந்துள்ளனர்.

13. வினைஞர்களுள் அந்தணர் சமுதாயத்தில் உயர்ந்த மதிப்புடையவர்களாக உள்ளனர். ஓதல், ஓதுவித்தல்,

வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல், விழாக்கள் நடத்துதல், ஈமச்சடங்கு நிகழ்த்துதல் ஆகியன இவர்களது தொழில்களாகும். அந்திக்கடன் செய்தல் இவர்கள் நடைமுறை வாழ்க்கையில் குறிப்பிடத்தக்கதாக உள்ளது.

14. பார்ப்பார் அரசுத் தூதராகச் செயலாற்றுதலை நடைமுறையாகக் கொண்டுள்ளனர்.

15. துறவியர், தாபதர், நோன்பியர், முனிவர் ஆகியோரின் நடைமுறை வாழ்க்கை சமுதாய உறவிலிருந்து விலகியதாக உள்ளது.

16. வணிகர்களுள் உமணர் நடைமுறை வாழ்க்கை மட்டும் விரிவாகப் பாடப்பட்டுள்ளது.

17. தச்சர், கொல்லர், கம்மியர், நெசவாளர், குயவர் ஆகிய கைவினைஞர்களுள் கொல்லர், குயவர் ஆகியோரின் பயன்பாடு அதிகமாக உள்ளது. இரும்புக் கருவிகளின் தேவையும் மட்பாண்டப் பொருட்களின் இன்றியமையாமையும் இதற்குக் காரணமாகும்.

18. கொல்லர் ஒவ்வொரு ஊரிலும் இல்லாது ஏழு ஊருக்கு ஒரு இடத்தில் கொற்றுறை அமைத்துள்ளனர்.

19. அறிவர், நாழிகைக்கணக்கர், மருத்துவர், கட்டுவிச்சி, நீகான், காரோடன், கூவலர், ஊர்காப்பாளர், பெருங்குளக் காவலர் ஆகியோர் நடைமுறை வாழ்க்கையின் சிறுசிறு நிகழ்வுகளே தெரிய வருகின்றன.

20. புலையர் சமுதாயத்தில் மிகத் தாழ்ந்த நிலையில் வாழ்ந்துள்ளனர். துடி அடித்தல், தண்ணுமை கொட்டுதல், இடுகாட்டில் இறுதிச் சடங்கு நிகழ்த்தல் என்பன இவர்களது நடைமுறை வாழ்க்கையாக உள்ளது.

21. துணி வெளுக்கும் வண்ணாத்தி புலைத்தி எனப்பட்டுள்ளாள். இவள் ஊரில் உள்ளவர்களது அழுக்குத் துணிகளை வெளுத்துக் கொடுத்து, அதற்கு ஊரார் கொடுக்கும் பொருளைக் கொண்டு வாழ்க்கை நடத்தியுள்ளாள்.

22. பொதுவாக, சங்க காலத் தமிழக மக்களின் நடைமுறை வாழ்க்கை அமைதியாக உள்ளது. மக்களிடையே பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் இருப்பினும் அவர்கள் போட்டி, பொறாமையின்றித் தத்தம் இயல்பிற்கேற்ப வாழ்ந்துள்ளனர். மக்களுக்குள் எவ்வித முரண்பாடுகளையும் காண இயலவில்லை. அனைவரும் அன்புடனும் சகோதரப் பண்புடனும் பகுத்துண்டு வாழும் இயல்புடனும் வாழ்ந்துள்ளனர். மக்களிடையே சாதி சமயப் பூசல்கள் இல்லை. சங்க கால மக்கள் அறநெறிப்பட்ட-பண்பட்ட வாழ்க்கையினராகத் திகழ்ந்துள்ளனர். இச்சங்க கால மக்கள்தம் நடைமுறை வாழ்க்கை, பிற்காலத்தார்க்கு எடுத்துக் காட்டாக அமையும் சிறப்புடையது.

## துணைநூற் பட்டியல்

*முதன்மை நூல்கள்*


1. காசி விசுவநாதன் செட்டியார். வெ.பெரி.பழ.மு. (வெ.ஆ), **அகநானூறு களிற்றியானை நிரை,** திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1, 1947.
2. மேற்படி **அகநானூறு மணிமிடை பவளம்,** திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1, 1949.
3. மேற்படி **அகநானூறு நித்திலக் கோவை,** மறுபதிப்பு, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புகழகம், சென்னை - 1, 1957.
4. மேற்படி **கலித்தொகை** ஆறாம்பதிப்பு, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1, 1962.
5. சாமிநாதையர். உ.வே. (உ.ஆ.) **குறுந்தொகை மூலமும் உரையும்,** மூன்றாம் பதிப்பு, கபீர் அச்சுக் கூடம், சென்னை, 1955.
6. மேற்படி (ப.ஆ) **புறநானூறு மூலமும் உரையும்,** ஏழாம் பதிப்பு, உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை -41, 1974.
7. மேற்படி (ப.ஆ) **பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்,** ஏழாம் பதிப்பு, உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை -41, 1974.

8. சோமசுந்தரனார் பொ.வே. (உ.ஆ.) — **பத்துப்பாட்டு மூலமும் உரையும் முதற்பகுதி,**
**திருமுருகாற்றுப்படை (1962),**
**பொருநராற்றுப்படை (1961),**
***சிறுபாணாற்றுப்படை* (1960),**
**பெரும்பாணாற்றுப்படை (1962),**
**முல்லைப்பாட்டு (1962),**
திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 1.

9. மேற்படி — **பத்துப்பாட்டு மூலமும் உரையும் (இரண்டாம் பகுதி),**
***மதுரைக்காஞ்சி* (1956),**
**நெடுநல்வாடை (1975),**
***குறிஞ்சிப்பாட்டு* (1956),**
**பட்டினப்பாலை (1967),**
***மலைபடுகடாம்* (1956),**
திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 1.

10. மேற்படி — ***ஐங்குறுநூறு,***
மறுபதிப்பு,
திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 1,
1966.

11. மேற்படி — ***பரிபாடல்,***
மறுபதிப்பு,
திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை -1,
1969.

12. துரைசாமிப்பிள்ளை. ஔவை. சு. (உ.ஆ) — **புறநானூறு 1- 200 பாட்டுக்கள்**
மறுபதிப்பு,
திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 1,
1967.

13. மேற்படி — **புறநானூறு 201-400 பாட்டுக்கள்**
மறுபதிப்பு,
திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 1,
1962.

14. மேற்படி
**நற்றிணை மூலமும் விளக்கவுரையும்
1 முதல் 200 வரை,**
அருணா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை - 17,
1966.

15. மேற்படி
**நற்றிணை மூலமும் விளக்கவுரையும்
(201 முதல் 400 வரை),**
அருணா பப்ளிக்கேஷன்ஸ்,
சென்னை - 1,1968.

16. மேற்படி
**பதிற்றுப்பத்து மூலமும்
விளக்கவுரையும்,**
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 1,
1968.

17. நாராயணசாமி ஐயர். அ. (உ.ஆ)
**நற்றிணை நானூறு,** மறுபதிப்பு,
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 1,
1952.

18. வேங்கடராமன். எச். (ப.ஆ)
**நற்றிணை மூலமும் உரையும்,**
உ.வே.சா. நிலையம்,
சென்னை - 90,
1989.

## துணைமை நூல்கள்

### I. இலக்கண நூல்கள்

1. கனகசபாபதி பிள்ளை. எஸ். (ப.ஆ)
**தொல்காப்பியம் பொருளதிகார
முதற்பாகம் (நச்சினார்க்கினியம்),**
சாது அச்சுக் கூடம்,
சென்னை,
1934.

2. குழந்தை (உ.ஆ)
**தொல்காப்பியம் பொருளதிகாரம்
முதற்பகுதி,**
வேலா பதிப்பகம், (வெளியீடு),
ஈரோடு -1,
1968.

3. சுந்தரமூர்த்தி. கு. (ப.ஆ)
**தொல்காப்பியம் பொருளதிகாரம்
(அகத்திணையியல்,புறத்திணையியல்)**
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,
அண்ணாமலை நகர்,
1986.

4. சுப்பிரமணியன். ச.வே. (ப.ஆ) — **இலக்கணத்தொகை யாப்பு பாட்டியல்,** தமிழ்ப் பதிப்பகம், சென்னை -20, 1978.

5. முத்துச்சண்முகம், வீராசாமி. தா.வே. (ப.ஆ) — **தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் உரைவளம்,** மதுரை காமராசர் பல்கலைக் கழகம், பல்கலை நகர், 1975.

6. வெள்ளைவாரணன். க. — **தொல்காப்பியம் புறத்திணையியல் உரைவளம்,** மதுரை காமராசர் பல்கலைக் கழகம், பல்கலை நகர், 1983.

7. ........ — **தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரையுடன்,** திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1, 1953 , 1956.

8. ......... — **தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல், புறத்திணையியல், நச்சினார்க்கினியர் உரை,** இரண்டாம் பதிப்பு, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை -1, 1955.

9. .......... — **தொல்காப்பியம் பொருளதிகாரம் பேராசிரியர் உரை,** மறுபதிப்பு, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1, 1959.

II. *திறனாய்வு நூல்கள்*

10. ஆறுமுகம். அ. — ***சங்க இலக்கியத்தில் குடும்பம் உடைமை, அரசு.,*** பாவேந்தர் பதிப்பகம், திருமழபாடி, 1994.

11. இராசமாணிக்கனார். மா. — **பத்துப்பாட்டு ஆராய்ச்சி,**
சென்னைப் பல்கலைக் கழகம்,
1970.

12. இராமலிங்கம். அரங்க. — **சங்க இலக்கியத்தில் வேந்தர்,**
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை,
1987.

13. இலக்குவனார். சி. — **தொல்காப்பிய ஆராய்ச்சி,**
வள்ளுவர் பதிப்பகம்,
புதுக்கோட்டை,
1961.

14. மேற்படி — **இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் (சங்ககாலம்),**
வள்ளுவர் பதிப்பகம்,
புதுக்கோட்டை,
1962.

15. இளங்குமரன். இரா. — **பாணர்,**
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம், 1987.

16. கோதண்டராமன். பி. — **இலக்கியமும் விமரிசனமும்,**
மணிவாசகர் நூலகம்,
சிதம்பரம்,
1962.

17. சசிவல்லி. வி. — **பண்டைத்தமிழர் தொழில்கள்,**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை,
1990.

18. சிதம்பரனார். சாமி. — **தொல்காப்பியத் தமிழர்,**
ஸ்டார் பிரசுரம் (வி.உ)
சென்னை -5,
1956.

19. சுப்பிரமணியன். கா. — **சங்ககாலச் சமுதாயம்,**
இரண்டாம் பதிப்பு,
நியூசெஞ்சுரி புக் உறவுஸ் பிரைவேட் லிமிடெட்,
சென்னை - 98,
1987.

20. சுப்பிரமணியன். ச.வே. — **தமிழ் இலக்கியக் கொள்கை - ஓர் அறிமுகம், தொகுதி- 1,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை,
1975.

21. மேற்படி — **தமிழ் இலக்கிய வகையும் வடிவும்,**
தமிழ்ப் பதிப்பகம்,
சென்னை - 96,
1984.

22. சுப்பிரமணியன். ந. — **சங்ககால வாழ்வியல்,**
நியூசெஞ்சுரி புக் உறவுஸ் பிரைவேட்
லிமிடெட்,
சென்னை -98,
1982.

23. செயராமன். நா. — **தமிழ் இலக்கிய நெறிகள்,**
குமரன் பதிப்பகம்,
மதுரை - 20,
1979.

24. ஞான சம்பந்தன். அ.ச. — **இலக்கியக் கலை,**
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 1,
1953.

25. ஞானமூர்த்தி. தா.ஏ. — **இலக்கியத் திறனாய்வியல்,**
மூன்றாம் பதிப்பு,
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை -1,
1990.

26. தமிழண்ணல் (பு.பெ.) — **புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு,**
பதினோராம் பதிப்பு,
மீனாட்சி புத்தக நிலையம்,
1992.

27. தேவநேசன். ஞா. — **ஒப்பியன் மொழிநூல் முதல் மடலம், திராவிடம் (முதற்பாகம்),**
பதிப்பு விவரங்கள் இல்லை.

28. பக்தவத்சலபாரதி. சீ. — **பண்பாட்டு மானிடவியல்,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 1,
1990.

29. பரமசிவன். தொ. — **தெய்வங்களும் சமூக மரபுகளும்,**
நியூ செஞ்சுரி புக் உறவுஸ் (பி)
லிமிடெட்,
சென்னை -98,
1995.

30. பாலச்சந்திரன். சு. — **இலக்கியத் திறனாய்வு,**
அணியகம்,
சென்னை - 30,
1976.

31. பிச்சமுத்து. ந. — **திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்,** மூன்றாம் பதிப்பு, சக்தி வெளியீடு, சென்னை - 5, 1994.

32. பெரிய கருப்பன். இராம. — ***சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கியக் கொள்கைகள்,*** மீனாட்சி புத்தக நிலையம் (வி.உ.), மதுரை - 1, 1975.

33. முத்துச்சாமி. அ. — ***சங்க இலக்கியத்தில் ஆயர்,*** இராணி பதிப்பகம், சென்னை - 14, 1993.

34. வரதராசன். வெ. — **தமிழ்ப்பாணர் வாழ்வும் வரலாறும்,** பண்ணன் பதிப்பகம், சென்னை, 1973.

35. வன்மீகநாதன். கே.சி. — **பண்டைத் தமிழரின் நித்திய வாழ்க்கை,** ஸ்ரீசண்முக அச்சுக்கூடம், தஞ்சாவூர், 1938.

36. வித்தியானந்தன். சு. — ***தமிழர் சால்பு (சங்ககாலம்),*** கல்உறின்னை, தமிழ் மன்றம், கண்டி, 1954.

37. வெள்ளைவாரணன். க. — **தொல்காப்பியம் இலக்கிய வரலாறு,** அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், 1957.

38. வையாபுரிப்பிள்ளை. எஸ். — **இலக்கியச் சிந்தனைகள்,** இரண்டாம் பதிப்பு, பாரி நிலையம், சென்னை, 1956.

### III. *கலைக்களஞ்சியம், அகராதி*

39. .... — **கலைக் களஞ்சியம், தொ. 2.** தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1955.

40. .... கலைக்களஞ்சியம், தொ.4,
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சென்னை,
1956.

41. ..... தமிழ் அகராதி, (Tamil Lexicon)
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை,
1938.

IV. ஆங்கில நூல்கள்

42. Srinivasa Iyengar. P. T. History of the Tamils
(from the earliest times to 600 A. D),
New Delhi,
Asian Educational Services,
1983.

43. Subramanian. N. Sangam Polity,
New York,
Asia Publishing House,
1966.